# சமயமும் வாழ்வியலும்

முதுமுனைவர் ம. சா. அறிவுடைநம்பி
தமிழ்ப் பேராசிரியர்
சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம்
புதுவைப் பல்கலைக்கழகம்
புதுச்சேரி 605 008

**அ. கிரிஜா**
**8, மாரியம்மன் கோயில் தெரு, சலவையாளர் நகர்,**
**இலாசுப்பேட்டை, கிழக்குக் கடற்கரைச்சாலை,**
**புதுச்சேரி 605 008**

# நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் | : | *சமயமும் வாழ்வியலும்* |
| நூலாசிரியர் | : | முதுமுனைவர் ம. சா. அறிவுடைநம்பி |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| பொருள் | : | சமய இலக்கியக் கட்டுரைகள் |
| பதிப்பு | : | தி.ஆ. 2038 ஆவணித் திங்கள் |
| | | முதற்பதிப்பு ஆகஃச்ட் 2007 |
| பக்கம் | : | (vi + 156) 162 |
| படிகள் | : | 1000 |
| தாள் | : | 21.3 கே.ஜி. பப் |
| அளவு | : | 1/8 டெம்மி |
| நூற்கட்டுமானம் | : | அட்டைக்கட்டு |
| விலை | : | உரு |
| மேலட்டை வடிவமைப்பு | : | தனபால், மதுரை, |
| வெளியீடு | : | கருமணி பதிப்பகம், புதுச்சேரி 605 008. |
| கணினி அச்சு | : | அ. சிவமூர்த்தி, புதுச்சேரி 605 008. |
| மெல்லச்சு | : | அமுதச்சகம், மதுரை 625 016. |
| | | (தொலைபேசி 0452-2382029) |

**SAMAYAMUM VAZHVIYALUM**
**By**
**Dr. M.S.ARIVUDAINAMBI,** M.A.,Ph.D.,D.Litt.,

Published by
**A.GIRIJA,**
8, Mariammankoil Street, Salavaiyalar Nagar, Lawspet, E.C.R.,
**PUDHUCHERRY** 605008.
Phone : 0413-6542526 Cell : 9360 327019 email : msanambi@gmail.com

This book is published with the Financial Assistance of Tirumala-Tirupati Devasthanams under their scheme to publish religious books. My sincere thanks to T.T.D.

\- Author

# முன்னுரை

'சமயமும் வாழ்வியலும்' எனும் இந்நூலில் 15 கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. உலக அளவிலும், தேசிய அளவிலும் பல்வேறு கருத்தரங்க மாநாடுகளில் கலந்து படிக்கப்பெற்ற கட்டுரைகள்; புத்தொளிப் பயிற்சி வகுப்புகளில் நிகழ்த்தப்பெற்ற பொழிவுகள்; அறக்கட்டளைப் பொழிவு; அகில இந்திய வானொலியில் நிகழ்த்திய இலக்கியப் பேருரைகள்; திருக்கோயில் திங்கள் இதழ், தமிழ் மாருதம் திங்கள் இதழ், தமிழ்ப் பொழில் திங்கள் இதழ், தினமலர் நாளிதழ் ஆகியவற்றில் வெளிவந்த கட்டுரைகள் இவற்றில் அடங்குவன

நூல் என்பது கற்றுவல்ல புலவன் தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று ஆன்றோர் கூறியதற்கேற்பத் தன் கருத்தை நன்கு தெளிவிக்கும் கருவியாகும். அந்த வகையில் இவ்வுலக மாந்தர்தம் மனக்கோட்டத்தைத் தீர்க்கும் வகையில் இப்பனுவலில் இடம்பெற்றுள்ள கட்டுரைகள் அமைந்து விளங்குவன

ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும் சமயம், சமயம் சார்ந்த பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், பண்பாடு போன்றவை பின்னிப் பிணைந்திருப்பது கண்கூடு. இன்றைய அறிவியல் உலகத்தில் மனிதனின் வாழ்வோடு சமயமும், அரசியலும் இரண்டறக் கலந்தே உள்ளன இரண்டும் இல்லாமல் இவ்வுலகில் வாழ்வது இயலாது என்ற நிலை உருவாகியுள்ளது. கடவுள் இல்லை என்று கூறுகின்றவன்கூட இக்காலச் சூழலில் சமயம் சார்ந்தவற்றில் அவனையும் அறியாமல் ஏதோ ஒருவகையில் தொடர்பு உடையவனாகவே வாழ்ந்து வருகிறான்

மாறிவரும் உலகில் பண்பாட்டைப்பற்றி எடுத்துச் சொல்வது கற்றறிந்தோர் செய்யும் செயலாகும். தனிமனித ஒழுக்கம் என்பது இவ்வுலகில் மிகமிகத் தேவை. இதுபோன்ற பண்பாடு தனிமனித வாழ்வில் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை வலியுறுத்தும் நோக்கத்தில் இந்நூலில் அமைந்துள்ள கட்டுரைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு வெளியிடப்படுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை மனித வாழ்வோடு சமயம் கொண்டுள்ள முறைமையை இக்கட்டுரைகள் வாயிலாக ஒவ்வொருவரும் அறிந்து கொள்ளலாம்.

தொல்காப்பியம் தொடங்கிக் குமரகுருபரர் வரை சைவ சமய இலக்கியங்களில் காணப்படும் சமய உண்மைகள், திருமணம், அன்பின் பெருமை, தொண்டு நெறி முதலானவற்றை வெளிப்படுத்தும் வகையில் கட்டுரைகள் அமைந்துள்ளன. தமிழ் இலக்கிய வரலாற்றில் மராத்தியர்களுக்கென்று தனியானதொரு இடமுண்டு என்பதையும் அவர்கள் ஆற்றிய சமயப்பணிகள், கோயிற்பணிகள் போன்றவற்றையும் இந்நூலில் காணலாம்.

இந்நூல் வெளிவர நிதி உதவியளித்த திருமலை - திருப்பதி தேவத்தானத்தினர்க்கு என் நன்றி.

இந்நூலை விரைவில் கணினி மூலம் வடிவமைத்துக் கொடுத்த திரு அ. சிவமூர்த்திக்கும் இந்நூலை வெளியிட்டுதவிய கருமணி பதிப்பக உரிமையாளர் திருமதி அ. கிரிஜா அவர்களுக்கும் என் நன்றி.

இந்நூலை அச்சிட்டுத் தந்த மதுரை, அமுதச்சகத்தார்க்கு என் நன்றி.

தமிழ்ப்பெருமக்கள் இந்நூலை வாங்கிப் படித்துப் பயன் நல்க வேண்டும் என்பது என் வேண்டுகோள்.

என்னை இப்பணியில் ஈடுபடுத்திய எம்பெருமான் திருவருளை நினைந்து வழுத்துவன்.

வாழ்க தமிழ்!

புதுச்சேரி 8
23-08-2007
தி. ஆ. 2038 ஆவணி 6

தங்கள்
**ம.சா. அறிவுடைநம்பி**

# பொருளடக்கம்

# 1

# சைவ இலக்கியங்கள்*

சைவ சமயம் இவ்வுலகின்கண் மிகமிகப் பழங்காலந் தொட்டே இருந்துவரும் சிறப்புடையது. தமிழர்களின் வழிபாடுகளில் சிவவழிபாடு அல்லது சிவநெறி மிகவும் தொன்மையுடையது. சிந்துவெளி அகழ்வாராய்ச்சியில் காணப்படும் பொருள்களை ஆராய்ந்த அறிஞர்களில் பலரும் சிவநெறியும், சைவமும் மிகப் பழமையானது என்பதை ஒப்புக்கொண்டுள்ளனர். உலகில் பல சமயங்கள் இருப்பினும் தாயுமானவர் 'சைவ சமயமே சமயம்' எனக் கூறுகின்றார். பொதுவாகச் 'சமயம்' என்பது பரம்பொருளை அல்லது மெய்ப்பொருளை அடையச் செய்வது என்றே பொருள்படும். ஆனால் உலகில் தோன்றிய சமயங்கள் பலவும், ஒன்று சொல்வதை மற்றொன்று மறுத்துத் தாம் வேறு ஒன்றைக் கூறும் வாதங்களாகவே அமைந்துவிட்டன. அதனால் 'சமயம்' என்றாலே 'வாதம்' என்றாகி விட்டது. பல்வேறு சான்றுகளின் அடிப்படையில் சிவபிரானை வழிபடும் சைவமே மிகப் பழமையானது என்பதை அறியமுடிகிறது. சிவபிரானுடன் ஒன்றியிருப்பதாகிய ஒரு நிலையை எடுத்துக் கூறும் சமயநெறி 'சைவம்' ஆகும். அதனால்தான் "சைவம் சிவனுடன் சம்பந்தமாவது"[1] என்று திருமூலர் கூறினார் போலும்!

மக்களைப் பாடாது இறைவனை, இறையனுபவத்தைப் பாடுகின்ற பத்திமை இலக்கியங்களுள் சைவ சமயம் சார்ந்த இலக்கியங்களை இக்கட்டுரை ஆராய்கிறது.

### இலக்கியங்கள்

சைவ சமயத்திற்குரிய அடிப்படை நூல்கள் இரண்டு வகைப்படும். அவை :

1. தோத்திரம்
2. சாத்திரம்

---

* 'தமிழின் மேம்பாட்டிற்கான பங்களிப்புகள்' எனும் தலைப்பில் புதுவைப் பல்கலைக்கழகத் தமிழியற்புலத்தில் 17-12-1998 அன்று நடைபெற்ற புத்தொளிப் பயிற்சி வகுப்பில் நிகழ்த்திய பொழிவு.

1. திருமூலர், திருமந்திரம், 1486.

இவை இரண்டும் இறைவனின் அருளைப் பெறுவதற்குக் கூறப்பெறும் நெறிகளாகும். தோத்திரத்தை 'அன்பு நெறி' என்றும் 'இலக்கிய நெறி' என்றும் அழைப்பர். சாத்திரத்தை 'அறிவு நெறி' என்றும் 'இலக்கண நெறி' என்றும் அழைப்பர்.

'அன்பு' எனும் சொல் பக்தி, பற்று, பாசம், நட்பு, காதல் என்று பல நிலைகளில் பல பெயர்களில் வழங்கி வருகிறது. இறைவன்மீது வைக்கும் அன்பு 'பக்தி' என்றழைக்கப்படும். நாட்டின் மீதும் மொழியின் மீதும் வைக்கும் அன்பு 'பற்று' எனப்படும். குழந்தையிடமும் உற்றாரிடமும் வைக்கும் அன்பு 'பாசம்' எனப்படும். நண்பனிடம் வைக்கும் அன்பு 'நட்பு' எனப்படும். பெண் மீது கொள்ளும் அன்பு 'காதல்' எனப்படும்.

> "காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி"[2]
>
> "காதல்செய்து களித்துப்பிதற்றிக் கடிமலரிட் டுனையேத்தி
> ஆதல்செய்யு மடியார்"[3]
>
> "காலமுண் டாகவே காதல்செய் துய்ம்மின்"[4]

என்ற பாடல்களின் மூலம் இறைவன்மீது வைக்கும் அன்பையும் 'காதல்' என்றே முன்னோர் மொழிந்ததை அறியமுடிகிறது.

வடமொழியில் அறிவு நெறி 'ஞான நெறி' என்று கூறப்படுகிறது. இதுவே சாத்திர நெறியாகும்.

## இலக்கியமும் இலக்கணமும்

உயர்ந்தோரின் செம்மையான வாழ்க்கை நெறியே இலக்கியம் எனப்படும். இதை அடிப்படையாகக் கொண்டு எழுதப்படுவதே இலக்கணம் ஆகும். சைவ சமயத்தைப் பொறுத்த அளவில் இலக்கிய நெறியை இருபத்தேழு அருளாளர்களும், இலக்கண நெறியை ஆறு அருளாளர்களும் அருளியுள்ளனர். இலக்கிய நெறியைக் கூறியருளிய சான்றோர் மக்கள் வாழும் இடங்களுக்குச் சென்று பதியுண்மையை அறிவுறுத்தி நல்வழிப்படுத்தினர். இலக்கண நெறியைக் கூறியருளிய ஆன்றோர் தாங்கள் இருந்த இடத்திலிருந்து கொண்டு தம்மை நாடி வந்தவர்களுக்கு உண்மைப் பொருள்களை உபதேசம் செய்தருளினர்.

---

2. _சம்பந்தர் தேவாரம்_ 3.49.1.
3. _சுந்தரர் தேவாரம்_ 7.41.9.
4. மாணிக்கவாசகர், _திருவாசகம்_ 8.36.5.

அன்பு நெறியாம் தோத்திர நெறியும், அறிவு நெறியாம் சாத்திர நெறியும் மண்ணில் நல்லவண்ணம் வாழ்ந்து நிறைவாக வீடுபேறு அடைவதற்குத் தேவை. எனவே நம் முன்னோர்கள் அருளியுள்ள இரண்டு நெறிகளையும் தகுதி நோக்கித் தெரிந்தெடுத்து அதன்வழி நடந்து மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்தும், எண்ணில் நல்ல கதியைப் பெற்று உய்வோம்.

சைவ சமய இலக்கியங்களை,

1. பழந்தமிழ் இலக்கியம்
2. திருமுறை இலக்கியம்
3. சாத்திர இலக்கியம்
4. பிற இலக்கியம்

என்ற பிரிவுகளில் அடக்குவது பொருத்தமுடையதாகும்.

## பழந்தமிழ் இலக்கியம்

தனியொரு இலக்கியமாக உருவாவதற்கு முன்னர்க் காணப்படும் பழந்தமிழ் இலக்கியங்களில் சிவன், சைவம் ஆகிய சொற்கள் காணப்படுகின்றன. சைவ சமய இலக்கியங்களை அறிவதற்குப் பழந்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் சைவ சமயக் குறிப்புகள் அடிப்படையாகும். எனவே இவற்றை இப்பகுதி ஆராய்கிறது.

### தொல்காப்பியம்

காலத்தால் பழமையான இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் சைவ சித்தாந்தக் கொள்கைகள் தொடர்பான குறிப்புகள் காணப்படுகின்றன.[5] மாயோன், சேயோன், கடவுள், கொற்றவை, தெய்வம், கந்தழி எனும் சொற்கள் இறைவன் ஒருவன் உண்டு என்பதற்குச் சான்றுகளாகும். இவற்றுள் 'சேயோன்' எனும் சொல், செந்நிறமுடைய முருகனைக் குறிக்கும் எனினும் சிவபிரானைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். 'கொற்றவை' என்பது உமாதேவியைக் குறிக்கும்.[6]

---

5. தொல்காப்பியம் பொருளதிகாரம், அகத்திணையியல் 5, 20, புறத்திணையியல் 4, 27
6. மறைமலையடிகள், தமிழர் மதம் பக். 113, 115.

சைவ சித்தாந்தத்தில் கூறப்படும் வினைக் கொள்கையைத் தொல்காப்பியர் பல நூற்பாக்களில் கூறியுள்ளார்.[7] 'கடவுள் வழிபாடு' இன்றியமையாதது எனச் சைவ சித்தாந்தம் கூறும் கருத்தைத் தொல்காப்பியர்,

"கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"[8]

என்ற நூற்பாவில் குறிப்பிடுகின்றார். மேலும் முழுமுதற்கடவுளைச் 'சிறந்தது' எனும் சொல்லால் குறிப்பிடுகின்றார்.[9]

**சங்க இலக்கியம்**

சிவபிரானைப் பற்றிய பல குறிப்புகளைப் பத்துப் பாட்டிலும், எட்டுத்தொகையிலும் காணமுடிகின்றன.

பாண்டியன் பெருவழுதியைச் சிவநெறிச் செம்மலென வாழ்த்த முற்பட்ட காரிகிழார்,

"பணியியர் அத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர்நகர் வலம் செயற்கே"[10]

என வாழ்த்துகிறார்.

நீண்டநாள் உயிர் வாழ வைக்கும் நெல்லிக்கனியைத் தான் உண்ணாமல் தமிழைப் பாடிவரும் ஔவையாருக்கு அதியமான் அளித்தான். கனியைப் பெற்ற ஔவையார், "திருப்பாற்கடலைக் கடைந்து அமிழ்தம் பெற்றபோது அதனைத் தான் உண்ணாது நஞ்சினையுண்டு அமரர்க்கு ஈந்து அவர்களின் சாவை ஒழித்த சிவபிரானைப் போல நிலைபெற்று நற்புகழுடன் வாழ்க"[11] என்று வாழ்த்துகின்றார்.

சிவபிரானுக்கு முக்கண்கள் இருப்பதைப் போலவே சேர, சோழ, பாண்டியர்கள் தமிழகத்தை ஆட்சி செய்தனர். முக்கண்களுள் நெற்றிக்கண் மெய்ஞ்ஞானக் கண்ணாகத் திகழ்கிறது. அதைப் போலப்

---

7. *தொல்காப்பியம் பொருளதிகாரம்* களவியல் 2, புறத்திணையியல் 13, மரபியல் 23, *சொல்லதிகாரம்* வேற்றுமை மயங்கியல் 29.
8. *தொல்காப்பியம் பொருளதிகாரம்* புறத்திணையியல் 27.
9. *மேலது* பொருளியல் 90.
10. *புறநானூறு* 6. 17–18.
11. *மேலது* 91.

பாண்டியன் தமிழின் புரவலனாகத் திகழ்ந்தான் என்று மதுரை மருதனிளநாகனார் பாண்டியனைப் புகழ்ந்துரைக்கின்றார்.[12]

"குவிந்த கொத்துகளை உடைய பொலிவற்ற இலைகளை உடைய எருக்க மலராயினும் அன்போடு கூடியவற்றைச் சிவபிரான் ஏற்றுக் கொள்வர்; அதுபோல அறிவற்றவரும் கொண்டு வந்து கொடுக்கும் அன்பு கனிந்த பாடல்களை ஏற்றுப் பரிசில் நல்குவான் பாரி"[13] என்று கபிலர் புகழ்கின்றார்.

கௌணியன் விண்ணந்தாயனார் என்ற புலவர், "நல்லனவாகிய பொருள்களை உலகிற்கு ஆய்ந்து அருள் புரிந்தவன்; நீண்டு நிமிர்ந்த சடை உடையவன்; உலகிற்கெல்லாம் முதல்வன்"[14] என்று சிவபிரானைப் பற்றிக் கூறுகின்றார்.

எட்டுத்தொகை நூல்களுள் அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்களின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சிவபிரானைப் பற்றியே அமைந்துள்ளன.

'கற்றறிந்தார் ஏத்தும் கலி'த்தொகையில் சிவபிரானைப் பற்றிய பல செய்திகளைக் காணமுடிகின்றன.[15] படைப்போன் முதலாகிய விண்ணவர்கள், தம் பகைவர்களாகிய அசுரர்களால் படும் துன்பத்தைப் பொறுக்க முடியாமல் சிவபிரானிடம் சென்று முறையிட்டனர். அவர்களைக் காத்தற்பொருட்டுச் சிவபிரான் சினந்து நோக்கிய அளவில் அவ்வசுரரது முப்புரங்களும் அழிந்தன; தூளாயின. கதிரவனின் வெம்மையால் மலை பிளந்து தூளாகியது. குறிஞ்சி திரிந்த பாலையில் இச்செய்தி உவமையாக உரைக்கப்பட்டுள்ளது.

வள்ளல் ஆய் அண்டிரன் கொடைக்குணமும், சைவ நெறியும் உடையவன். தான் அரிதில் பெற்ற கலிங்க ஆடையை ஆலமர் செல்வனுக்குப் படைத்தான் என்று சிறுபாணாற்றுப்படை பேசுகிறது.[16]

---

12. புறநானூறு 55. 1–6.
13. மேலது 106.
14. மேலது 166.
15. கலித்தொகை பாலைக்கலி 1.1–10.
16. சிறுபாணாற்றுப்படை 96–99.

இவைதவிரச் சடைமுடி உடையவன்,[17] முக்கண்ணன்,[18] நீலமணி மிடற்றன்,[19] முழுமுதற்கடவுள்,[20] மாதொருபாதியன்,[21] கங்கை அணிந்தவன்,[22] அழித்தற் கடவுள்,[23] ஆலமரத்தின் நிழலில் அமர்ந்தவன்,[24] வாளேந்தியவன்[25] போன்ற தொடர்களெல்லாம் சிவபிரானைப் பற்றிக் குறிப்பிடுவனவாக வருகின்றன.

திருமுருகாற்றுப்படையில் செவ்வேள், சிவன் ஆகியோர் பெருமைகள் பேசப்படுகின்றன. இருவரும் செம்மேனியராகவே ஏத்தப்பெறுகின்றனர்.

சைவ சித்தாந்தத்தில் கூறப்படும் இருவினைகள், அவற்றின் பயன்கள், ஊழ் ஆகியன பற்றிச் சங்க இலக்கியங்கள் விரிவாகப் பேசுகின்றன.

"ஒரு வீட்டில் சாக்காட்டுப் பறையும், மற்றொரு வீட்டில் மணமுழவும் ஒலிக்க, ஒருத்தி தன் கணவனோடு இன்பம் நுகர, வேறொருத்தி தன் கணவனையிழந்து கண்ணீர் வடிக்க, இங்ஙனம் இருவேறு நிலைகளுக்குக் காரணனாக இருப்பவன் யாவன்? அவனே 'படைத்தோன்' ஆவன். எனவே வீட்டின்பம் தரும் நல்ல செய்கை களைச் செய்க" என்ற பொருள்படப் பக்குடுக்கை நன்கணியார் பாடியுள்ளார்.[26] இதனால் நல்வினை, தீவினைப் பயன்கள் உண்டு என்பதும், அவற்றிற்கேற்பப் பிறப்பு இறப்பைக் கொடுப்பது இறைவனின் அருட்சக்தி ஆணையே என்பதும் பெறப்படும்.

## திருக்குறள்

திருவள்ளுவர் கூறும் கடவுள் வாழ்த்து, சைவ சித்தாந்தத் தோடு பெரிதும் ஒப்புமை உடையது. முதற்குறளில் அவர் கூறும்

---

17. புறநானூறு 1, கலித்தொகை 38.
18. கலித்தொகை 2.
19. புறநானூறு 1, 55, 56, 91, பரிபாடல் 8, 9.
20. புறநானூறு 166.
21. ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்து.
22. கலித்தொகை, புறநானூறு கடவுள் வாழ்த்து, திருமுருகாற்றுப்படை 93–94.
23. புறநானூறு 56.
24. கலித்தொகை 81, சிறுபாணாற்றுப்படை 96–97, அகநானூறு 181, புறநானூறு 198.
25. கலித்தொகை 103.
26. புறநானூறு 194 உ.வே.சாமிநாதையர் பதிப்பு.

'ஆதிபகவன்' என்பது 'உமை பாகனாம் சிவபெருமானையே குறிக்கும்' என்பது அறிஞர் கருத்தாகும்.[27]

பரிமேலழகர் 'எண்குணத்தான்' என்பதற்குக் கூறும் உரை ஒன்றே அது சைவ சித்தாந்தம் எனும் கொள்கைக்கு அரணாகும் என்பது வெள்ளிடைமலை. அதேபோன்று 'நற்றாள் தொழாஅர்', 'மாணடி சேர்ந்தார்', 'தாள் சேர்ந்தார்' எனும் தொடர்கள் சிவபிரானின் உருவத் திருமேனியையும், அவனை வழிபடுவதால் உண்டாகும் வீடுபேற்றையும் சுட்டியதாகக் கொள்வதில் தவறேது மில்லை.

எனவேதான் ஜி. யூ. போப் ஐயர், பதி, பசு, பாச உண்மை களைத் திருவள்ளுவர் உரைத்துள்ளார் என்று கூறினார்போலும்![28]

'திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமாகும்' என்று அறிஞர் கூறுவதற்கும் சான்றுகள் உண்டு எனலாம்.[29]

### சிலப்பதிகாரம்

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்"[30]

எனச் சிவபிரானுக்கும், முருகனுக்கும் கோயில்கள் இருந்தமையை இளங்கோவடிகள் கூறுகின்றார். சிவபிரானைப் 'பிறவாயாக்கைப் பெரியோன்' என்று ஏத்துகின்றார்.

செங்குட்டுவனின் முன்னிலையில் கூத்தச் சாக்கையர் ஆடிய ஆட்டத்தைக் குறிப்பிட வந்த இளங்கோவடிகள்,

"திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவுஞ்
செங்க ணாயிரந் திருக்குறிப் பருளவுஞ்
செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்

27. ச. சாம்பசிவனார், 'வள்ளுவர் கூறும் கடவுட்கொள்கை', திருக்கோயில் இதழ், சென்னை. நவம்பர் 1974.
28. "And the Rev. Dr. Pope in his short paper on Ethics of Kural holds that Thiruvalluvar bases his ethics on the grand truths of Tripadartha, Pati, Pasu and Pasa"
- J.M. Nalluswami Pillai, *Studies in Saiva Siddhanta*, p. 147.
29. க. வச்சிரவேல் முதலியார் திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே என்று ஒரு நூலை எழுதியுள்ளார்.
30. இளங்கோவடிகள், *சிலப்பதிகாரம்*, இந்திரவிழவூரெடுத்த காதை 169–170.

பாடகம் பதையாது சூடகந் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை யசையாது
வார்குழை யாடாது மணிக்குழ லவிழா
துமையவ ளொருதிற னாக வோங்கிய
விமையவ னாடிய கொட்டிச் சேதும்"[31]

எனும் வரிகளில் இறைவன் பெண்ணொரு கூறனாய் விளங்குவதைக் குறிப்பிட்டுள்ளார்.

சமணர்களும் தங்களது உயரிய நிலையைக் கூறும்பொழுது 'சிவகதி'[32] எனவும், அதன் தலைவனைக் கூறும்பொழுது 'சிவகதி நாயகன்'[33] எனவும் கூறியுள்ளனர்.

சிவபிரானைத் தலைவராகக் கொண்டு வாழும் திருநெறி யாளர்கள் கனவிலும் வேறு கடவுளரைத் தலைவராகக் கொள்ளார்.

"செங்குட்டுவன் சிவபிரானின் செவ்வையான திருவடிகளை வெற்றி பொருந்திய வஞ்சிமாலையுடன் தன் தலையிலே சூடிக் கொண்டான்; யாவருக்கும் வணங்காத தன் திருமுடியால் சிவன் சேவடிகளைத் தலைமேற்கொண்டு வணங்கி அவன் கோயிலை வலம் வந்தான்; திருமால் திருக்கொடைப் பொருளைப் பெற்றுத் தோண் மிசைக் கொண்டான்"[34] என்று சிலம்பில் கூறியுள்ளதைக் காண முடிகின்றது.

திருநெறியாளர்களால் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதும் திருவைந்தெழுத்து மந்திரத்தைப் பற்றி முதன்முதலில் குறிப்பிடும் தமிழ் நூல் சிலப்பதிகாரமாகும். இவ்வைந்தெழுத்து 'மந்திரம்' என்றும், அது வேதத்தில் வருவதாகவும் இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.[35]

திருப்பள்ளியெழுச்சி முரசம் சிவபெருமான் திருக்கோயிலி லும், மன்னவன் திருக்கோயிலிலும் மட்டுமே முழங்குமென்பதை,

"அருந்தெறற் கடவு ளகன்பெருங் கோயிலும்
பெரும்பெயர் மன்னவன் பேரிசைக் கோயிலும்

31. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், நடுகற் காதை 67–75.
32. மேலது நாடுகாண் காதை 180.
33. மேலது நாடுகாண் காதை 186.
34. மேலது கால்கோட் காதை 54–67.
35. மேலது காடுகாண் காதை 128–130.

பால்கெழு சிறப்பிற் பல்லியஞ் சிறந்த
காலை முரசக் கனைகுர லோதையும்"[36]

எனும் வரிகளில் இளங்கோவடிகள் இயம்பியுள்ளார்.

சைவர்கள் அணியும் சிவசின்னங்களுள் ஒன்றாகிய திருவெண்ணீற்றை அணிவது குறித்துச் 'சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர்'[37] எனும் வரியில் இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். சிவபிரான் திருக்கயிலையாகிய வெள்ளி மலையில் வீற்றிருந்து அருளிய காட்சியை,

"இமையச் சிமையத் திருங்குயி லாலுவத்
துமையொரு பாகத் தொருவனை வணங்கி"[38]

என்கின்றார்.

**மணிமேகலை**

பௌத்த சமயக் கருத்தை எடுத்துரைக்க வந்த மணிமேகலையில் புகார் நகரில் இருக்கின்ற பல கோயில்களைப் பற்றிச் சாத்தனார் கூறுகின்றார். இந்நகரில் வாழும் மக்கள் 'நுதல்விழி நாட்டத்து இறையோனா'கிய சிவபிரானையே முதன்மையாகக் கொண்டனர் எனக் கூறுவதைக் காணமுடிகிறது.[39]

மணிமேகலை சைவவாதி ஒருவனை நோக்கி, 'நின் தெய்வம் எத்தகையது?' என்று வினவினாள். அதற்கு அவன் பின்வருமாறு விடை யிறுக்கின்றான்.

"இருசுட ரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையு முயிரும் யாக்கையுமாய்க்
கட்டிநிற் போனுங் கலையுருவி னோனும்
படைத்து விளையாடும் பண்பி னோனுந்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனுந்
தன்னில் வேறு தானொன் றிலோனு
மன்னோ னிறைவ னாகுமென் றுரைத்தனன்"[40]

---

36. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் புறஞ்சேரி யிறுத்த காதை 137–140.
37. மேலது கால்கோட்காதை 225.
38. மேலது நடுகற்காதை 102–103.
39. சாத்தனார், மணிமேகலை விழாவறை காதை 54.
40. மேலது சமயக்கணக்கர்தந்திறம் கேட்ட காதை 89–95.

இதில் இறைவன் எட்டிடங்களிலும், உயிரும் உடலும் போன்று கலப்பால் ஒன்றாய்ப் பொருட்டன்மையால் கண்ணும் கதிரவனும் போன்று வேறாய்ப் படைப்பு முறையில் நிற்பன்; அழித்துத் துயர் தீர்க்கும் முறையில் இவற்றுடன் உயிர்க்கு உயிராதல் தன்மையால் கண்ணொளியும் கதிரொளியும் அறிவொளியும் போன்று உடனுமாய் நிற்பன் என்பது காணப்பெறும்.

இவையே புணர்ப்புநிலை என்கின்ற அத்துவித நிலையாகும். மேலும் இறைவனின் அறிவுருவும் படைத்தல் அழித்தலாகிய தொழிலும் ஒப்பின்மையும், நிறைவும் ஆகிய பெருந்தன்மைகளும் காணப்பெறுகின்றன. ஐம்பெரும் தொழில்களும் படைத்தலாகிய முதலையும், அழித்தலாகிய இறுதியையும் கூறினமையாலே இடைக்கண் நின்ற காத்தல், மறைத்தல், அருளல் எனும் மூன்றும் அதன்கண் அடங்கும் என்பது விளங்கும். தோற்றத்தையும் அழிவையும் செய்கின்றவன் எவனோ அவனே இறைவனாவான். இதனையே,

> "அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்
> தோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதாம்
> அந்த மாதி யென்மனார் புலவர்"[41]

எனும் நூற்பாவில் மெய்கண்டார் கூறியுள்ளார்.

தமிழ் இலக்கிய உலகில் மணிமேகலையில் சாத்தனாரே 'சைவம்' எனும் சொல்லை முதன்முதல் கையாண்டதை அறிய முடிகிறது.

இயற்கையின் பின்னணியில் இறைவனைக் கண்ட சங்க கால மக்கள் சிவனைச் செம்மேனியனாகவும், அறிவுக் கடவுளாகவும் கொண்டனர். பொதுவாகப் பழந்தமிழ் இலக்கியங்களைப் பொறுத்த அளவில் சைவநெறி எல்லாச் சமயங்களிலும் காணப்பெறும் நெறிகளை உள்ளடக்கி ஒரு பொதுவான முடிந்த முடிபைத் தருவதைக் காணமுடிகிறது. எனவேதான்,

> "வினைக்கோட்பாடும், உயிர்கள் பல பிறவிகளெடுக்கும்
> கோட்பாடும், யோகநெறியும், சிவன், உமை, திருமால்
> பற்றிய சமயத் தத்துவக் கோட்பாடுகளும், வேதங்கள் கூறும்
> ஓமவிதிகளுக்கு மாறாக நிகழும் வழிபாட்டு முறைகளும்,

---

41. மெய்கண்டார், *சிவஞான போதம்* நூற்பா 1.

இந்து சமயத்தில் அதிகமாகக் காணப்பெறும் சமயச் சிந்தனைகளும் ஆரியர் அல்லாதவருடையவை"[42]

என்று சுநித்குமார் சட்டர்ஜி கூறுவதிலிருந்து சைவ சமய நெறியே வேத ஆகம நெறிகளுக்குக் கருவூலம் என்பதைத் தெளியலாம். மேலும்,

"சிவனை மிகப்பெரிய யோகியாகவும், பசுபதியாகவும் கொண்டு அம்மை அப்பனாகவும் போற்றும் கோட்பாட்டினை முதலில் கொண்டவர் திராவிடரே"[43]

என்று அவர் கூறுவது 'சைவம்' தமிழரின் சொத்து என்பதை வலியுறுத்தவேயாகும்.

## திருமுறை இலக்கியம்

திருமுறைகள் பன்னிரண்டாகும். அவற்றைப் பாடியவர்கள் மொத்தம் 27 பேராவர். மொத்தப் பாடல்கள் 18,357 ஆகும் இத்திருமுறைகள் 'முதல் திருமுறை, இரண்டாந் திருமுறை' என்று எண்ணிக்கையின் பெயர் வைத்து வழங்கப்படும். 'முறை' எனும் சொல் உறவு, ஒழுக்கம், இடைச்சொல், ஒழுங்கு, கிராமம், குணம், தரம், பழமை, புத்தகம், முறைமை, முறையீடு, வரிசை எனப் பன்னிரண்டு பெயர்களைக் கொண்டது.[44] 'திரு' எனும் சொல் பல்வேறுபட்ட, பலவாறு விரிந்த பொருள்களைக் கொண்டது. அது சிவனையும், அவன் அருளையும் அவ்வருளால் கிடைக்கும் இன்ப நிலையையும் குறிக்கும். இவை மூன்றும் வெவ்வேறு நிலையினவாகத் தோன்றினும் ஆன்மா அவற்றைப் பெறும்பொழுது ஒன்றேயாகத் திகழ்கின்றன.

இராசராச சோழனின் வேண்டுகோட்கிணங்க நம்பியாண்டார் நம்பி சைவ சமய நூல்களை எல்லாம் 11 திருமுறைகளாக வகுத்தார். பின்னர்ச் சேக்கிழாருடைய திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாவதாகச் சேர்க்கப்பட்டது.

இப்பன்னிரு திருமுறைகளையும் ஓதுகின்றவர் 'ஓதுவார்', 'பண்டாரங்கள்' என்று சொல்லப்பெறுவர். இத்திருமுறைகள் 'பதி நூல்கள்' என்று சொல்லப்படும்.[45]

---

42. S.K. Chatterji, *Indo-Aryan and Hindu*, pp. 33-34.
43. *Ibid.*, p. 47.
44. அ. சிதம்பரனார், 'அடங்கன்முறை ஆராய்ச்சி', *காரைக்கால் தமிழ்ச் சங்க வெள்ளிவிழா மலர்*, ப. 347.
45. சுவாமிநாத பண்டிதர் (ப.ஆ.), *தேவாரத் திருமுறை* பக். 39, 43.

## தேவாரத் திருப்பதிகங்கள்

*நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர் ஆகிய மூவரும் எல்லாம் வல்ல இறைவனை இன்னிசையால் பரவிப் போற்றிய செந்தமிழ்ப் பாக்களே 'தேவாரம்' ஆகும். 'அடங்கன்முறை' எனவும் அழைக்கப்பெறும்.*

*திருஞானசம்பந்தர் அருளிய பாக்கள் 'திருக்கடைக்காப்பு' என்றும், திருநாவுக்கரசர் அருளிய பாக்களே 'தேவாரம்' என்றும், சுந்தரர் அருளிய பாக்கள் 'திருப்பாட்டு' என்றும் முதலில் அழைக்கப் பட்டன. இம்மூவரருளிய பாக்களையும் 'திருப்பாட்டு' எனும் பெயரால் நச்சினார்க்கினியர் அழைக்கின்றார்.*[46] *ஆனால் சேக்கிழார் இம்மூவர் பாக்களைத் 'தேவாரம்' என்ற பெயரால் குறிப்பிடவில்லை.*[47] *இடைக்காலச் சோழர் கல்வெட்டுகளில் தேவாரம் ஓதுவது 'திருப்பதிகம் விண்ணப்பம் செய்தல்' எனும் பொருளில் குறிப்பிடப் பட்டுள்ளது.*[48]

*மூவரருளிய பாக்களைத் 'தேவாரம்' என்று இரட்டைப் புலவர்களும்,*[49] *சைவ எல்லப்ப நாவலரும்*[50] *கூறியுள்ளனர். தேவாரப் பதிகங்கள் பண்முறையில் பாடப்பட்டுள்ளன. மொத்தம் 23 பண்கள் கூறப்பட்டுள்ளன. தாள இசைக்குப் பொருந்தப் பாடப்பட்டுள்ளன.*

*'தேவாரம்' என்ற சொல்லைப் பலவாறாகப் பிரித்துப் பல்வேறு பொருள்களை ஆன்றோர் கூறுவதுண்டு.*

## சம்பந்தர் அருளிய தேவாரம்

*சீர்காழியில் அந்தணர் மரபில் சிவபாதவிருதயருக்கும் பகவதியாருக்கும் திருமகனாகச் சம்பந்தர் அவதரித்தார். மூன்று வயதாயிருக்கும்பொழுது சிவபிரானின் திருவருளால் உமையம்மை யாரின் திருமுலைப்பாலருந்தித் 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் பாடலைப் பாடினார். சிவனுறையும் பல தலங்களுக்கும் சென்று பதிகம் பாடி மக்களிடையே சைவ சமய எழுச்சியூட்டினார்.*

---

46. *தொல்காப்பியம், பொருளதிகாரம்* செய்யுளியல், நச்சினார்க்கினியர் உரை, நூற்பா 149.
47. அ.மா. பரிமணம், *அப்பர் தேவார ஆய்வு* வெளியிடப்படாத முனைவர் பட்ட ஆய்வு, மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, ப. 201.
48. *South Indian Inscriptions*, Volume II, No. 65.
49. *ஏகாம்பரநாதருலா*, கண்ணி 78.
50. சைவ எல்லப்ப நாவலர், *திருவருணைக் கலம்பகம்*

இன்னிசைப் பாடல்களைப் பாடி இறைவன் திருவருளால் பல அற்புதச் செயல்களைச் செய்து தம் பதினாறாம் வயதில் வைகாசி மூல நன்னாளில் திருநல்லூர்ப் பெருமணம் எனும் தலத்தில் திருமண நாளன்று மணமகளுடன் திருக்கோயிலினுட் சென்று சிவனருள் சோதியில் கலந்தார். இவர் வாழ்ந்த காலம் கி.பி. 7ஆம் நூற்றாண்டாகும்.

இவரருளிய பாக்கள் முதல் மூன்று திருமுறைகளாக இடம்பெற்றன. இவர் இசைத்துதவிய 23 பண்களின் அடிப்படையில் 4,146 பாடல்களும் 383 பதிகங்களாக அமைந்துள்ளன. இவரால் பாடப்பெற்ற திருத்தலங்கள் 220 ஆகும்.

சம்பந்தர் தேவாரத்தில் பொதுவாகச் சில தன்மைகள் காணப் பெறுவதுண்டு. எடுத்துக்கொண்ட தலத்தின் நீர் வளத்தையும், நில வளத்தையும், மற்றுமுள்ள இயற்கை, செயற்கை வளங்களையும் அழகுணர்ச்சியோடும் இசைப்போக்கோடும் வருணிப்பார். அடுத்து, ஏழாவது பாடலில் திருத்தலத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவனின் இயல்பையும் பெருமையையும் கூறுவார். எட்டாவது பாடலில் இராவணனைப் பற்றிய குறிப்பு இருக்கும் ஒன்பதாவது பாடலில் அரியும் அயனும் சிவபிரானது திருவடி, திருமுடியினைக் காணவியலாமல் கர்வம் ஒழிந்து இறைவனை வழிபட்டு நிற்கும் இயல்பு இயம்பப்படும். பத்தாவது பாடலில் புறச்சமயத்தினராகிய புத்தர்களையோ அல்லது சமணர்களையோ இழித்தும் பழித்தும் கண்டனம் செய்வது காணப்படும். இறுதியாகத் தம்முடைய பாக்களைப் பாடியவர் வினை நீங்கி வீடுபேறு எய்துவர் என்று தம் பாட்டையே தாம் புகழ்வர். இதனைப் 'பதிகப்பலன்' கூறும் பாடலாகச் சான்றோர் கொள்வர். மேலும் இதனை 'முத்திரகவி' என்றும், 'திருக்கடைக்காப்பு' என்றும் கூறுவதுண்டு. இதனால்தான் 'சம்பந்தன் தன்னைப் பாடினான்' என்று சிவபிரான் சொன்னதாக ஒரு பழமொழி எழுந்தது போலும்!

சேக்கிழார் அருளிய பெரியபுராணத்தில் சம்பந்தருக்கு மிகப் பெரும்பான்மையான பாடல்களைப் பாடியுள்ளார். அதனால் 'பிள்ளை பாதி புராணம் பாதி' என்ற மொழியும் தோன்றியது ஆளுடைய பிள்ளையார் என்பதும் இவருக்குரிய பெயராக அழைக்கப் பெறுகிறது. உமையம்மையாரின் திருமுலைப்பால் அருந்திய காரணத்தினால் இவரை இவ்வாறு அழைக்கின்றனர். மேலும் முருகப்பெருமானின் திருவவதாரமாகவும் இவரை இலக்கிய உலகில் அழைத்து வருகின்றனர்.

## நாவுக்கரசர் அருளிய தேவாரம்

திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் வேளாளர் மரபில் குறுக்கையர் குடியில் புகழனாருக்கும் மாதினியாருக்கும் திருமகளாய்த் திலகவதியார் அவதரித்தார். அவரின் தம்பி மருணீக்கியாராய்த் திருவவதாரம் செய்து நம்பர் அருள் இலாமையினால் சமண சமயம் சார்ந்து தருமசேனரானார். பின் சூலைநோயால் வருந்தி, திலகவதியார் அளித்த திருநீற்றை அணிந்து, திருவருள் பெற்றுக் 'கூற்றாயினவாறு' எனும் பதிகத்தைத் திருவதிகை வீரட்டானத்தில் பாடி, திருநாவுக்கரசரானார். திருத்தலங்கள் பலவற்றுக்கும் சென்று திருப்பதிகங்கள் பல பாடி, தம் 81ஆம் அகவையில் திருப்புகலூரில் சித்திரைச் சதயத்திருநாளில் அண்ணலார் சேவடிக்கீழ் அமர்ந்தார். இச்சான்றோர் அடிமைநெறியாம் 'தாசமார்க்க' வழியில் சரியைத் தொண்டியற்றிச் சாலோக முத்தி அடைந்தார்.

இவரருளிய 3,064 பாக்களும் 312 திருப்பதிகங்களாக 4, 5, 6 ஆகிய திருமுறைகளாக ஆன்றோரால் வகுக்கப்பட்டுள்ளன. சம்பந்தர், சுந்தரர் ஆகியோர் அருளிய தேவாரத்தில் காணப்பெறாத இயற்றமிழ்ச் செய்யுள் இனங்களான திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் ஆகியன மிகவும் சிறப்பாக இவரருளிய தேவாரத்தில் அமைந்துள்ளன. இவர் பாக்களில் கட்டளை அமைத்துப் பண் வகுக்கப் பட்டுள்ள இசைப்பதிகங்கள் நான்காம் திருமுறையிலும், திருக்குறுந் தொகைப் பதிகங்கள் ஐந்தாம் திருமுறையிலும், திருத்தாண்டகங்கள் ஆறாம் திருமுறையிலுமாகத் தொகுக்கப்பட்டுள்ளன. ஐந்து, ஆறாம் திருமுறைப் பதிகங்கட்குப் பண் வகுக்கப்படவில்லையாயினும் அவ்விரு திருமுறைகளும் தனித்தனி ஒரு கட்டளை பெற்றிருப்பதாகக் கூறப் படுவதனால் அவற்றையும் இயற்றமிழ் யாப்பிலமைந்த இசைப் பனுவல்களாகவே கொள்ளல் வேண்டும்.

அப்பர் 125 தலங்களுக்குப் பதிகம் பாடியுள்ளார். 37 பொதுப் பதிகங்கள் உள்ளன.

பதிகந்தோறும் இராவணன் தொடர்பான செய்திகள் காணப்படுகின்றன. இராவணனுக்கு இறைவன் அருள் புரிந்த செய்தியைக் கூறிப் பதிகத்தை அப்பர் நிறைவு செய்கின்றார். எனவே இராவணன் பாடலை 'முடிக்கும் பாடல்' என்று கூறுவது பொருந்தும்.

சமுதாயத்திற்கு இனிய முறையில் அறிவுறுத்தும் பாங்கில் அப்பர் அருளிய பாக்கள் அமைந்துள்ளன. கொச்சக ஒருபோகு, தாண்டகம், எழுத்து வருக்க மோனை, பழமொழி யாப்பு, குறுந்தொகை · கலிவிருத்தம், திருவங்கமாலை ஆகிய புதிய இலக்கிய மரபுகளைத்

தோற்றுவித்த பெருமை அப்பருக்கு உண்டு.

## சுந்தரர் அருளிய தேவாரம்

திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூர் எனும் ஊரில் சைவ அந்தணர் மரபில் வாழ்ந்து வந்த சடையனாருக்கும், இசைஞானி யாருக்கும் மகனாகச் சுந்தரர் தோன்றினார். நரசிங்கமுனையரையரால் வளர்க்கப் பெற்றுத் திருமணம் செய்யும் வேளையில் சிவபெருமானால் ஓலை காட்டித் தடுத்தாட்கொள்ளப் பெற்றார். திருவெண்ணெய் நல்லூரில் 'பித்தா பிறை சூடி' எனும் பதிகம் பாடிச் சகமார்க்க வழியில் நின்று, திருவாரூர்ப் பரவையாரையும், திருவொற்றியூர்ச் சங்கிலி யாரையும் மணந்தார். பரமனைப் பல தலங்களுக்கும் சென்று பதிகம் பாடிப் பரவி, தம் 18ஆம் வயதில் இறைவன் எழுந்தருளியுள்ள திருக் கயிலை சென்று சேர்ந்தார்.

திருநாவலூரர், நம்பியாரூரர், வன்தொண்டர், தம்பிரான் தோழர் ஆகிய பெயர்களால் சுட்டப்பெறும் சுந்தரர் அருளிய 1,026 பாக்கள் ஏழாம் திருமுறையாக வைக்கப்பட்டன. இவர் பாக்கள் சந்தமிகு பாக்களாகும். இதனை அவரே 'சந்தமிகு இத்தண் தமிழ் மாலைகள்'[51] என்பார். நிலையாமைக் கருத்துகள் இவர் பாக்களில் அதிகமாக இருப்பதைக் காணமுடிகின்றன. இறைவனைத் தோழமை நெறியில் நின்று பாடினார். இவர் பாடிச் சிறப்பித்த திருப்பதிகள் 84 ஆகும். இவரருளிய பதிகங்கள் இந்தளம் முதல் பஞ்சமம் ஈறாக 17 பண்களுக்குரியனவாகக் காணப்படுகின்றன.

பெரும்பான்மையான பதிகங்கள் சுந்தரரின் வாழ்க்கை வரலாறாக அமைந்திருக்கின்றன. இறைவன் தடுத்தாட்கொண்டது முதல் கயிலைக்கு அழைத்துக் கொண்டது வரை அவர்தம் வாழ்வில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளும் தொடர்ந்து பதிகங்களில் காணப்படு கின்றன.

மூவரருளிய பாடல்களில் காணப்படும் சொல்நயம், பொருள்நயம் போன்றவற்றைக் கண்ட புலவர்,

> "வாக்கிற் கருணைகிரி வாதவூரர் கனிவில்
> தாக்கில் திருஞான சம்பந்தர் - நோக்கிற்கு
> நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
> சொற்குறுதிக் கப்பரெனச் சொல்"[52]

---

51 *சுந்தரர் தேவாரம்* 7.4.10.

என்று சிறப்பித்துக் கூறுகின்றார்.

## மாணிக்கவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாரும்

திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாந்திருமுறையாக வைத்து எண்ணப்படுகிறது. திருவாசகம் எளிமையும் இனிமையும் ஆழமும் மிக்கது. என்பினையும் உருக்கி ஈடில்லா இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தும் ஆற்றலுடையது. இத்தகைய தெய்வநூல் சிவபுராணம் முதலிய 51 பதிகங்களில் 656 பாக்களைக் கொண்டது. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா முதலான பாவகைகளைக் கொண்டது.

திருவாசகத்தின் தலைப்புகள் பெரும்பாலும் அவ்வப் பகுதியில் வரும் சொல்லால் அமைந்துள்ளது. அவற்றுள் திருவெம் பாவை, திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல் ஆகிய ஒன்பதும் மகளிர் விளையாட்டாக அமைந்துள்ளன.

மணிவாசகரே திருச்சிற்றம்பலக் கோவையார் எனும் திருக் கோவையாரையும் இயற்றியுள்ளார். இயற்கைப் புணர்ச்சி முதலாகப் பரத்தையிற் பிரிவு ஈறாக 25 துறைகளால் 400 பாடல்களைக் கொண்டுள்ளது. தமிழ் இலக்கிய வகைகளுள் ஒன்றான கோவை நூல் வகையில் உள்ளவற்றில் வடிவு குன்றிச் சிதைவுறாமல் இருக்கும் இந்நூலே தொன்மை வாய்ந்ததாகும்.

## திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகியோரால் அருளப்பெற்ற 301 பாடல்கள் 29 பதிகங்களாக அமையப் பெற்றுள்ளன. இவை ஒன்பதாம் திருமுறையாகும். சிவபெருமானைத் தலைவராகவும் ஆன்மாவைத் தலைவியாகவும் கொண்டு அமைந்த அகத்துறைப் பாக்கள் அதிகமாக அமைந்துள்ளன. கருவூர்த்தேவரே மிக அதிகமான பாடல்களையும், மிக அதிகமான ஊர்களையும் பாடியுள்ளார். பஞ்சமம், புறநீர்மை, காந்தாரம், நட்டராகம், இந்தளம், சாளரபாணி ஆகிய ஆறு பண்களில் பாடல்கள் அமைந்துள்ளன. 19.

---

52. பெருந்தொகை 1802.

பஞ்சமப் பண்ணில் மட்டும் 21 பதிகங்கள் அமைந்துள்ளன. சாளரபாணிப் பண் ஏனைய திருமுறைகளில் காணப்படவில்லை.

**திருமூலரின் திருமந்திரம்**

திருமூலர் அருளிய திருமந்திரம் பத்தாம் திருமுறையாகும். இது சாத்திரமாகவும், தோத்திரமாகவும் போற்றப்படுகிறது. இந்நூல் ஒன்பது பகுதிகளாக உள்ளது. ஒவ்வொரு பகுதியும் ஒரு தந்திரம் எனப்படும். முதல் தந்திரத்தில் யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை, கொல்லாமை முதலான அறத்தைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இரண்டாம் தந்திரத்தில் சிவபுராணக் கதைகள், ஐந்தொழில்கள் முதலானவை காணப்படுகின்றன. புராண வரலாறுகள் இறைவனுடைய அளவிலாற்றலை உணர்த்தும் கதைகளாக மட்டும் போற்றப்பெற்ற சூழலில் அவை இறைவனுடைய கருணையைக் காட்டுகின்றன. மூன்றாம் தந்திரம் முழுவதும் யோகத்தைப் பற்றியது. நான்காம் தந்திரம் முழுவதும் மந்திர சாத்திரம் பற்றியது. திருஅம்பலச் சக்கரம், திரிபுர சக்கரம் போன்றவை பற்றிய விவரங்கள் தரப்பட்டுள்ளன. ஐந்தாம் தந்திரத்தில் சரியை முதலான நால்வகை நெறிகள், பலன்கள் போன்றவை காணப்படுகின்றன புறச்சமயங்கள் கண்டிக்கப்படுகின்றன. உட்சமயங்கள் ஏற்கப் படுகின்றன.

ஆறாம் தந்திரத்தில் சிவகுரு தரிசனம், திருவடிப்பேறு, திருநீற்றின் பெருமை போன்றவை கூறப்படுகின்றன. ஏழாம் தந்திரத்தில் ஆறு ஆதாரங்கள், சிவஞானி உண்ணுமுறை, மாகேசுவர பூசை, அடியார் பெருமை, ஐம்புலன்களை அடக்கும் முறை, கூடா ஒழுக்கம் முதலானவை கூறப்படுகின்றன. எட்டாம் தந்திரத்தில் 11 அவத்தைகள், ஞானோதயம் முதலியன கூறப்படுகின்றன. பதி, பசு, பாச விளக்கம், தத்துவ விளக்கம், மூவகைக் குற்றங்கள், முக்கரணங்கள், புறங்கூறாமை, உண்மை பேசல், ஆசையை ஒழித்தல் முதலானவை கூறப்படுகின்றன. ஒன்பதாம் தந்திரத்தில் குரு, குருமடம், குரு தரிசனம், தூல சூக்கும அதிசூக்கும பஞ்சாட்சரங்கள் கூறப்படுகின்றன. சிவானந்த நடனம், சுந்தர நடனம், பொன்னம்பல நடனம், பொன் தில்லை நடனம், ஆச்சரிய நடனம் விளக்கப்படுகின்றன.

திருமூலர் அருளிய திருமந்திரமே சைவ சித்தாந்த முதல் நூலாகும். திருமூலருக்கு முன் தமிழ் நாட்டில் தமிழில் சைவ சித்தாந்த நூல் இல்லை. தேவார மூவருக்கும் அவர்களால் பரப்பப்பட்ட சைவ சமயத்திற்கும் அடிப்படை நூலாகத் திருமந்திரம் திகழ்கிறது. பின்னர் எழுந்த சைவ சித்தாந்த நூல்களுக்கும் இந்நூலே அடிப்படையாக

இருந்தது.

**பதினோராம் திருமுறை**

*திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர் கோன், நக்கீரதேவர், கல்லாடதேவர், கபிலதேவர், பரண தேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், திருவெண்காடர், நம்பியாண்டார் நம்பி, சேரமான் பெருமாள் நாயனார் ஆகிய பன்னிரண்டு அருளாளர்களால் அருளப்பெற்ற 40 சிற்றிலக் கியங்களின் தொகுப்பே பதினோராம் திருமுறையாகும். இவற்றுள் 25 நூல்கள் சிவபெருமானைப் போற்றுகின்றன; 1 நூல் முருகனைப் போற்றுகிறது; 3 நூல்கள் விநாயகரைப் போற்றுகின்றன; 11 நூல்கள் சிவபிரான் அடியவர்களைப் போற்றுகின்றன.*

*இச்சிற்றிலக்கியங்கள் பின்வரும் இலக்கிய வகையில் அமைந்திருப்பதைக் காணமுடிகின்றன.*

| | | |
|---|---|---|
| 1. | அந்தாதி | 8 |
| 2. | ஆற்றுப்படை | 1 |
| 3. | இரட்டை மணிமாலை | 4 |
| 4. | உலா | 2 |
| 5. | ஊர் வெண்பா | 1 |
| 6. | எண் செய்யுள் (எட்டு, எழுபது, முப்பது) | 3 |
| 7. | எழுகூற்றிருக்கை | 1 |
| 8. | ஏகாதசமாலை | 1 |
| 9. | கலம்பகம் | 1 |
| 10. | கலிவெண்பா | 1 |
| 11. | சீட்டுக்கவி | 1 |
| 12. | திருத்தொகை | 1 |
| 13. | தேவபாணி | 1 |
| 14. | நான்மணிமாலை | 1 |
| 15. | பதிகம் | 1 |
| 16. | பிரசாதம் | 1 |
| 17. | மறம் | 2 |
| 18. | மும்மணிக்கோவை | 7 |

விருத்தம் 2

இப்பனுவல்களைப் பாடியருளியவர்கள் பல்வேறு காலங்களில் வாழ்ந்தவர்களாவர். காலத்தால் சம்பந்தருக்கும் முற்பட்ட காரைக்காலம்மையாரின் பாடல்களிலிருந்து காலத்தால் பிற்பட்ட நம்பியாண்டார் நம்பி பாடல்கள் வரை இத்திருமுறையில் இடம்பெற்றுள்ளன.

### சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம்

சேக்கிழார் அருளிய 'திருத்தொண்டர் புராணம் என்ற பெரியபுராணம்' இரண்டு காண்டங்கள் கொண்டது. 13 சருக்கங்கள் உடையது. 4,253 செய்யுட்களால் இயன்றது. நம்பியாரூரரைத் தலைவராகக் கொண்டு பாடப்பெற்ற இந்நூல் காப்பிய இலக்கியத்தைச் சேர்ந்தது.

பெரியபுராணத்தில் பேசப்பெறும் சிவனடியார்கள், பல்வேறு ஊரினர்; பல்வேறு காலத்தினர்; பல்வேறு மரபினர் அவருள் ஆடவர் உண்டு; மகளிர் உண்டு; அரசர் உண்டு; எளியரும் உண்டு. ஆனால் இவர்கள் அனைவரும் சிவபிரானையே முழுமுதற் பரம்பொருளாகக் கொண்டு ஒழுகினர். தாம் எடுத்த கொள்கையி லிருந்து எத்துணை இடர்ப்பாடுகள் நேர்ந்தபோதும் பிறழா மாண்பினர். இவ் அடியார் பெருமை கூறும் இந்நூலுக்குச் சேக்கிழார் இட்ட பெயர் 'திருத்தொண்டர் புராணம்' ஆகும். ஆயின் இன்று 'பெரியபுராணம்' என்பதே பெருவழக்காயுள்ளது. திருவள்ளுவர், "ஒத்த பிறப்பினராய மக்கள் இனத்தாருள், மனத்தைத் தீயநெறியி னின்றும் விலக்கி நன்னெறியிற் செலுத்துதலாகிய அரிய செயல்களைச் செய்வோரே பெரியர்; அவ்வாறு மனத்தை ஒருநெறிப்படுத்தும் அறிவு வன்மையின்றி மனம் போனபடி எளிய செயல்களைச் செய்வோர் சிறியர்" எனும் பொருள்பட,

> "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
> செயற்கரிய செய்கலா தார்"[53]

என்று கூறினார். திருத்தொண்டர் புராணத்துள் பேசப்படும் அடியார் அனைவரும் இக்குறளுரைக்கேற்ப வாழ்ந்து காட்டிய அருளாளர்கள்; செயற்கரிய செய்த பெரியவர்கள். எனவேதான் இது பெரியபுராணம் எனப் புகழப்படுவதாயிற்று.

---

53. திருக்குறள் 26.

நம்பியாரூரர் பாடிய 'தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' எனும் திருத்தொண்டத்தொகையில் குறிக்கப்பட்ட அடியார் வரலாறுகளே இப்பெரியபுராணத்துள் இடம்பெற்றுள்ளன. தில்லைவாழந்தணர், பொய்யடிமை இல்லாத புலவர், பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார் ஆகிய ஒன்பது திருக் கூட்டத்தாரையும், 'திருநீலகண்டக் குயவனார்' முதல் 'திருநீலகண்டப் பாணர்' ஈறாக உள்ள தனியடியார் அறுபது பேரையும் பெயர் சொல்லி 'அடியேன் அடியேன்' என்று பாடும் நம்பியாரூரர், இறுதிப் பாடலில் 'அரனடியே அடைந்திட்ட சடையன் இசைஞானி காதலன், திருநாவலூர்க்கோன் அன்னவனாம் ஆரூரன்' என்று குறிப்பிடுவதால், தெய்வச் சேக்கிழார் நம்பியாரூரரையும் அவரை இவ்வுலகத்திற்கு அளித்த அவர்தம் பெற்றோராகிய சடையனார், இசைஞானியார் ஆகியோரையும் சேர்த்து அறுபத்து மூவராகக் கொண்டு பாடியருளினார். இவ்வகையில் தனியடியார் அறுபத்து மூவர் என்றும்; தொகையடியார் ஒன்பது பேர் என்றும் அறியலாம்.

இப்பெரியபுராணம், வெறும் சிவனடியார் வாழ்க்கை மட்டும் கூறும் நூலன்று; தமிழகத்தில் தொன்றுதொட்டு மேற் கொள்ளப்பட்டு வரும் சைவ சமய தத்துவங்கள், தமிழர் பண்பாடு, நாகரிகம், பழக்க ஒழுக்கம், ஆட்சிமுறை ஆகிய பலவற்றையும் உலகுக்கு எடுத்துரைக்கும் ஒப்பற்ற காப்பியமாகும்.

## சாத்திர இலக்கியம்

சாத்திர நூல்கள் அல்லது மெய்கண்ட நூல்கள் பதினான்கு ஆகும். இவற்றை இயற்றியோர் அறுவராவர். இவர்கள் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பாதியிலும், 13, 14 ஆகிய நூற்றாண்டுகளின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர்களாவர். இச் சாத்திர நூல்களுக்கு முன்பு தோன்றிய சைவ நூல்கள் அக்கால அரசர்களின் ஆதரவு பெற்று வளர்ந்தன. ஆயின் சித்தாந்த நூல்கள் அரசியலை அண்டவில்லை; சமயப் பேரறிஞர்களால் திருவடி ஞானப் பெருக்கத்தை உன்னியே எழுந்தன. ஆகவே அரசியல் போக்கிற்கும் இந்நூல்களின் தோற்றத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை யென்றே கூறலாம். காலநிலை மட்டும் அனுகூலமாயிருந்தது. வடமொழிக்கு வேதாந்தம் தோன்றியது போலத் தென்மொழிக்குச் சித்தாந்தம் தோன்றியது என்று கூறலாம்.

பதினான்கு சாத்திர நூல்களுள் சிவஞானபோதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் ஆகிய மூன்றும் சிறப்பாகப் போற்றப்படும். இம்மூன்றும் முறையே முதல், வழி, சார்பு நூல்கள் என்று கூறப் பெறும். இந்நூல்களை அருளியவர்கள் முறையே மெய்கண்ட தேவர், அருள்நந்தி சிவாச்சாரியார், உமாபதி சிவாச்சாரியார் ஆகியோராவர். இவர்கள் திருக்கயிலாய பரம்பரையிலே வந்தவர்களாவர். சிவபெருமான் முக்கண்களை உடையவர். அவருடைய முக்கண் களுக்கும் இம்மூன்று நூல்களும் ஒப்புமையுடையன. முக்கண்களில் நெற்றிக்கண்ணை ஒத்ததே சிவஞானபோதமாகும்.

"உந்தி களிறு உயிர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் – வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று"

என்பது சாத்திர நூல்கள் பதினான்கையும் விளக்கும் வெண்பாவாகும்.

### திருவுந்தியார்

சாத்திர நூல்களுள் இந்நூலே முதலில் வருகிறது. இந்நூலின் ஆசிரியர் திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார். 45 கலித்தாழிசைகளால் ஆனது. "முதல்வனே ஞானகுருவாக வந்து ஞானத்தை அளிப்பான்; அந்த அருள் ஞானம், சிந்தனை, தெளிவு என்பவற்றால் சிவபோகப் பெரும் பயனை அளிக்கும்" என்பது இந்நூலில் கூறப்படும் கருத்துகளாகும்.

### திருக்களிற்றுப்படியார்

திருவுந்தியாரின் உட்கருத்தை மரபுவழியில் விளக்குவதாக இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலாசிரியர் திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார். 100 வெண்பாக்களால் ஆனது. இந்நூலில் திருக்குறள், திருமுறைகள் ஆகியவற்றிலிருந்து மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. 63 நாயன்மார்களின் அனுபவங்களுள் சில எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. சிவதர்மம், சிவயோகம், சிவஞானம் ஆகிய மூன்றும் இறைவனடி சேர்வதற்கு உரிய கருவிகளாகக் கூறப்பட்டுள்ளன. சாத்திர விளக்கங்கள் சில உவமைகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

### சிவஞானபோதம்

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதத்தில் அமைந்துள்ள

சூத்திரங்கள் 12; மொத்தம் 40 வரிகள்; 216 சொற்கள்; 624 எழுத்துகள். அரிய பொருள்களைச் சுருங்கிய எழுத்துகளால் அமைந்த சிறு வடிவ நூலில் அமைத்துத் தந்த பெருமை மெய்கண்டாருக்கே உரியது. மெய்கண்டார், தம் கருத்தைப் பிற்காலத்தில் வருவோர் பிறழ உணராதிருக்கத் தாமே நூலை அழகுற அமைத்துள்ளார். சூத்திரம், கருத்துரை, மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு என்ற இந்த ஐந்தையும் அவரே அமைத்துள்ளார். சிவனின் திருவருள் ஆற்றல் ஐந்து; அதுபோலவே இப்பாகுபாடும் ஐந்தாக அமைந்துள்ளது. இவற்றுள் சூத்திரமும், எடுத்துக்காட்டும் பாச் செய்யுளாலும், கருத்து, மேற்கோள், ஏது ஆகிய மூன்றும் உரைச் செய்யுளாலும் அமைந்துள்ளன. இவ்வரும்பெரும் நூலுக்கு மாதவச் சிவஞான முனிவர் அரியதொரு பேருரையும் சிற்றுரையும் செய்துள்ளார்.

**சிவஞான சித்தியார்**

அருணந்தி சிவாசாரியார் எழுதிய சிவஞான சித்தியார் பரபக்கம், சுபக்கம் என இரு பகுதிகளை உடையது. சிவஞான போதத்தில் கூறிய கருத்துகள் அனைத்துக்கும் விளக்கமாக இஃது அமைந்துள்ளது. இந்நூலுக்கு மறைஞான தேசிகர், சிவாக்கிர யோகிகள், ஞானப்பிரகாச முனிவர், மாதவச் சிவஞான முனிவர், நிரம்பவழகிய தேசிகர், சுப்பிரமணிய தேசிகர் ஆகிய அறுவர் உரை கண்டுள்ளனர். மாதவச் சிவஞான முனிவர் 'சிவாகமார்த்தங்களுக் கெல்லாம் உரையாணி' என்று இந்நூலைப் போற்றுகின்றார்.

"சிவத்துக்கு மேல் தெய்வமில்லை
சித்திக்கு மேல் நூலில்லை"

என்ற பழமொழியினாலும் இந்நூலின் பெருமையை உணரலாம்.

பரபக்கம் 301 செய்யுட்களை உடையது. பரபக்கத்தில் சித்தாந்த சைவ நெறியில் நின்று ஆசிரியர் பிற சமயங்களின் உண்மையை எடுத்துக் கூறி மறுக்கின்றார். இந்நூல் 14 பகுதிகளைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு பிரிவிலும் அந்தந்தச் சமயத்தின் கொள்கைகள், மறுப்புகள் ஆகியன பற்றிய செய்திகள் உள்ளன.

முதல் நூலாகிய சிவஞான போதத்திற்கு விளக்கமாக அமையும் பகுதியே சித்தியின் சுபக்கமாகும். இப்பகுதி சிவஞான போதத்திற்குச் செய்யுள் நடையிலமைந்த விளக்க நூலாகும். 328 செய்யுட்களை உடையது.

## இருபா இருபஃது

அருணந்தி சிவாச்சாரியாரால் எழுதப்பட்டது. வெண்பா, ஆசிரியப்பா என்பவற்றால் 20 பாக்கள் அந்தாதித் தொடையி லமைந்தது. தம் ஞானகுருவாகிய மெய்கண்டாரை முன்னிலைப் படுத்தி வினாவுவது போன்று சைவ சித்தாந்த உண்மைகளையும் ஆசிரியரது சிவானுபவத்தையும் இந்நூல் உணர்த்தும்.

## உண்மை விளக்கம்

திருவதிகை மனவாசகங்கடந்தார் என்பவரால் இயற்றப் பட்ட இந்நூல் 53 வெண்பாக்களால் ஆனது. இந்நூலைச் 'சித்தாந்த அனுபவத் திரட்டு' என்பர். 36 தத்துவம், ஆணவம், இருவினை, ஆன்மா, கடவுள், ஐந்தெழுத்து ஆகியவற்றை இந்நூல் விளக்கும். இந்நூலாசிரியர் தம்முடைய ஆசிரியராகிய மெய்கண்டாரை வினவ அவர் விடை பகர்ந்தது போன்று அமைந்தது இந்நூல்.

## சிவப்பிரகாசம்

இந்நூலையும், அதனைத் தொடர்ந்து வரும் நூல்களையும் தில்லைவாழ் அந்தணர் மரபைச் சார்ந்த உமாபதி சிவாச்சாரியார் இயற்றியுள்ளார். 100 விருத்தங்களால் அமைந்த இந்நூல், சிவஞான போதத்தின் சார்பு நூலாகும். திருக்கயிலாய பரம்பரை ஆசிரியர்கள், சைவ நூல்களின் இயல்பு, தீக்கை பெறும் முறைகள், ஆணவம் கன்மம் வினைப்பயன் வரும் வழிகள், மாயையின் பிரிவுகள் ஆகியவை இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

## திருவருட்பயன்

குறள் வெண்பாவால் ஆனது. 100 குறட்பாக்கள் 10 அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை : பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளுருநிலை, அறியுநெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை, அருளதுநிலை, ஐந்தெழுத்து அருள்நிலை, அணைந்தோர் தன்மை.

## வினா வெண்பா

13 வெண்பாக்களை உடையது. ஆசிரியர் தம் குருவாகிய மறைஞான சம்பந்தரை வினாவும் முறையில் சாத்திர உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளார்.

போற்றிப் பஃறொடை

பஃறொடை வெண்பாவால் ஆனது. இறைவனது பரநிலை, ஐந்தொழில் நடத்தும் திறம், ஆணவத்தின் இயல்பு, இம்மை மறுமைப் பயன்கள், இறைவன் மூவகை உயிர்கட்கு அருளும்திறம் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. ஆசிரியனைப் போற்றும் முறையில் அமைந்த இந்நூல் ஞானாசிரியனாலேயே உயிர் பிரசித்தி அடைவதைக் கூறும்.

**கொடிக்கவி**

தில்லை நடராசப் பெருமானது கோயிலில் கொடி ஏறும் பொருட்டுப் பாடியது. ஒரு கட்டளைக் கலித்துறையும் 4 வெண்பாக்களும் கொண்டது. ஞானதீக்கையின் பயன், ஐந்தெழுத்தின் பெருமை ஆகியவற்றைக் கூறுகின்றது.

**நெஞ்சுவிடு தூது**

கலிவெண்பாவால் ஆன இந்நூல் 129 கண்ணிகளை உடையது. இந்நூலின் ஆசிரியர் தம் உள்ளத்தைத் தமது ஆசிரியராகிய மறைஞான சம்பந்தரிடம் மாலை வாங்கி வரும்படித் தூதாக அனுப்பும் முறையில் அமைந்தது. இந்நூல் பல நூல்களின் செறிவாக விளங்குகிறது.

**உண்மைநெறி விளக்கம்**

சிவப்பிரகாசத்தின் விரிவான இந்நூலில் தத்துவ உருவம், தத்துவக் காட்சி, தத்துவ சுத்தி, ஆன்ம உருவம், ஆன்மக் காட்சி, ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம் எனும் பத்துக் காரியங்களால் உயிரானது இறைவன் திருவடியை அடையும் என்பது கூறப்பட்டுள்ளது.

**சங்கற்ப நிராகரணம்**

அகவற்பாக்களால் ஆனது. மாயாவாதம், ஐக்கியவாதம், பாசாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சங்கிராந்தவாதம், ஈசுர அவிகாரவாதம், நிமித்தகாரண பரிணாமவாதம், சைவவாதம் என்பவற்றைச் சங்கற்பங்களாக வைத்து அவற்றை நிராகரித்து, சித்தாந்த வழியே பரமுத்தி இன்புறுநிலை அளிக்கும் என்று இந்நூல் கூறும்.

*பிற இலக்கியம்*

*மேலே கூறப்பெற்ற இலக்கியங்கள் தவிர்த்து ஏனைய நூல்கள் அனைத்தும் இப்பிரிவில் அடங்கும். ஆயின் ஏராளமான நூல்கள் இப்பிரிவில் இடம்பெறுகின்ற காரணத்தினால் அனைத்தையும் விரிந்த அளவில் ஆய்வு செய்ய இயலாது. எனவே இப்பகுதியில் இலக்கியங்களின் பட்டியல் மட்டுமே கூறப்பட்டுள்ளது.*

| வ. எ. | ஆசிரியர் பெயர் | | நூற்பெயர் | காலம் |
|---|---|---|---|---|
| 1. | ஔவையார் | 1. | ஆத்திசூடி | கி.பி. 10 அல்லது 12ஆம் நூற். |
| | | 2. | கொன்றைவேந்தன் | |
| | | 3. | மூதுரை | |
| | | 4. | நல்வழி | |
| | | 5. | வாக்குண்டாம் | |
| | | 6. | விநாயகர் அகவல் | |
| | | 7. | ஔவையார் ஞானக்குறள் | |
| 2. | கச்சியப்ப சிவாச்சாரியார் | 8. | கந்தபுராணம் (10,346 விருத்தப் பாக்கள்) | |
| 3. | அருணகிரிநாதர் | 9. | திருப்புகழ் | கி.பி. 15ஆம் நூற்றாண்டு |
| | | 10. | கந்தரலங்காரம் | |
| | | 11. | கந்தரநுபூதி | |
| | | 12. | கந்தரந்தாதி | |
| | | 13. | திருவகுப்பு | |
| | | 14. | வேல் விருத்தம் | |
| | | 15. | மயில் விருத்தம் | |
| | | 16. | உடற்கூற்று வண்ணம் | |
| | | 17. | திருவெழுகூற்றிருக்கை | |
| 4. | கடவுள் மாமுனிவர் | 18. | திருவாதவூரார் புராணம் (545 பாடல்கள்) | |
| 5. | காழிக்கண்ணுடைய வள்ளல் | 19. | ஒழிவில் ஒடுக்கம் | |
| 6. | கச்சியப்ப முனிவர் | 20. | கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது | |
| | | 21. | கச்சி ஆனந்த ருத்திரேசர் | |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | பதிற்றுப்பத்தந்தாதி | |
| | | 22. | கச்சி ஆனந்த ருத்திரேசர் கழிநெடில் | |
| | | 23. | பிரமீசர் பதிற்றுப்பத்தந்தாதி | |
| | | 24. | பஞ்சாக்கர தேசிகரந்தாதி | |
| 7. | குமரகுருபரர் | 25. | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா | கி.பி. 17ஆம் நூற்றாண்டு |
| | | 26. | மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் | |
| | | 27. | மதுரைக் கலம்பகம் | |
| | | 28. | திருவாரூர் நான்மணி மாலை | |
| | | 29. | முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | |
| | | 30. | சிதம்பர மும்மணிக் கோவை | |
| | | 31. | சிதம்பரச் செய்யுட் கோவை | |
| | | 32. | பண்டார மும்மணிக் கோவை | |
| | | 33. | காசிக் கலம்பகம் | |
| | | 34. | சகலகலாவல்லிமாலை | |
| | | 35. | மதுரை மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை | |
| | | 36. | மதுரை மீனாட்சியம்மை குறம் | |
| | | 37. | தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை | |
| 8. | துறைமங்கலம் சிவப்பிரகாசர் | 38. | திருவெங்கைக் கோவை | கி.பி. 17ஆம் நூற்றாண்டு |
| | | 39. | திருவெங்கைக் கலம்பகம் | |
| | | 40. | திருவெங்கை உலா | |
| | | 41. | திருவெங்கை அலங்காரம் | |
| | | 42. | சிவப்பிரகாச விலாசம் | |
| | | 43. | தருக்க பரிபாஷை | |
| | | 44. | சதமணிமாலை | |
| | | 45. | நால்வர் நான்மணி மாலை | |
| | | 46. | பிரபுலிங்க லீலை | |

முதலான 30 நூல்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 9. | தாயுமானவர் | 47. | பாடல்கள் (1452 பாடல்கள்) | கி.பி. 18இன் பிற்பகுதி |
| 10. | பரஞ்சோதி முனிவர் | 48. | திருவிளையாடற்புராணம் | கி.பி. 16ஆம் நூற்றாண்டு |
| | | 49. | போற்றிக் கலிவெண்பா | |
| | | 50. | மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி | |
| 11. | மாதவச் சிவஞான சுவாமிகள் | 51. | திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் | கி.பி. 18இன் பிற்பகுதி |
| | | 52. | கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதி | |
| | | 53. | இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி | |
| | | 54. | குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி | |
| | | 55. | வடதிருமுல்லைவாயில் அந்தாதி | |
| | | 56. | குளத்தூர்ச் சோமேசர் முதுமொழி வெண்பா | |
| | | 57. | கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம் | |
| | | 58. | திருத்தொண்டர் திருநாமக் கோவை | |
| | | 59. | திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு | |
| | | 60. | காஞ்சிப்புராணம் | |
| 12. | சிற்றம்பலநாடிகள் | 61. | துகளறு போதம் | |
| 13. | மறைஞான சம்பந்தர் | 62. | சிவதருமோத்தரம் | 1867 |
| | | 63. | சதமணிக்கோவை | |
| 14. | சைவ எல்லப்ப நாவலர் | 64. | அருணாசல புராணம் | |
| | | 65. | அருணைக் கலம்பகம் | |
| 15. | இராமலிங்க சுவாமிகள் | 66. | திருவருட்பா (6,000க்கு மேற்பட்ட பாடல்கள்) | 1823 – 1874 |

*16. ஆறுமுக நாவலர் 67. சைவ வினாவிடை*
*1823 - 1879*

68. பாலபாடம்
69. பெரியபுராண வசனம்
70. பெரியபுராணம் சத்தியரூபம்
71. திருமுருகாற்றுப்படை (பதிப்பு)
72. திருச்செந்தில் நிரோட்டக
யமக அந்தாதி உரை
73. சிவாலய தரிசனவிதி
74. சைவ தூசன பரிகாரம் –
சுப்பிரபோதம்
75. குளத்தூர் அமுதாம்பிகை
பிள்ளைத்தமிழ் (பதிப்பு)
76. கந்தரலங்காரம் (பதிப்பு)
77. கந்தரனுபூதி (பதிப்பு)
78. திருக்கை வழக்கம்
79. புட்பவிதி
80. மறைசை அந்தாதி (பதிப்பு)
81. கோயிற்புராணம் மூலம் (பதிப்பு)
82. திருக்கருவைப்
பதிற்றுப்பத்தந்தாதி (பதிப்பு)
83. சிதம்பர மும்மணிக்கோவை (பதிப்பு)
84. பட்டினத்துப் பிள்ளையார்
பாடல் (பதிப்பு)
85. அருணகிரிநாதர் வகுப்பு (பதிப்பு)

17. மீனாட்சிசுந்தரம் பிள்ளை 1815 – 1876

86. திருத்துருத்திக் கச்சி
விநாயகர் பதிகம்
87. திருத்துருத்திச்
சுப்பிரமணிய சுவாமி
பதிகம்
88. திருவிடைமருதூர்
மருதவாணர் தோத்திரப்
பதிகம்
89. திருப்பெருமணநல்லூர்த்
திருவெண்ணீற்றுமை
பிள்ளைத்தமிழ்
90. திருவானைக்கா அகிலாண்ட
நாயகி பிள்ளைத்தமிழ்

91. உறையூர் ஸ்ரீ காந்திமதி
யம்மை பிள்ளைத்தமிழ்
92. திருக்குடந்தை ஸ்ரீ மங்களாம்
பிகை பிள்ளைத்தமிழ்
93. திருத்தவத்துறைப் பெருந்திருப்
பிராட்டியார் பிள்ளைத்தமிழ்
94. திருவிடைக்கழி முருகர்
பிள்ளைத்தமிழ்
95. சேக்கிழார் பிள்ளைத்தமிழ்
96. திருவாவடுதுறை அம்பலவாண
தேசிகர் பிள்ளைத்தமிழ்
97. வாட்போக்கிக் கலம்பகம்
98. திருவாவடுதுறையாதீனத்துக்
குரு பரம்பரை யகவல்
99. திருவாவடுதுறை அம்பலவாண
தேசிகர் கலம்பகம்
100. சீகாழிக் கோவை
101. திருவிடைமருதூர் உலா
102. திருத்தில்லை யமகவந்தாதி
103. திருச்சிராமலை யமகவந்தாதி
104. துறைசை யமகவந்தாதி
105. திருப்பைஞ்ஞீலித் திரிபந்தாதி
106. திருக்குடந்தைத் திரிபந்தாதி
107. திருவிடைமருதூர்த் திரிபந்தாதி
108. பாலைவனப் பதிற்றுப்பத்தந்தாதி
109. திருவூறைப் பதிற்றுப்பத்தந்தாதி
110. திருப்பழைசைப் பதிற்றுப்பத்
தந்தாதி
111. பூவாளூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி
112. மதுரைத் திருஞானசம்பந்த
சுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி
113. மதுரைத் திருஞானசம்பந்த
சுவாமிகள் ஆனந்தக் களிப்பு
114. திருக்கற்குடி மாமலை மாலை
115. கலைசைச் சிதம்பரேசுவரர்
மாலை
116. திருவானைக்கா அகிலாண்ட
நாயகி மாலை

117. திருவாவடுதுறை சுப்பிரமணிய
தேசிகர் மாலை
118. தருமபுரம் சச்சிதானந்த
தேசிகர் மாலை
119. திருவாவடுதுறை சுப்பிரமணிய
தேசிகர் நெஞ்சுவிடு தூது
120. திருவாவடுதுறை சுப்பிரமணிய
தேசிகர் மீதுள்ள
தனிப்பாடல்கள்
121. பட்டீச்சுரப் புராணம்
122. திருவரன்குளப் புராணம்
123. திருப்பனந்தாள் குமரகுருபர
சுவாமிகள் சரித்திரம்
124. திருவாவடுதுறை சிவஞான
யோகிகள் சரித்திரம்
125. திருமயிலைச் சித்திரச் சத்திரப்
புகழ்ச்சி மாலை
126. திருமயிலை மாலையைச் சார்ந்த
தனி விருத்தங்கள்
127. வியாசைக் கோவை
128. குளத்தூர்க் கோவை
129. புதுவை வித்துவான் சவராயலு
நாயகர் மாலை
130. பொன்னூசல்

## முடிவுரை

சைவ இலக்கியங்கள் எனும் இக்கட்டுரையில் பழந்தமிழ் இலக்கியம், திருமுறை இலக்கியம், சாத்திர இலக்கியம், பிற இலக்கியம் என்ற நான்கு பிரிவுகளின் கீழ் இடம்பெற்ற இலக்கியங்களை அறிமுகம் செய்யும் வகையிலேயே செய்திகள் இடம்பெற்றுள்ளன. மிகவும் பரந்துபட்ட நிலையில் இலக்கியங்கள் பல்கிப் பெருகியுள்ளன. அதுவும் பிற்காலத்தில் மறைமலையடிகள், திரு. வி. கலியாண சுந்தரனார், கா. சுப்பிரமணிய பிள்ளை, மு. அருணாசலம், ப. அருணாசலம், க. வெள்ளைவாரணனார், மா. இராசமாணிக்கனார், ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, தி. கி. நாராயணசாமி, வ.சு. செங்கல்வராய பிள்ளை, திருமுருக கிருபானந்த வாரியார் முதலான பல்வேறு அறிஞர்கள் சைவ இலக்கிய நூல்களையும், திறனாய்வு

நூல்களையும் எழுதியுள்ளனர். திருமுறை முதலான சைவ இலக்கியங்களைப் பதிப்பித்தும் உரை எழுதியும் உள்ளவர்களும் பலர் உள்ளனர். தனித்தனிப் பொருள்களில் ஆய்வு செய்வதற்குரிய களங்கள் இவற்றில் இருக்கின்றன.

# 2

# திருமுறைகளில் சிற்றிலக்கிய வகைகள்*

பன்னிரு திருமுறைகளில் அமைந்துள்ள மொத்தப் பாக்கள் 18,357 ஆகும். இவற்றைப் பாடியவர்கள் 27 பேராவர். இத்திருமுறைகள் முதல் திருமுறை, இரண்டாந் திருமுறை, மூன்றாந் திருமுறை என்று எண்ணிக்கையின் பெயர் வைத்து வழங்கப்படுவது மரபு. 'முறை' எனும் சொல், உறவு, ஒழுக்கம், இடைச்சொல், ஒழுங்கு, கிராமம், குணம், தரம், பழமை, புத்தகம், முறைமை, முறையீடு, வரிசை என்று பன்னிரண்டு பொருள்களைக் கொண்டதாகப் பிங்கலந்தை (3983) கூறுகிறது. 'திரு' என்னும் சொல் பல்வேறுபட்ட, பலவாறு விரிந்த பொருள்களைக் கொண்டது. அது சிவனையும், அவனருளையும் அவ்வருளால் கிடைக்கும் இன்பநிலையையும் குறிக்கும்.

இப்பன்னிரு திருமுறைகளையும் எந்த எந்தக் காலத்தில் ஓதுதல் வேண்டும் என்பதையும் ஆன்றோர் வகுத்துள்ளனர். சித்திரைத் திங்கள் முதல் நாளில் முதல் திருமுறையிலிருந்து தொடங்கிப் பன்னிரண்டாம் திருமுறை வரை பங்குனித் திங்கள் முடிய ஓதுவது மரபு. இப்பன்னிரு திருமுறைகளையும் ஓதுகின்றவர் ஓதுவார், பண்டாரங்கள் என்று சொல்லப்பெறுவர். இத்திருமுறைகளைப் 'பதி நூல்கள்' என்று சொல்வதுமுண்டு.

## சிற்றிலக்கிய வகைகள்

பொதுவாகச் சிற்றிலக்கியங்கள் 96 என்று கூறப்பெறுவதுண்டு. ஆயின் 1983ஆம் ஆண்டு வரை தொகுக்கப்பெற்ற சிற்றிலக்கிய வகைகளில் ஏறத்தாழ 270 சிற்றிலக்கிய வகைகளில் 5,258 நூல்கள் இருப்பதாக ந.வீ. செயராமன் தம்முடைய சிற்றிலக்கிய அகராதியில் தொகுத்துள்ளார். காலந்தோறும் வளர்ச்சியடைந்து வரும் இலக்கிய வகைகளில் மேலும் பல சிற்றிலக்கிய வகைகள் தோன்றியவண்ணம் இருந்து கொண்டுதான் இருக்கின்றன.

அந்த வகையில் பன்னிரு திருமுறைகளுள் காணப்படும் சிற்றிலக்கிய வகைகள் வருமாறு :

---

* 'தமிழ் இலக்கிய வகைகள்' எனும் தலைப்பில் புதுவைப் பல்கலைக்கழகத் தமிழியற்புலத்தில் 07-10-2005 அன்று நடைபெற்ற புத்தொளிப் பயிற்சி வகுப்பில் நிகழ்த்திய பொழிவு.

| வ. எ. | *சிற்றிலக்கிய வகை* | | *நூற்பெயர்* | *ஆசிரியர் பெயர்* |
|---|---|---|---|---|
| 1. | அகவல் | 1. | கீர்த்தித் திருவகவல் | மாணிக்கவாசகர் |
| | | 2. | போற்றித் திருவகவல் | மாணிக்கவாசகர் |
| 2. | அங்கமாலை | 3. | திருவங்கமாலை | திருநாவுக்கரசர் |
| 3. | அந்தாதி | 4. | அற்புதத் திருவந்தாதி | காரைக்காலம்மையார் |
| | | 5. | ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி | நம்பியாண்டார் நம்பி |
| | | 6. | கைலைபாதி காளத்திபாதி அந்தாதி | நக்கீரதேவ நாயனார் |
| | | 7. | சிவபெருமான் திருவந்தாதி | கபிலதேவ நாயனார் |
| | | 8. | சிவபெருமான் திருவந்தாதி | பரணதேவ நாயனார் |
| | | 9. | திருத்தொண்டர் திருவந்தாதி | நம்பியாண்டார் நம்பி |
| | | 10. | திருவேகம்ப முடையார் திருவந்தாதி | பட்டினத்தடிகள் |
| | | 11. | பொன்வண்ணத் தந்தாதி | சேரமான் பெருமாள் |
| 4. | அம்மானை | 12. | திருவம்மானை | மாணிக்கவாசகர் |
| 5. | ஆற்றுப்படை | 13. | திருமுருகாற்றுப் படை | நக்கீரர் |
| 6. | இசைப்பா | 14. | திருவிசைப்பா | கண்டராதித்தர் |
| | | 15. | திருவிசைப்பா | கருவூர்த்தேவர் |
| | | 16. | திருவிசைப்பா | சேதிராயர் |
| | | 17. | திருவிசைப்பா | சேந்தனார் |
| | | 18. | திருவிசைப்பா | திருமாளிகைத்தேவர் |
| | | 19. | திருவிசைப்பா | திருவாலியமுதனார் |

| | | | |
|---|---|---|---|
| | | 20. திருவிசைப்பா | புருடோத்தமநம்பி |
| | | 21. திருவிசைப்பா | பூந்துருத்திநம்பி காடநம்பி |
| | | 22. திருவிசைப்பா | வேணாட்டடிகள் |
| 7. | இரட்டை மணிமாலை | 23. சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை | கபிலதேவ நாயனார் |
| | | 24. மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை | கபிலதேவ நாயனார் |
| | | 25. திருவிரட்டை மணிமாலை | காரைக்காலம்மையார் |
| | | 26. திருநாரையூர் திருவிரட்டை மணிமாலை | நம்பியாண்டார் நம்பி |
| 8. | உந்தியார் | 27. திருவுந்தியார் | மாணிக்கவாசகர் |
| 9. | உலா | 28. ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை | நம்பியாண்டார் நம்பி |
| | | 29. திருக்கைலாய ஞானஉலா | சேரமான் பெருமாள் |
| 10. | ஊசல் | 30. திருப்பொன்னூசல் | மாணிக்கவாசகர் |
| 11. | ஊர் வெண்பா | 31. சேத்திரத் திருவெண்பா | ஐயடிகள் காடவர்கோன் |
| 12. | எண் செய்யுள் – எட்டு | 32. கார் எட்டு | நக்கீரதேவ நாயனார் |
| | எழுபது | 33. திருவீங்கோய் மலைஎழுபது | நக்கீரதேவ நாயனார் |
| | முப்பது | 34. திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது | பட்டினத்தடிகள் |
| 13. | எழுகூற்றிருக்கை | 35. திருவெழு கூற்றிருக்கை | நக்கீரர் |
| 14. | ஏகாதசமாலை | 36. திருநாவுக்கரசு தேவர் திருஏகாதசமாலை | நம்பியாண்டார் நம்பி |

| | | | |
|---|---|---|---|
| 15. | கலம்பகம் | 37. ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் | நம்பியாண்டார் நம்பி |
| 16. | கலிவெண்பா | 38. போற்றிக் கலிவெண்பா | நக்கீரதேவ நாயனார் |
| 17. | கோவை | 39. திருக்கோவையார் | மாணிக்கவாசகர் |
| 18. | சதகம் | 40. திருச்சதகம் | மாணிக்கவாசகர் |
| 19. | சாழல் | 41. திருச்சாழல் | மாணிக்கவாசகர் |
| 20. | சீட்டுக்கவி | 42. திருமுகப்பாசுரம் | சோமசுந்தரக் கடவுள் |
| 21. | தசாங்கம் | 43. திருத்தசாங்கம் | மாணிக்கவாசகர் |
| 22. | தாண்டகம் | 44. திருத்தாண்டகம் | திருநாவுக்கரசர் |
| 23. | திருத்தொகை | 45. ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை | நம்பியாண்டார் நம்பி |
| 24. | தும்பிப் பாட்டு | 46. திருக்கோத்தும்பி | மாணிக்கவாசகர் |
| 25. | தெள்ளேணம் | 47. திருத்தெள்ளேணம் | மாணிக்கவாசகர் |
| 26. | தேவபாணி | 48. பெருந்தேவபாணி | நக்கீரதேவ நாயனார் |
| 27. | தொகைச் செய்யுள் | 49. திருக்குறுந்தொகை | திருநாவுக்கரசர் |
| | | 50. திருத்தொண்டத் தொகை | சுந்தரர் |
| 28. | நான்மணிமாலை | 51. கோயில் நான்மணிமாலை | பட்டினத்துப் பிள்ளையார் |
| 29. | படையெழுச்சி | 52. திருப்படையெழுச்சி | மாணிக்கவாசகர் |
| 30. | பத்து | 53. அச்சோப்பத்து முதலிய 19 | மாணிக்கவாசகர் |
| 31. | பதிகம் | 54. அச்சோப்பதிகம் முதலிய 6 | மாணிக்கவாசகர் |
| | | 56. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் | காரைக்காலம்மையார் |

| | | | | |
|---|---|---|---|---|
| 32. | பல்லாண்டு | 56. | திருப்பல்லாண்டு | சேந்தனார் |
| | | 57. | திருப்பல்லாண்டு | திருமாளிகைத்தேவர் |
| 33. | பள்ளி எழுச்சி | 58. | திருப்பள்ளி எழுச்சி | மாணிக்கவாசகர் |
| 34. | பாவைப்பாட்டு | 59. | திருவெம்பாவை | மாணிக்கவாசகர் |
| 35. | பிரசாதம் | 60. | கோயப் பிரசாதம் | நக்கீரர் |
| 36 | புலம்பல் | 61. | திருப்புலம்பல் | மாணிக்கவாசகர் |
| 37. | மறம் | 62. | திருக்கண்ணப்ப தேவர் திருமறம் | கல்லாடதேவ நாயனார் |
| | | 63. | திருக்கண்ணப்ப தேவர் திருமறம் | நக்கீரதேவ நாயனார் |
| 38. | மாலை | 64. | ஆனந்தமாலை | மாணிக்கவாசகர் |
| 39. | மும்மணிக்கோவை | 65. | ஆளுடைய பிள்ளையார் திரு மும்மணிக்கோவை | நம்பியாண்டார் நம்பி |
| | | 66. | சிவபெருமான் திரு மும்மணிக்கோவை | இளம்பெருமானடிகள் |
| | | 67. | திருவலஞ்சுழி மும்மணிக்கோவை | நக்கீரர் |
| | | 68. | திருவாரூர் மும்மணிக்கோவை | சேரமான் பெருமாள் |
| | | 69. | திருவிடைமருதூர் மும்மணிக்கோவை | பட்டினத்தடிகள் |
| | | 70. | திருக்கழுமல மும்மணிக்கோவை | பட்டினத்தடிகள் |
| | | 71. | மூத்தபிள்ளையார் திருமும்மணிக் கோவை | அதிராவடிகள் |
| 40. | முறை | 72. | திருமூலநாயனார் குருமுறை | திருமூலர் |
| 41. | வார்த்தை | 73. | திருவார்த்தை | மாணிக்கவாசகர் |
| 42. | விண்ணப்பம் | 74. | நீத்தல் விண்ணப்பம் | மாணிக்கவாசகர் |

| | | | |
|---|---|---|---|
| 43. | விருத்தம் | 75. கோயில் திருப் பண்ணியர் விருத்தம் | நம்பியாண்டார் நம்பி |
| | | 76. ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் | நம்பியாண்டார் நம்பி |
| 44. | வெண்பா | 77. திருவெண்பா | மாணிக்கவாசகர் |

*திருநாவுக்கரசரின் திருவங்கமாலை (3), திருத்தாண்டகம் (44), திருவாலி யமுதனாரின் திருவிசைப்பா (19), காரைக்காலம்மையாரின் திருவிரட்டை மணிமாலை (25), திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் (55), மாணிக்கவாசகரின் திருவுந்தியார் (27), திருக்கோவையார் (39), திருச்சதகம் (40), திருச்சாழல் (41), திருத்தசாங்கம் (43), திருக்கோத்தும்பி (46), திருத்தெள்ளேணம் (47), திருப்படை யெழுச்சி (52), அச்சோப்பத்து (53), திருப்பள்ளி எழுச்சி (58), திருப்புலம்பல் (61), ஆனந்தமாலை (64), திருவார்த்தை (73), நீத்தல் விண்ணப்பம் (74), திருவெண்பா (77), ஐயடிகள் காடவர்கோனின் சேத்திரத் திருவெண்பா (31), திருமூலரின் திருமூல நாயனார் குருமுறை (72), நக்கீரதேவ நாயனாரின் கார்எட்டு (32), பெருந்தேவபாணி (48), திருவீங்கோய் மலைஎழுபது (33), கோபப் பிரசாதம் (60), திருக்கண்ணப்ப தேவர் திருமறம் (62), திருவலஞ்சுழி மும்மணிக்கோவை (67), சோமசுந்தரக் கடவுளின் திருமுகப்பாசுரம் (42), பட்டினத்துப் பிள்ளையாரின் கோயில் நான்மணி மாலை (51), நம்பியாண்டார் நம்பியின் கோயில் திருப்பண்ணியர் விருத்தம் (75) ஆகிய நூல்கள் திருமுறைகளில் காணப்படும் புதிய சிற்றிலக்கிய வகைகளாகும்.*

*இச்சிற்றிலக்கிய வகைகளில் மிகமிகப் பழமை வாய்ந்தது அந்தாதி எனும் சிற்றிலக்கிய வகையாகும். எனவே இப்பகுதியில் அந்தாதி எனும் இலக்கிய வகை மட்டும் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.*

**அந்தாதி - விளக்கம்**

*அந்தம், ஆதி என்ற இரு சொற்களின் கூட்டு உருவம் 'அந்தாதி'யாகும். முடிவில் முதல், அந்தத்தில் ஆதி என்ற முறையில் நினைவு கொள்வதற்கும் தொடர்ந்து மாலையாக அமைவதற்கும் ஏற்ற கருவியாக அமைக்கப்பட்ட பாவின் வகையாகும்.*

**"அவன் அவள் அதுஎனும் அவை மூவினைமையின்**

> தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்
> அந்தம் ஆதி என்மனார் புலவர்"[1]

எனவரும் சிவஞானபோத நூற்பாவின் இறுதி அடியில் 'அந்தம், ஆதி' என்ற சொற்கள் பயின்று வந்திருக்கின்றன. "அதற்கு (உலகத்தொகுதி) ஒடுக்கமாய் முடிவைச் செய்யும் அந்தமாகிய கடவுளே ஆதியு மாகின்றான் எனத் தருக்க நூலறிந்தோர் கூறுவர்"[2] என்று கா. சுப்பிர மணியபிள்ளை விளக்கம் கூறுவது இங்கு நினைக்கத்தகும்.

அந்தாதி என்பது, நூலின் ஒவ்வொரு பாடலிலும் இறுதியில் உள்ள எழுத்து, அசை, சீர், அடி ஆகிய இவற்றுள் யாதானும் ஒன்று அதற்கு அடுத்த பாடலின் முடிவும் முதற் பாடலின் தொடக்கமும் ஒன்றாக இணையும்படி மண்டலித்து, மாலை போலத் தொடுத்துப் பாடப்பெறும் யாப்பு வகையிலமைந்த ஒருவகைச் சிற்றிலக்கியமாகும். பாக்களை மறந்துவிடாமல் நினைவில் வைத்துக் கொள்வதற்கு இவ் அந்தாதி முறை மிகவும் உதவும்.

சங்க இலக்கியங்கள்,[3] சிலப்பதிகாரம்[4] போன்றவற்றில் அந்தாதியின் அமைப்பு முறையில் பாடல்கள் அமைந்திருப்பதைக் காணமுடிகின்றன.

### சம்பந்தர் அருளிய தேவாரம்

முதல் மூன்று திருமுறைகளில் ஏகபாதம் எனும் பெயரில் பாடியுள்ள திருப்பிரமபுரப் பதிகம்[5] அந்தாதி யாப்பில் அமைந்துள்ளது.

> "பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
> பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
> பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
> பிரம புரத்துறை பெம்மா னெம்மான்"[6]

என்பது இப்பதிகத்தின் முதற்பாடல். இப்பதிகத்தில் இடம்பெற்றுள்ள பன்னிரண்டு பாடல்களும் இதே அமைப்பிலேயே இருக்கின்றன.

---

1. மெய்கண்டார், *சிவஞானபோதம்* நூற்பா 1.
2. *மேலது*, விளக்கவுரை.
3. *நற்றிணை* 95, *புறநானூறு* 2, *சிறுபாணாற்றுப்படை* 14–28, *பதிற்றுப்பத்து* நான்காம் பத்து, *ஐங்குறுநூறு* தொண்டிப்பத்து.
4. இளங்கோவடிகள், *சிலப்பதிகாரம்* கானல்வரி 2, 3, 4, 9–13, 20–23, 25–27, 34, 36, 43–46, 48.
5. *சம்பந்தர் தேவாரம்* 1.127. 1–12.
6. *மேலது*, 1.127.1.

ஏகம் - ஒன்று. பாதம் - அடி. ஏகபாதம் - ஓரடி. ஓரடியே பொருள் வேறுபட நான்குமுறை மடித்து வந்து ஒரு பாடலாக அமைந்திருப்பதனால் ஏகபாதமாயிற்று. இத்திருப்பதிகப் பாக்களுள் 1 முதல் 10 வரையுள்ள பாடல்களும் 12ஆம் பாடலும் நாற்சீரடிகளாலும் 11ஆம் பாடல் ஐஞ்சீரடிகளாலும் இயன்று சீர்கள் வேறுபட்டு வந்திருக்கின்றன. இப்பதிகப்பாக்களில் வந்த சொல்லும் தொடரும் மீண்டும் மீண்டும் வந்த பொருள் அடிதோறும் வேறுபட்டு அமைந்திருக்கின்றன. இதுவே பிற்காலத்தில் 'யமகவந்தாதி' எனும் ஒருவகையைத் தோற்றுவிக்கக் கருவாய் அமைந்தது.

'திருவியமகம்' எனும் பெயரில் நான்கு பதிகங்கள்[7] மூன்றாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளன. இப்பதிகங்களில் ஓரடியில் முன் வந்த சொல் அல்லது தொடர் வேறொரு பொருள்பட மீண்டும் அதே அடியில் மடக்கி வந்திருக்கிறது.

## மாணிக்கவாசகரின் திருவாசகம்

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் எட்டாம் திருமுறையாக வகுக்கப்பட்டிருக்கிறது. இதில் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், கோயில் மூத்த திருப்பதிகம், கோயில் திருப்பதிகம், பிரார்த்தனைப்பத்து, குழைத்தபத்து, யாத்திரைப்பத்து ஆகியவை அந்தாதிப் போக்கில் அமைந்திருக்கின்றன.

தவிர அகவல், அம்மானை, உந்தியார், ஊசல், கோவை, சதகம், சாழல், தசாங்கம், தும்பிப்பாட்டு, தெள்ளேணம், படையெழுச்சி, பத்து, பதிகம், பள்ளியெழுச்சி, பாவைப்பாட்டு, புலம்பல், மாலை, வார்த்தை, விண்ணப்பம், வெண்பா ஆகிய இருபது சிற்றிலக்கிய வகைகள் இவ் எட்டாம் திருமுறையில் அமைந்திருக்கின்றன.

## திருமூலர் அருளிய திருமந்திரம்

பத்தாந்திருமுறையாக விளங்கும் இத்திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாக அமைந்துள்ளது. இதன் நான்காம் தந்திரத்தில் பல பாக்கள் அந்தாதியாக அமைந்துள்ளது. இதில் சிவம் முதலான பல்வேறு தெய்வங்களுக்குரிய மந்திரங்கள், இயந்திரங்கள், உபாசிக்கும் முறை, பயன் ஆகியன இடம்பெற்றிருக்கின்றன. மந்திரங்கள் கணிக்கின்றவர்கள் மறந்து விடாமல் நினைவில் வைத்துக் கொள்வதற்கு எளிமையும் இனிமையும் மிகவும் முக்கியமாகும். அதனாலேயே இந் நான்காம்

---

7. சம்பந்தர் தேவாரம் 3.113.1-12, 3.114.1-11, 3.115.1-11, 3.116.1-11.

தந்திரத்தில் அமைந்த பல பாக்கள் அந்தாதிப் போக்கில் அமைந்திருக்கின்றன.

## பதினோராந் திருமுறை

பன்னிரு அருளாளர்கள் பாடிய நாற்பது நூல்களுள் எட்டு அந்தாதி நூல்கள் இத்திருமுறையில் இருக்கின்றன. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் தோன்றிய காரைக்காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதி எனும் நூலே அந்தாதி நூல்களுள் காலத்தால் முந்தையது. இத்திருமுறையில் அமைந்துள்ள எட்டு அந்தாதி இலக்கியங்களை இப்பகுதி ஆராய்கிறது.

## அற்புதத் திருவந்தாதி

101 பாடல்களைக் கொண்ட இவ்வந்தாதி ஓதுவதற்கு எளிமையும் இனிமையும் உடையது. இறைவனின் அற்புதங்களையும் அருட்கோலங்களையும் திருவருட் செயல்களையும் அமைவுற எடுத்துக்காட்டுவனவாகவும் அமைந்திருக்கின்றன. ஆழ்ந்தகன்ற நுண்ணிய கருத்துகளைக் கொண்ட இப்பனுவல் சிவபிரானை முன்னிலைப்படுத்தி அழைத்து உரையாடி மகிழும் நிலையில் அமைந்திருக்கிறது.

அம்மையார் முதன்முதல் பாடியருளிய இவ்வந்தாதியில் இறைவனிடம் பேயுருவை வேண்டிப் பெற்றதை,

> "பெறினும் பிறதியாதும் வேண்டேம் நமக்கீ
> துறினும் உருதொழியு மேனும் – சிறிதுணர்த்தி
> மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்றன் பேயாய
> நற்கணத்தி லொன்றாய நாம்" (86)

எனும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

இறைவன் எல்லாமாய், எப்பொருளுமாய், எல்லாவிடத்தும் நீக்கமற நிறைந்திருக்கும் பான்மையையும் அவனை மனம், மொழி, மெய்களால் வழிபட வேண்டும் என்பதையும் தாய் அன்போடு பல பாக்களில் அம்மையார் எடுத்துரைக்கின்றார்.

## பொன்வண்ணத் திருவந்தாதி

சேரமான் பெருமாள் நாயனார் பாடிய இத்திருவந்தாதியில் 100 பாடல்கள் உள்ளன. 'பொன்வண்ணம் எவ்வண்ணம்' என்று முதற்

பாடல் தொடங்குகிறது. 'காக்கையும் அன்றே படைத்தது பொன் வண்ணமே' என்று இறுதிப் பாடல் முடிகிறது. கட்டளைக் கலித்துறையில் அமைந்த இப்பனுவல், சேரமான் பெருமாள் தில்லைச் சிற்றம்பலத்தை இறைஞ்சித் தில்லைப் பெருமானது அருட்கூத்தைக் கண்டு மகிழ்ந்த நிலையில் இப்பனுவலைப் பாடியதாகச் சேக்கிழார் கூறுகின்றார்.

இந்நூலில் அகத்துறைப் பாக்களும் இறைவனுக்குத் தொண்டு படும் முறைப் பாக்களும் அவ்வாறு தொண்டுபட்ட மெய்யடியார் களுடைய இயல்பை விரித்துரைக்கும் பாக்களும் அமைந்திருக்கின்றன.

## கயிலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி

நக்கீரதேவ நாயனார் பாடிய இத்திருவந்தாதியில் 100 பாடல்கள் உள்ளன. 'சொல்லும் பொருளுமே' என்று தொடங்கி 'எப்பொழுதுஞ் சொல்' என்று மண்டலித்து அந்தாதியாக முடித்திருக்கின்றார். வெண்பாவாலான இதில் ஒற்றைப்படை எண்களில் அமைந்த பாடல்கள் ஐம்பதும் திருக்கயிலையைப் போற்றுகின்றன. இரட்டைப்படை எண்களில் அமைந்த ஐம்பது பாடல்கள் திருக்காளத்தியைப் போற்று கின்றன. இரண்டும் அடுத்தடுத்து அமைந்திருந்தமையினால் கயிலை பாதி காளத்திபாதித் திருவந்தாதி என்று பெயர் பெறுவதாயிற்று.

இறைவன் திருவருட் கோலங்கள், திருவருட் செயல்கள், அவனை வழிபடுவதன் நோக்கம், தம் நெஞ்சிற்கு அறிவுறுத்தியமை போன்றவற்றை வெளிப்படுத்தும் பாக்களும் இறைவனை நோக்கி உரையாடும் நிலையில் பாடிய பாக்களும் இறைவனைக் காதலித்த தலைவியின் ஆற்றாமையையும் பேரன்பின் திறத்தையும் புலப்படுத்தும் நிலையில் பாடிய பாடல்களும் இப்பனுவலில் அமைந்துள்ளன.

## சிவபெருமான் திருவந்தாதி

கபிலதேவ நாயனாரும், பரணதேவ நாயனாரும் பாடிய இரு நூல்களுக்கும் 'சிவபெருமான் திருவந்தாதி' என்றே பெயரிடப் பட்டிருக்கிறது. இரு நூல்களும் வெண்பாவாலானது. 'ஒன்று முதலாக நூறளவும்' என்று தொடங்கிய கபிலதேவ நாயனார் 'வெள்ளே றுடை யானைப் பாடலால் ஒன்று' என்று நூறாவது பாடலோடு முடித்திருக் கிறார். 'ஒன்றுரைப்பீர்' என்று தொடங்கிய பரணதேவ நாயனார் 'ஓரைந்துரைக்க வல்லார்க் கொன்று' என்று நூறாவது பாடலோடு முடித்திருக்கிறார். ஆயின் பரணதேவ நாயனார் நூற்பலன் கூறும் பாடல்

ஒன்றையும் இறுதியில் பாடியிருக்கின்றார். இரு நூல்களிலும் சிவபெருமான் உறையும் சில தலங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

## திருவேகம்பமுடையார் திருவந்தாதி

காஞ்சியிலுள்ள 'திருவேகம்பம்' எனும் கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபிரானைப் புகழ்ந்து கட்டளைக் கலித்துறையில் பட்டினத்துப் பிள்ளையார் பாடியிருக்கின்றார். 'மெய்த்தொண்டர் செல்லும்நெறி' எனத் தொடங்கி 'எனக் கொள்வர் மெய்த்தொண்டரே' என்று நூறாவது பாடல் முடிகிறது. சிவபிரானின் அருட்டிறம், திருவேகம்பப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு குடும்ப வாழ்வில் தலைவன் தலைவி ஆகியோரின் அன்பின் திறத்தை வெளிப்படுத்தும் அகத்துறைப் பாக்கள், பல்வேறு பாடல்பெற்ற தலங்கள், வைப்புத் தலங்கள் பற்றிய குறிப்புகள் இப்பனுவலில் இடம் பெற்றிருக்கின்றன.

## திருத்தொண்டர் திருவந்தாதி

நம்பியாண்டார் நம்பி பாடியருளிய பத்து நூல்களுள் இரு அந்தாதி நூல்கள் அடங்கும். அவற்றுள் இவ்வந்தாதி சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகைக்கு வகையாக அமைந்திருக்கிறது. சேக்கிழார் பெரியபுராணம் பாடுவதற்கு இவ்வந்தாதி பெரிதும் சான்றாக வழிநூலாக விளங்கியிருக்கிறது. 'செப்பத்தகு புகழ்த்தில்லை' என்று முதற்பாடல் தொடங்குகிறது. நூலினிறுதிப் பாடல் 'செல்வப் பெரும் புகழந்தாதி செப்பிடவே' என்று முடிகிறது. இப்பனுவலில் தனியடியார் அறுபதின்மரும் ஒன்பது திருக்கூட்டத்தாரும் ஆகிய திருத்தொண்டர்களுக்குரிய ஊர், நாடு, மரபு, செயல் போன்றவையும் அவர்கள் பெற்ற பேறும் கூறப்பட்டிருக்கின்றன. புராணச் செய்திகளும் அருஞ்சொல் வழக்குகளும் ஆங்காங்கே இடம்பெற்றிருக்கின்றன.

## ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி

நம்பி பாடியருளிய இப்பனுவல் திருஞானசம்பந்தரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நூறு கட்டளைக் கலித்துறைகளால் இயன்றதாகும். 'பார்மண்டலத்தினில்' எனத் தொடங்கிய இவ்வந்தாதி 'பன்னிருநாமமிப் பாரகத்தே' என்று மண்டலித்து முடிந்திருக்கிறது. சம்பந்தருக்கு வழங்கப்பெறும் பல்வேறு சிறப்புப் பெயர்கள், சம்பந்தர் நிகழ்த்திய அற்புதச் செயல்கள், சம்பந்தர் அருளிய பதிகங்களின் பொருள் நலங்கள், அகப்பொருள் நலம் சார்ந்தவை முதலானவற்றை இந்நூல் கூறுகிறது.

## முடிவுரை

நானிலத்தில் தமிழ் வாழ, நற்சைவநெறி தழைத்தோங்க அருளாளர்கள் அருளிய தெய்வத்தமிழ்த் திருமுறைகளில் 44 சிற்றிலக்கிய வகைகளில் 77 சிற்றிலக்கிய நூல்கள் காணப்படுகின்றன. முதன் முதல் அந்தாதி எனும் இலக்கியம் தனியொரு சிற்றிலக்கியப் பனுவலாக உருவாவதற்கு வித்திட்டவர் காரைக்காலம்மையாராவர். எனவே காலத்தால் முற்பட்ட அந்தாதி இலக்கிய வகை மட்டும் இவண் ஆய்வுப் பொருளாக எடுத்து விளக்கப்பட்டது. ஏனைய சிற்றிலக்கிய வகைகளை விரிப்பின் பெருகும் என்ற காரணத்தினால் இக்கட்டுரையில் கோடிட்டுக் காட்டப்பட்டது. 'திருமுறைகளில் சிற்றிலக்கிய வகைகள்' எனுந் தலைப்பில் தனியாக முனைவர் பட்டம் மேற்கொள்வதற்குரிய களங்கள் இருப்பதை இதன் மூலம் காணமுடிந்தது.

# 3

# திருமுறைகளில் பண்பாடு*

ஒவ்வொரு மனிதனுக்கும் நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் எத்துணை இன்றியமையாததோ அவ்வாறே சமயப்பற்றும் அவனுக்கு இன்றியமையாத ஒன்றாகும். ஏனெனில், ஒரு நாட்டோடும் மொழியோடும் சமய உணர்வும் பிரிவற விரவிப் பிணைந்து கிடக்கின்றது. ஒரு நாட்டின் நாகரிகமும், ஒரு மொழியின் சிறப்பும் சமய உணர்வுடன் இணைகின்றபோதுதான், பலமடங்கு தலைசிறந்து ஓங்கித் திகழும்.

பொதுவாகச் சமயம் என்பது, நம்மை யாரென உணர வைக்கிறது; நமக்குள்ள துன்பங்கள் யாவை என்பதைப் புலப்படுத்துகிறது; அத்துன்பங்கள் ஏன் நேர்கின்றன என்பதைச் சுட்டுகிறது; அவற்றைக் களைவதற்குரிய வழிகள் யாவை என்றும் கூறுகிறது; அவ்வழியே நம்மைச் செலுத்துகிறது; முடிவில் முடிவிலா இன்பத்தில் நம்மை ஆழ்த்துகிறது. எந்த நாட்டைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் எந்த மொழி பேசுபவராக இருந்தாலும் அனைவரும் சகோதரரே என்ற எண்ணத்தைத் தருவதும், வேற்றுமை நாட்டமுடையாரை ஒற்றுமைப் படுத்துவதும் சமயமேயாகும். மனித இனத்தின் நாகரிகத்தை அளக்கும் சிறந்த அளவுகோலாகச் சமயம் திகழ்கிறது. சமயத்தின் மூலமே மனிதன் தனக்கும், தன்னைப் படைத்துக் காத்துவரும் கடவுளுக்கு முள்ள தொடர்பை நன்கு அறிகிறான்.

**சைவ சமயம்**

இவற்றுள் 'சைவம்' என்பது 'சிவம்' என்னும் சொல்லி லிருந்து தோன்றியது. சைவத்துக்கு இலக்கணம் கூறவந்த திருமூலர், 'சைவம் சிவனுடன் சம்பந்தமானது' (1486) என்றார். அந்தச் சம்பந்தத்தை அறிந்து, உணர்ந்து, அச்சிவத்தோடு சேர்ந்து, அதனால் மக்கள் மேல்நிலைக்கு உயர்வதற்காக இறைவன் திருவுளம் இருந்தபடித் தோன்றிய சமயம் சைவ சமயம் அல்லது சைவம் எனப்படும். அச்சமயம் ஒப்புக் கொள்ளும் முடிபே சைவர்கட்குச் சித்தாந்தம்

---

* 'ஏ.பி.சி. வீரபாகு அறக்கட்டளைப் பொழிவு' எனும் வரிசையில் மதுரை காமராசர் பல்கலைக்கழகச் சைவ சித்தாந்தத்துறையின் சார்பில் 21-02-2005 அன்று நிகழ்த்திய பொழிவு.

ஆகும். இச்சைவ சமயம் எப்பொழுது தோன்றியது என்பது கற்பனைக்கு எட்டாததாயுள்ளது.

ஆனால் இக்கால வழக்கத்தில் சைவம் என்பது கொலை புலை இல்லாமையையும், சைவர் என்போர் அவ்விரண்டையும் வழுவாது உயிரின் சிறப்பாகக் கைக்கொண்டு ஒழுகுவோர் என்றும் வழங்கி வருவதைக் காண்கிறோம். சைவ சமயம் உலகத்திலேயே மிகப் பழமையான உயிர்ப்புடைய சமயமாகும். எனவேதான்,

"Saivisim is the old prehistorical religion"

என்று ஜி.யூ. போப்பும்

"Saivisim is the most ancient living religion in the World"

என்று சர் ஜான் மார்சலும் கூறுகின்றனர்.

ஒருகாலத்தில் உலகம் முழுவதும் சைவ சமயம் தழைத் தோங்கி இருந்தது. அதற்கு அடையாளமாக இன்றும் உலகின் பல்வேறு பகுதிகளிலும் சிவலிங்கங்கள் இருந்து வருவதைத் தொல்லியல் அறிஞர்கள் கூறுவதைக் காணமுடிகின்றது. எனவேதான்,

"சைவத்தின் மேல்சமயம் வேறிலைஅதிற் சார்சிவமாம்
தெய்வத்தின்மேல் தெய்வம் இல்லெனும் ....."[1]

என்று சைவ எல்லப்ப நாவலர் இச்சமயத்தின் பெருமையைப் போற்றிப் பாடுகின்றார்.

**சிவம் எனும் சொல்**

'சிவம்' என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் உள்ளன. செம்பொருள், சிறப்பு, நன்மை, மங்கலம், மெய்ப்பொருள், சார்பு, முத்தி போன்ற பொருள்கள் சிவத்தைக் குறிப்பனவாகும்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு"[2]

"எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"[3]

---

1. சைவ எல்லப்ப நாவலர், திருவருணைக் கலம்பகம்.
2. திருக்குறள் 358.
3. மேலது 355.

"சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"[4]

என்னும் திருக்குறட்பாக்களால் இவ்வுண்மை விளங்கும்.

முழுமுதற் கடவுளைச் 'சிறந்தது' என்ற சொல்லால் தொல்காப்பியர் குறிப்பிடுவார்.[5] 'சிவ' என்பது சிவப்பு நிறத்தைக் குறிக்கும் உரிச்சொல்லாகும். ஆகவே 'சிவன்' என்பது சிவந்த நிறத்தை உடையவன் என்பது பொருளாகும்.

"சிவன் எனும் நாமம் தனக்கே உரிய செம்மேனி அம்மான்"

என்ற அடியும் இவண் எண்ணத்தகும்.

எனவே, செம்மை என்பது எதுவோ, அனைத்துக்கும் அப்பாலாய் நின்று அனைத்தையும் ஆக்குவது எதுவோ, உலக உயிர்களுக்கு நன்மை தருவது எதுவோ, எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பது எதுவோ, அது சிவம் எனப்படும். இதுபற்றி விளக்கிப் பேசின், வாழ்வின் எல்லை போதாது. எனவே, நாடெங்கும் நலம் பெற்று வாழ வழிகாட்டுவதே சிவநெறி என்ற சைவம் எனும் அளவோடு நிறுத்துவது நலம் பயக்கும்.

## தோத்திரமும் சாத்திரமும்

சைவ சமயத்தைச் சார்ந்த அருளாளர்கள், சிவபரம் பொருளை வாழ்த்தியும், சைவ சமயத் தத்துவக் கோட்பாடுகளை விளக்கியும் எண்ணற்ற நூல்களைச் செய்துள்ளனர். இவற்றுள், சிவபரம்பொருளை வாழ்த்துவதாக அமைந்தவை தோத்திர நூல்கள் எனவும், சைவ சமயக் கோட்பாடுகளை விளக்குவன சாத்திர நூல்கள் எனவும் கூறப்படும். எனவேதான் அப்பர் பெருமான்,

"சொல்லும் பொருளெலாம் ஆனார்தாமே
தோத்திரமும் சாத்திரமும் ஆனார்தாமே"[6]

என்று பாடினார் போலும்!

பன்னிரு திருமுறை நூல்கள் தோத்திரமாகவும், பதினான்கு சாத்திர நூல்கள் சாத்திரமாகவும் ஆன்றோரால் வகைப்படுத்தப் பட்டுள்ளன.

---

4. திருக்குறள் 359.
5. தொல்காப்பியம் பொருளதிகாரம் பொருளியல் 90.
6. அப்பர் தேவாரம் 6.78.5.

## திருமுறை - பெயர் வழக்கு

'திருமுறை' எனும் சொல் திரு, முறை என்னும் சொற்களின் சேர்க்கையாகும். 'முறை' எனும் சொல் உறவு, ஒழுக்கம், இடைச் சொல், ஒழுங்கு, கிராமம், குணம், தரம், பழமை, புத்தகம், முறைமை, முறையீடு, வரிசை எனப் பன்னிரண்டு பொருள்களைக் கொண்ட தாகும்.[7] வேதங்களும் முறைகள் என்றே அழைக்கப்பட்டதை,

"முறைபெறும் நாமம் தனக்கே யுரிய
முந்நான்கு மறைகள்"

என்றதனால் அறிய முடிகிறது.

'திரு' எனும் சொல் பல்வேறுபட்ட, பலவாறு விரிந்த பொருள்களைக் கொண்டது. அது சிவனையும், அவனருளையும் அவ்வருளால் கிடைக்கும் இன்ப நிலையையும் குறிக்கும். ஆகத் 'திருமுறை' என்ற சொல்லுக்கு 'உயரிய சிவஞானச் செல்வத்தை மக்கள் அடைதற்கு வழிகாட்டும் நூல்' என்பது பொருளாகும்.

'திருமுறை' என்னும் பெயர் மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்துக் கல்வெட்டுகளில்தான் முதன் முதலாகக் காணப் படுகின்றது.[8]

"பாடுந் திருமுறை பார்ப்பணி பாதங்கள்"[9]

என்று திருமூலரும்,

"திருமுறை எழுதுவோர் வாசிப்போர்"[10]

என்று சேக்கிழாரும் திருமுறை எனும் சொல்லையே பயன்படுத்து கின்றனர்.

## திருமுறைப் பகுப்புமுறை

கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய திருமுறை கண்ட புராணம் எனும் நூலில் திருமுறைகள் கண்டு தொகுக்கப்பெற்ற செய்தியை விளக்கமாகக் காணமுடிகிறது.

---

7. பிங்கலந்தை நிகண்டு 3963.
8. க. வெள்ளைவாரணன், பன்னிரு திருமுறை வரலாறு பகுதி 1 ப. 8.
9. திருமூலர், திருமந்திரம் 1040.
10. சேக்கிழார், பெரியபுராணம் 38.3.

திருநாரையூரில் பொல்லாப்பிள்ளையாருக்கு வழிபாடு செய்யும் ஆதிசைவக் குடும்பத்தைச் சார்ந்தவர் நம்பியாண்டார் நம்பியாவார். தில்லையில் செல்லரித்துக் கிடந்த ஏடுகளைத் தொகுத்து வரையறை செய்தவர் இவரே. திருமுறை கண்ட சோழனின் வேண்டுகோளுக்கு இசைந்தே இவ்வாறு செய்தார். இத்திருமுறை கண்ட சோழன் யார் என்பதில் அறிஞர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன.

நம்பியாண்டார் நம்பியும் திருமுறை கண்ட சோழ மன்னனும் இறைவன் அருளாணையின் வண்ணம் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் பிறந்தவரும், திருவெருக்கத்தம்புலியூரைச் சேர்ந்தவருமாகிய மாதரசியின் உதவியால் தேவாரப் பாக்களுக்குப் பண்ணடைவு செய்தார் என்பதையும் திருமுறை கண்ட புராணம் (32, 34) கூறுகிறது.

பன்னிரு திருமுறைகளும் 'முதல் திருமுறை, இரண்டாந் திருமுறை, மூன்றாந் திருமுறை' என எண்ணிக்கையின் பெயர் வைத்து வழங்கப்படும்.

மேலும் திருமுறைகள் முதலிலும் முடிவிலும் ஓங்காரத்தை உடையன. சேக்கிழார் 'மறை முதல் மெய்யுடன் எடுத்த எழுதுமறை' என்பதால் பிரணவத்தின் முதலாகிய ஓங்காரத்தைச் சிவசத்தியின் உண்மைச் சொரூபமாகிய தகர வித்தையின் அடையாளமாகிய 'த்' என்பதோடு சேர்த்து 'தோ' என்று தொடங்கியதாகக் குறிப்பிடுவ துண்டு. பன்னிரண்டாம் திருமுறையில் 'நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்' என்று முடிவதனையும் இதனோடு சேர்த்துத் திருமுறை முழுவதுமே வேதமூலமாகிய பிரணவத்துள் அடங்கியதாகக் கூறுவது முண்டு.[11]

## திருமுறை நூல்கள்

சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் அருளிய தேவாரப் பாக்கள் முதல் ஏழு திருமுறைகளாக அமைந்துள்ளன. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையாக உள்ளன. திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பதின்மர் பாடிய திருவிசைப் பாமாலை

---

11. சம்பந்தர் தேவாரம் முதல் திருமுறைப் பதிப்பு, தருமபுர ஆதீனம், ப. 5.

அவற்றையடுத்து ஒன்பதாம் திருமுறையாக அமைந்துள்ளது. திருமூலர் அருளிய திருமந்திரம் பத்தாம் திருமுறையாகும். திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர் கோன், பரணதேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், திருவெண் காட்டடிகள், நம்பியாண்டார் நம்பி ஆகிய பன்னிருவர் அருளிய நாற்பது சிற்றிலக்கியங்கள் பதினொராம் திருமுறையாகும். சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம் எனும் பெரிய புராணம் பன்னிரண்டாம் திருமுறையாகும்.

## திருமுறை நூல்களின் காலம்

பன்னிரு திருமுறைகளில் உள்ள திருப்பாடல்களின் மொத்த எண்ணிக்கை ஏறத்தாழப் பதினெண்ணாயிரம் ஆகும். இவற்றைப் பாடிய அருளாளர்கள் இருபத்தெழுவர். இவர்களுள் காலத்தால் முற்பட்டவர்கள் திருமூலரும் காரைக்காலம்மையாரும் ஆவர். காலத்தால் பிற்பட்டவர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் பெருமான் ஆவர். எனவே கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையிலுமுள்ள காலத்தைச் சைவத் திருமுறைகள் எழுந்த காலமாகக் கொள்ளலாம்.

## பண்பாடு

மனிதனை விலங்கிலிருந்து வேறுபடுத்துவது பண்பாடாகும். இப்பண்பாடு காலத்திற்குக் காலம், நாட்டுக்கு நாடு, இனத்திற்கு இனம் வேறுபடும். பண்படுவது பண்பாடாகும். பண்படுதல் என்றால் சீர்ப்படுதல் எனவும், பண்படுத்தல் என்றால் சீர்படுத்துதல் எனவும் பொருள்படும். வேளாண்மை செய்வதற்கு ஏற்றவாறு நிலத்தைச் செப்பம் செய்வது பண்படுத்தல் எனப்படும். நிலத்தை உழுது பண்படுத்தி விளைச்சலுக்கு ஏற்றவாறு செய்யும் தொழில் Agriculture எனப்படும். Agri என்ற சொல் Ager என்ற இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து ஆங்கிலத்திற்கு வந்தது. Ager என்றால் நிலம், Culture என்றால் பண்படுத்தல். ஆயின் Agriculture என்றால் நிலப் பண்பாடு ஆகும். எனவேதான் பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை, 'நிலத்தைப் பண்படுத்துவது போல இனத்தைப் பண்படுத்துவது பண்பாடு' என்றார்.

அமெரிக்கக் கலைக்களஞ்சியம் 'Culture' என்பதற்கு,

"எண்ணங்கள், உணர்வுகள், மதிப்பீடுகள், குறிக்கோள்கள், செயல்முறைகள், இயல்புகள் முதலான பல்வேறு எண்ணற்ற தன்மைகளை உள்ளடக்கியது"

எனப் பொருள் தருகிறது.

பண்பாடு என்பது தலைமுறை தலைமுறையாக அறிவு சார்ந்த நிலையில் கற்றுணர்ந்த நடத்தை முறைகளைக் குறிக்கும். மனிதன் பிறந்த நாள் முதல் அவன் இறக்கும் நாள் வரை அவனது பண்பாடு சமுதாயத்தோடு இரண்டறக் கலந்திருக்கும்.

இக்காலத்தில் சாதாரண நிலையில் வாழ்ந்து வரும் தமிழர் யாவராயினும் அவரது அன்றாட நிகழ்வில் கருத்துப் பரிமாற்றத்தின் பொழுது நிச்சயமாகக் கேட்கும், பயன்படுத்தும் முக்கியத் தொடர்களில் தமிழ்ப் பண்பாடு என்பதும் ஒன்று. திரைப்படம், வானொலி, தொலைக்காட்சி, நாளிதழ்கள் முதலான பல்வேறுபட்ட மக்கள் தொடர்புக் கருவிகளில் தமிழ் மக்களின் ஈடுபாட்டை, விருப்பு வெறுப்புகளை, சார்பு சார்பின்மைகளைச் சுட்டுவதற்கு இத்தொடர் பெரிதும் பயன்படுகிறது. உண்மையில் வரலாற்றாய்வுக் கண்கொண்டு பார்ப்போமேயானால் 'பண்பாடு' எனும் சொல்வழக்கு, கடந்த ஒரு நூற்றாண்டாகத்தான் வழக்கில் உள்ளது என்பது பலருக்கு வியப்பைத் தரலாம். ஆயின் பண்பாடு எனும் சொல் குறிக்கும் பொருள்கள் சங்க இலக்கியப் பாடல்களில் பல்கி வந்துள்ளன. அதேபோன்று பண்பு, பாடு ஆகிய சொற்கள் தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. 'பண்பு' என்றால் நல்லியல்பு எனப் பொருள்படும். 'பாடு' என்பதற்குத் தமிழ் அகராதிகளில் 33 பொருள்கள் காணப்படுகின்றன. அவற்றுள் முறைமை, செவ்வி, பயன், உலக ஒழுக்கம், குணம் ஆகிய பொருள்கள் பண்பாட்டோடு தொடர்புடையனவாகத் திகழ்கின்றன.

இன்றைக்குத் தமிழ்ப் பண்பாடு நமக்கு உயிர் போன்ற ஒரு தொடராக, சொல்லாக விளங்குகிறது. பத்திமை இலக்கியம் முதல் பகுத்தறிவு இலக்கியம் வரை, பரத நாட்டியம் முதல் தெருக்கூத்து வரை, வானளாவிய கோபுரம் முதல் சாதாரணக் கொட்டகை வரை, திருத்தக்க தேவர் முதல் வீரமாமுனிவர் வரை, சாத்தனார் முதல் உமறுப்புலவர் வரை பலவற்றையும், பலரையும் இணைத்து ஒருமை காண்பதற்கும், மனித நேயம் வளர்ப்பதற்கும், சமய நல்லிணக்கம் பேணுவதற்கும் இச்சொல் உதவுகிறது.

சமயம், இனம், சாதி, மொழி முதலான அனைத்தையும் கடந்து ஒருமைப்பாட்டுக்கு இச்சொல் பயன்படுகிறது. இவ்வுலக வாழ்வில் தனி மனிதனுக்கும் சமுதாயத்துக்கும் ஆழமான, அகலமான உறவை என்றென்றைக்கும் அகலாமல் பேணிப் பாதுகாக்கும் ஒழுக்கம் பண்பாடாகும். மனித வாழ்க்கை மிகவும் அருமையானது. இதன் அருமையறிந்து பயன்படுத்துவோர் மிகச் சிலரேயாவர். இன்றைய

உலகியலில் பலர் பயனை எதிர்பார்த்தே வாழ்ந்து வருகின்றனர். இதற்கு எவரும் விதிவிலக்காகத் திகழ்வதில்லை. காதல், கணவன் - மனைவி வாழ்க்கை, நட்பு, உறவு முதலிய எல்லா இடங்களிலும் 'உன்னால் எனக்கென்ன இலாபம்' என்ற கேள்வியே கேட்கப்படுகிறது. பயன்பட விரும்புவது இல்லை; பயனடைதலைவிடப் பயன்படுதலே சிறப்புடைய வாழ்க்கை. நீதியும் அறமும் உடையோர், மற்றவர்கள் பயன்கொள்ளத்தக்க வகையில் வாழ்வர். இதனைப் 'பயனுடையார்' என்று திருக்குறள் கூறுகிறது.

இவ்வுலக வரலாற்றில் மனித குலத்தின் வரலாறு இடையீடின்றித் தொடர்வதற்கு அடிப்படையாக இருந்தது எது? பேரரசுகளா? போர்க்களங்களா? அறிவாற்றல்களா? இல்லை. இல்லை! இவை அனைத்தும் பல சமயங்களில் மனித உலகத்தை அழிக்கவே முயன்றன. காலத்தால் என்றும் அழியாமல் மனித உலகத்தைக் காப்பாற்றியவர்கள் சான்றாண்மையின் முதிர்ந்த பண்பாடுடையவர்களேயாவர்.

இயேசுபிரானின் சிலுவையில் தொங்கிச் சிந்திய செந்நீர் பண்பாட்டின் சின்னம். செந்நீரால் சிலுவை கழுவப் பெறவில்லை. பாவிகளின் பாவம் கழுவப் பெற்றது.

நபிகள் நாயகத்தின் புனிதத் தியாகம் பாவத்தைக் கழுவி மனிதகுல வரலாற்றுக்குப் புத்துயிர் ஊட்டியது.

புத்தரின் அறிவுரைகள் பண்பாட்டின் பொழிவு. அது உலகத்தைத் தொடர் வரலாற்றாக்கியது. அப்பரடிகளின் தண்கருணை, ஆட்சி மேலாதிக்கத்தின் கொடிய இரும்புப் பிடியை உடைத்து, கொடிய நீற்றறையைக் குளிர் கருவியாக்கி வரலாற்றை வளர்த்தது.

நம் தலைமுறையில் அண்ணல் காந்தியடிகள் பகையையும், போரையும் நீக்கிப் பண்பாட்டு வழியில் நம்மைச் செலுத்தினார்.

இத்தகு பண்புடையோர் இருப்பதனாலேயே இந்த உலகம் நிலைபெற்று இன்றும் இயங்கிக் கொண்டிருக்கிறது. எனவேதான் 'உண்டாலம்ம இவ்வுலகம்' என்று சங்கப் புலவன் போற்றிப் பாடினான்.

**பண்பாடு - விளக்கம்**

'பண்பாடு' என்பது யாது? இதற்குப் பலரும் பலவிதமாக விளக்கம் கூறுவர். மக்கள் அறிவு, நலம், ஒழுக்க உயர்வு, கொள்கை

நலம், பண்பு நலம், வாழ்க்கை நலம் ஆகியன மென்மேலும் திருந்திய நிலையே பண்பாடு என்பர் அறிஞர்.

> "ஒருவன், தன் குண நலன்களை நிரப்புவதிலும், தன்னைச் சூழ்ந்த சமுதாயத்தின் நலன்களைப் பேணுவதிலும் பேரவாக் கொண்டிருக்கும் நிலையே பண்பாடு எனப்படும்"

என்பது அறிஞர் மாத்யூ ஆர்னால்டு என்பாரின் கருத்தாகும்.

> "பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்"[12]

என்று கலித்தொகை கூறும். பிறரது தன்மையை அறிந்து, அதற்கேற்ப வாழ்தலே பண்பு என்பது இதன் பொருள். இத்தொடருக்கு "மக்கட் பண்பு என்று சொல்லப்படுவது உலக வழக்கம் அறிந்தொழுகுதலை" என்று நச்சினார்க்கினியர் விளக்கம் தருகின்றார். தெய்வப்புலவர் திருவள்ளுவர் பண்புடைமையின் சிறப்பை அறிந்து தனியாக ஓர் அதிகாரத்தையே வகுத்துரைத்தார்.

> "அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை முதலான சால்புகளும், பெருமையும் கொண்டு, அவற்றில் வழுவாது நின்றே, எல்லார் இயல்பும் அறிந்து, ஒத்து ஒழுகுதலே பண்புடைமை"

என்பர் பரிமேலழகர். நீதியையும் அறத்தையும் விரும்புவது பண்புடையாரது இயல்பு. அத்தகையோராலேதான் இவ்வுலகமே நிலைத்து நிற்கின்றது; இல்லையேல் இவ்வுலகம் என்றோ, மண்ணோடு மண்ணாகப் போயிருக்கும் என்கின்றார் திருவள்ளுவர்.

> "பண்புடையார் பட்டுண் டுலக மதுவின்றேன்
> மண்புக்கு மாய்வது மண்"[13]

என்பது அவர் கூற்று.

பண் என்ற சொல்லுக்குப் பொதுவாக இசை, உருவாக்குதல், செய்தல் முதலான பொருள்கள் அமைந்துள்ளன.

> "பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்ணென்னாங்
> கண்ணோட்ட மில்லாத கண்"[14]

---

12. <u>கலித்தொகை</u> 133.
13. <u>திருக்குறள்</u> 996.
14. <u>மேலது</u> 573.

எனும் இத்திருக்குறளில் இடம்பெறும் 'பண்' என்ற சொல்லுக்குப் பாடலில் உள்ள இசைவு என்பது பொருள். பாடலில் உள்ள இசைவு சரியாக அமைந்தால்தான் அதை நாம் பண் என்று கூற முடியும். எனவே பண்படுதல் என்பது இசைவுபடுதல் என்றும் பண்படுத்துத லாவது இசைவுபடுத்துதல் என்றும் பொருள் தரும். பலர் ஒன்று சேர்ந்து இசைந்து வாழும் வாழ்க்கையைப் பண்பட்ட வாழ்க்கை என்றும், அவர்களைப் பண்பட்ட மக்கள் என்றும், அவ்வாறு இசைந்து ஒழுகுதலைப் பண்பாடு என்றும் கொள்வது பொருந்தும்.

> "பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப் பாங்கின் வெளிப்பாடு பண்பாடாகும்"

என்பார் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார்.

கணிதவியலில் 'சுன்னம்' (Zero) என்பது எவ்வளவு முதன்மை யானதோ அவ்வாறே மானிடவியலிலும் 'பண்பாடு' என்பது முதன்மையாகிறது என்பார் போவாஸ்.

மக்கள் தலைமுறை தலைமுறையாகக் குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தை முறைகளும், பழக்கங்களும், மரபுகளும் சேர்ந்த ஒரு தொகுதியே பண்பாடு ஆகும். டைலர் என்பார் 'தொன்மப் பண்பாடு' (Primitive Culture) எனும் நூலில்,

> "பண்பாடு என்பது அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், வழக்கம் முதலானவையும், மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினராக இருந்து கற்கும் பிற திறமைகளும், பழக்கங்களும் அடங்கிய முழுமைத் தொகுதியாகும்"[15]

என்று பண்பாட்டுக்கு ஒரு வரையறையைக் குறிப்பிட்டுள்ளார்.

இதுவே இக்காலத்தில் மிகவும் புகழ் பெற்றதாகவும், பெருவழக்காகவும், அனைவராலும் பயன்படுத்தக் கூடியதாகவும் உள்ளது. இவர்தான் 1871இல் 'பண்பாடு' என்ற சொல்லை முதன்முதலில் பயன்படுத்தியவர் என்று கூறுவர் அறிஞர்.

> " 'பண்பாடு' என்பது குறிப்பிட்ட ஒரு மக்கள் கூட்டம் தனது சமூக, வரலாற்று உயர்ச்சியினால் தோற்றுவித்துக் கொண்ட

---

15. "Culture ...... is that complex whole which includes knowledge, belief, art, morals, law, custom, and any other capabilities and habits acquired by man as a member of society."

> பௌதீகப் பொருட்கள், ஆத்மார்த்தக் கருத்துகள், மத நடைமுறைகள், சமூகப் பெறுமானங்கள் ஆகிய யாவற்றினதும் தொகுதியாகும். ஒரு கூட்டத்தினரின் தொழில்நுட்ப வளர்ச்சி, உற்பத்தி முறைமை, உற்பத்தி உறவுகள், கல்வி, விஞ்ஞானம், இலக்கியம், கலைகள், நம்பிக்கைகள் ஆகியனவற்றின் தொகுதியாகும்"

என்பார் கா. சிவத்தம்பி.

பண்பாடானது நாடு, மொழி, இனம், இடம், மக்கள் சார்ந்தவையாக இருந்து வருகின்றன.




மேலும் பண்பாட்டை அகப்பண்பாடு என்றும், புறப் பண்பாடு என்றும் இரண்டாகப் பிரித்துப் பார்ப்பதுண்டு.

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, மெய் யுணர்வு, தெய்வ நம்பிக்கை, அருள், புலனடக்கம், நன்றி, சீலம் முதலிய அடிப்படையில் உணர்வது அகப்பண்பாடாகும்.

உணவு, உடை, உறையுள் முதலிய அடிப்படையில் காணக் கூடியது புறப்பண்பாடாகும். இது ஒருவகையில் இன்றைய நாகரிகத்தில் அடங்கும்.

**பண்பாடும் நாகரிகமும்**

தமிழில் மிகப் பழங்காலந்தொட்டே பண்பாடு, நாகரிகம்

ஆகிய இரு சொற்களும் இலக்கியத்திலும் வாழ்விலும் இடம்பெற்று வருகின்றன.

கிராமத்திலிருந்து அரும்புவது பண்பாடு. நகரத்திலிருந்து புறப்படுவது நாகரிகம். அகத்தின் அழகு பண்பாடு. புறத்தின் அழகு நாகரிகம். கிராமத்தவர்கள் நகரத்திற்கு வந்தால் பண்பாடு நகரத்தில் பரவவேண்டும். நகரத்தவர் கிராமத்திற்குச் சென்றால் நாகரிகம் பரவ வேண்டும். கிராமத்தவர்கள் சிலர் நகரத்திற்குச் சென்றால் நாகரிக மோகத்தில் பண்பாட்டை விட்டு விடுகின்றனர். ஆனால் நகரத்தவர் கிராமத்திற்குச் சென்றால் நாகரிகத்தை விட்டுவிடமாட்டார்கள். பண்பாடும் நாகரிகமும் ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் போன்றன. பண்பாட்டில் நாகரிகமும் நாகரிகத்தில் பண்பாடும் விளக்கமுற வேண்டும். பண்பாடும் நாகரிகமும் ஒட்டிப்பிறந்த இரட்டைக் குழந்தைகள். பண்பாட்டிற்கும் நாகரிகத்திற்கும் அடையாளங்கள் இருக்கின்றன. உணர்வு அடையாளத்தில் பண்பாடும், உருவ அலங்கார அடையாளத்தில் நாகரிகமும் கண்டு கொள்ளப்படும். சங்க காலத்தில் நாகரிகம் என்ற சொல் நற்பண்பைக் குறித்தது. நற்றிணையில் வரும்,

> "முந்தை யிலிருந்து நட்டோர் கொடுப்பின்
> நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்"[16]

என்ற பாடலில் 'நாகரிகம்' என்ற சொல் இடம் பெற்றுள்ளது. இதே கருத்தைத் திருவள்ளுவரும்,

> "பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர்"[17]

என்ற திருக்குறளில் விளக்கியுள்ளார். இதில் இடம் பெற்றுள்ள 'நாகரிகம்' என்ற சொல்லுக்குக் 'கண்ணோட்டம்' என்று பொருள். கண்ணோட்டமாவது தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியவை மறுக்க மாட்டாமை, பொறுத்தல் எனப் பலவகைகளில் விளக்கப் பெறுகின்றது. அறம், பொருள், இன்பத்தின்கண் நற் குணங்கள் பலவும் உடைமை என நாகரிகத்திற்கு மணக்குடவர் பொருள் தருகின்றார். அத்தகைய நாகரிகம் உடையவர் உற்றவர் நஞ்சினையே கொண்டு வந்து தரினும், அதனை உண்டு சாவாது, அவரோடு அமைந்து வாழ்வர் என்பது திருவள்ளுவர் கூறும் கருத்து.

---

16. *நற்றிணை* 355.
17. *திருக்குறள்* 580.

ஆகவே நாகரிகம் என்பது நம்பிக்கையின் அடிப்படையில் உற்றவர் தீமை இழைக்க மாட்டார் என்ற உறுதியை உணர்த்துகிறது. பழகியோர் கொடுக்கின்ற நஞ்சை உண்பதாகிய செயல் பண்பாடு எனக் கருதப்பட்டாலும், அச்சொல்லால் குறிக்காமல் அன்று வழக்கிலிருந்த 'நாகரிகம்' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார் என்பது அறியத்தக்கது.

சங்க காலத்தில் பண்பாடு என்னும் சொல் வழக்கில் இல்லாவிட்டாலும் அப்பொருள் குறித்தற்கு நாகரிகம், பண்பு, சால்பு ஆகிய சொற்கள் வழக்கில் இருந்தன. இன்று பெரும்பான்மையும் நாகரிகம், பண்பாடு ஆகிய இருசொற்களும் ஒரு பொருளைக் குறிக்கப் பயன்பட்டாலும் இரண்டிற்கும் இடையே நுட்பமான வேறுபாடு உள்ளது. பண்பாடு உள்ளத்தோடு தொடர்புடையது. உள்ளத்தின் செம்மை உயர்வு பண்பாடு எனத்தகும். உள்ளத்திற்குப் புறம்பான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றின் செம்மை நாகரிகம் ஆகும். பண்பாடு என்பது பழக்க வழக்கங்களோடு நெருங்கிய தொடர்புடைய ஒரு வாழ்க்கை முறை. வாழ்க்கை நெறி முறையின் வெளிப்பாடு நாகரிகம் எனப்படும். புறத்தோற்றத்தில் ஏற்படும் வளர்ச்சி நாகரிகம் என்றால் அகப்பண்புகளிலே சிறந்து விளங்குவது பண்பாடு ஆகும்.

## அன்பு நெறி

உயிருக்கு இயல்பான பண்புகளுள் அன்பு என்பதுவும் ஒன்று. இந்த அன்பின் பெருமையைப்பற்றிக் கூறாத சமயங்களே இல்லை எனலாம். திருமுறை பாடிய அருளாளர்கள் எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செய்தல் வேண்டும் என்றனர். அதுவும் இறைவன் மீது உண்மை அன்போடு அகம் குழைந்து பக்தி செலுத்தினால் இறைவனே அன்பு செலுத்தும் உயிர்கள் இருக்கும் இடம் நாடி வருவான்.

"இடர்களை யாரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும் – சுடருருவில்
என்பறாக் கோலத்து எரியாடும் எம்மானார்க்கு
அன்பறா தென்னஞ் சவர்க்கு"[18]

என்று காரைக்காலம்மையார் கூறுவது இவண் நோக்கத்தக்கது. காரைக்காலம்மையார் வாழ்வின் நோக்கமானது ஆலங்காட்டீசன் திருவடியில் அமர்ந்த அவன் ஆடலை அனுபவிப்பதேயாகும்.

---

18. காரைக்காலம்மையார், <u>அற்புதத் திருவந்தாதி</u> 2.

சேக்கிழார் இதைக் கூறும்போது இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார் என்றுதான் பாடுகின்றார்.

> "இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின்வேண்டு கின்றார்
> பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
> மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்து பாடி
> அறவாநீ ஆடும் போதுன் அடியின் கீழிருக்க"[19]

மதுரையில் ஆவணி மாதத்தில் நடைபெறும் ஆவண மூலவிழா நரியைக் குதிரையாக்கியதும் குதிரையை நரியாக்கியது மாகிய நினைவை உண்டுபண்ணும் விழாவாகும். இறைவன் பிட்டுக்காக மண் சுமந்ததை எண்ணியே இவ்விழா நடைபெறுகிறது. வந்தியின் அளவிலா அன்பையும் இறைவனின் அருள் திறத்தையும் வைத்துத்தான் இவ்விழா நடைபெறுகிறது. நரி குதிரையானதும் குதிரை நரியானதும் நல்ல செயல் இல்லை. நரி தந்திரம் உடையது. அதாவது சூழ்ச்சி செய்யும் திறமுடையது. குதிரை கபடு உடையது. அதாவது வஞ்சகம் உடையது.

அன்பினால் மட்டுமே இறைவனை அடைய முடியும். வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்துள்ள இறைவனை நாம் மனம் வாக்கு காயம் என்ற மூன்றாலும் தூயவர் களாய்ப் பக்தி செய்ய வேண்டும். அன்பு, ஒழுக்கம், ஆசாரம் முதலிய பண்புகளால் நம் மனத்தைத் தூய்மை அடையச் செய்ய வேண்டும். கடவுளிடத்தில் அன்பு செலுத்துவதற்குச் சாதி தேவையில்லை. மதம் தேவையில்லை மக்கள் பிறப்பாலும், சிறப்பாலும், பிறவாற்றாலும் வேறுபடினும் தூய உள்ளத்துடன் இறைவன்மீது அன்பு செலுத்தி னால் அவன் அருள் கிட்டும். இதைத்தான் சேக்கிழார் அருளிய பெரியபுராணம் கூறுகிறது

கண்ணப்பரின் செயல் அன்பின் எல்லை கடந்த செயலாகும் தம்மை மறந்து தலைவன் தாளுக்கு ஆட்படும் அன்பராலேயே அது முடியும். கண்ணப்பருடைய அன்பின் திறத்தை வியந்து,

> "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
> என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்கொண்டு அருளினான்"[20]

என்று மணிவாசகர் ஆனந்தம் கொள்வார்.

---

19. சேக்கிழார், *பெரியபுராணம்* காரைக்காலம்மையார் புராணம் 60.
20. மாணிக்கவாசகர், *திருவாசகம்* 10.4.

அன்பு இல்லாத ஒருவன் மனிதனாக மாட்டான். அன்பில்லாத ஒருவனைத் திருவள்ளுவர் பிணம் என்றுகூடச் சொல்ல விரும்பவில்லை. பிணம் கூடப் பலருக்குப் பணம் தரச்செய்து உதவு கின்றது. ஆதலால் அன்பில்லாத ஒருவனை என்புதோல் போர்த்த உடம்பு என்கிறார்.

"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு"[21]

என்பது திருக்குறள்.

## முடிவுரை

திருமுறைகளுள் நுழைந்தால் இத்தகைய அரிய பண்பாடுகள் பலவற்றைக் கண்டு இன்புறலாம். சைவ அருளாளர்கள் அருளிய தீந்தமிழ்ப் பனுவல்களை நாளும் ஓதி உணர்ந்தால் இம்மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம். முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளின், பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனின் புகழை நாளும் பரவுவோம்! கலிமதுரை மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு புண்சுமந்த பொன்மேனியனின் திருவடிக்கே அகங்குழைவோம்! பூமாலை புனைந்தேத்துவோம்! புகழ்ந்துரைப்போம்! நல்லதொரு பரிபக்குவத்தை நாம் அடைவதற்கு முயற்சிப்போம்!

21. திருக்குறள் 80.

# 4

# திருவாலங்காட்டுத் தரிசனம்*

சைவம் போற்றும் மகளிருள் இறைவனைப் பாடி மகிழ்ந்து பரவித் திருமுறையைத் தந்த சிறப்பு காரைக்காலம்மையார் ஒருவருக்கே உண்டு. எம்பெருமானால் 'அம்மையே!' என்றழைக்கப்பட்ட பெருமையும் இப் புனிதவதியாருக்கே உண்டு. இறையடியார்களுள் அம்மையாரைப் போன்று வரம் கேட்டாரும் பேறு பெற்றாரும் வேறு எவரும் இலர். அம்மையார் அருளிய பாடல்களுக்கு அடிப்படையாக, கருவாக அமைந்தது திருவாலங்காட்டுத் திருநடனமும், தரிசனமுமே யாகும். இது அம்மையாருக்கு 'ஞான தரிசனம்'. இத்தரிசனத்தை இக்கட்டுரை ஆராய்கிறது.

## இறைவனாடிய எழுவகைத் தாண்டவம்

சிவபிரான் செய்தருளும் தாண்டவங்கள் 108 என்றும், 64 என்றும், 9 என்றும், 7 என்றும் கூறுவதுண்டு. சங்க இலக்கியங்கள், நிகண்டுகளில் 3 தாண்டவங்கள் மட்டுமே கூறப்படுகின்றன. ஆயின் பிற்காலத்திலேயே 108 தாண்டவங்களாக வளர்ச்சி அடைந்தது. தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் 108 தாண்டவங்களைக் குறிக்கும் வகையில் இராசராச சோழன் சிற்பங்களைச் செதுக்கி வைத்துள்ளான். சிவபிரான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களைச் செய்கிறார். இந்த ஐந்து செயல்களைக் காட்டும் தாண்டவங்கள் ஏழு என்று நூல்கள் கூறுகின்றன. இசை நூல்களில் கூறப்படும் ச, ரி, க, ம, ப, த, நி எனும் ஏழு வகையான இசையிலிருந்து இத்தாண்டவங்கள் தோன்றின.

"ஒன்றின்பின் ஒன்றாய் ஒலித்தெழுந்தனவாய்
ஓதும் அவ்வேழ் சுரங்களினால்
நன்று நம்மிடையே எழுவித நடனம்
நலம் பெறத் தோன்றின"[1]

என்று திருப்புத்தூர்ப் புராணம் கூறுகிறது. ஆனந்த தாண்டவம்,

---

* முதலாவது தெய்வச் சேக்கிழார் திருமுறை மாநில மாநாடு தெய்வச் சேக்கிழார் மன்றத்தின் சார்பில் காரைக்காலில் 4,5,6–01–2002இல் நடைபெற்றபோது படிக்கப்பெற்ற கட்டுரை, பக். 52–54.

1. திருப்புத்தூர்ப் புராணம் கௌரி தாண்டவச் சருக்கம் 9.

சந்தியா தாண்டவம், கௌரி தாண்டவம், திரிபுர தாண்டவம், காளி தாண்டவம், முனி தாண்டவம், சங்கார தாண்டவம் என ஏழு தாண்டவங்களின் பெயர்களையும் இப்புராணம் குறிப்பிடுகிறது. மேலும் தில்லைப் பொன்னம்பலத்தில் ஆனந்த தாண்டவத்தையும், மதுரை வெள்ளியம்பலத்தில் சந்தியா தாண்டவத்தையும், பாண்டி நாட்டுத் திருப்புத்தூர் சிற்சபையில் கௌரி தாண்டவத்தையும், திருக்குற்றாலத்துச் சித்திரசபையில் திரிபுர தாண்டவத்தையும், திருவாலங்காட்டு இரத்தினசபையில் காளி தாண்டவத்தையும், திருநெல்வேலி தாம்பிரசபையில் முனி தாண்டவத்தையும், இருண்ட நள்ளிரவில் சங்கார தாண்டவத்தையும் இறைவன் செய்தருளுகிறார் என்று புராணம் கூறுகிறது.

இவற்றுள் ஐந்து செயலையும் தனித்தனியே காட்டுகின்ற தாண்டவங்கள் ஐந்து; ஐந்தையும் சேர்த்து ஒரே தடவையில் செய்கிற ஆனந்த தாண்டவத் (நடராச வடிவம்)தைச் சேர்த்துத் தாண்டவங்கள் ஆறாயின.

உயிர்கள் நல்வினை, தீவினை எனும் இரண்டுவிதக் கர்மங்களைச் செய்கின்றன. நல்வினைக்கேற்ப இன்பங்களையும், தீவினைக்கேற்பத் துன்பங்களையும் அனுபவிக்க வேண்டும். காத்தல் செயலைச் செய்கிற இறைவன், உயிர்கள் செய்த இருவினைகளுக்கேற்ப இன்பம் காத்தல், துன்பம் காத்தல் என்ற இருவிதக் காத்தல் தொழிலைச் செய்கிறார். எனவே இறைவன் செய்யும் ஐந்தொழில் ஆறாயிற்று. ஏற்கெனவே உள்ள ஆறு தாண்டவங்களோடு இதுவும் சேர்ந்து ஏழாயின.

**ஊர்த்துவ தாண்டவம்**

அருளல் செயலாகிய இத்தாண்டவம் காளியுடன் இறைவன் ஆடினதால் காளி தாண்டவம் என்றும், மிக வேகமாகச் சுழன்று ஆடுவதனால் சண்ட தாண்டவம் என்றும், ஒருகாலைத் தலைவரையில் மேலே தூக்கி ஆடுவதனால் ஊர்த்துவ தாண்டவம் என்றும், வீடு பேற்றைத் தருவதாகிய அனுக்கிரகத்தின் பொருட்டுச் செய்வதனால் அருள்நட்டம் அல்லது அனுக்கிரகத் தாண்டவம் என்றும் இதற்கு வேறு பெயர்கள் கூறப்படுகின்றன. லலாட திலகம் என வடமொழியில் இந்நடனம் அழைக்கப்படுகிறது.

நடனக்கலையில் சிறந்து விளங்கிய காளிக்கும், சிவபிரானுக்கும் இடையே நடனப்போர் நிகழ்ந்த போது இறைவன் இத்தாண்டவத்தை நிகழ்த்தியதாகவும், காளி இத்தாண்டவத்தைச் செய்ய முடியாமல்

தோல்வியுற்றதாகவும் தொன்மக் கதை உள்ளது. மேலும் இத் தாண்டவம் நிகழ்ந்த போது கார்க்கோடகன் என்னும் பாம்பரசனும். சுனந்தர் என்னும் முஞ்சிகேசி முனிவரும் இதனைக் கண்டு பேறு பெற்றனர் எனும் தொன்மமும் உண்டு.

அம்மையார் இல்வாழ்க்கையைத் துறந்து இறையருளால் பேய் வடிவம் வேண்டிப் பெற்றார். தலையினால் நடந்து கயிலை சென்றவருக்கு அருள் நல்கிய இறைவனிடம்,

"பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி
அறவா நீஆடும் போதுஉன் அடியின் கீழிருக்க வேண்டும்"

என்கின்றார். எம்பெருமானும் தென்திசையிலுள்ள 'பழையனூர்' எனும் பழம்பதியாகத் திகழும் திருவாலங்காட்டில் ஆடும் நடனத்தைக் கண்டு களிக்க அருள் செய்தார்.

காளி காணுமாறு மெய்யெலாம் நீறு பூசிக் கொண்டு சுடுகாட்டை அரங்காகக் கொண்டு பேய்க்கணங்கள் சூழ்ந்து நிற்க ஆடும் ஆட்டத்தை அம்மையார் காண்கின்றார். உலகியல் வாழ்க்கை வாழ்வோர் கண்களுக்கு இந்நடனம் அச்சத்தையே தரும். ஆயின் அம்மையார் திருவாலங்காட்டில் கண்ட ஊர்த்துவ தாண்டவக் காட்சி உண்மையில் ஞானம் கைவரப்பெற்றவர்களுக்கே அமையும். ஆலங் காட்டை ச் சிவபிரான் சுட்டியதற்குக் காரணம் அம்மையாரின் மனப் பக்குவமே இத்தாண்டவத்தைக் கலையாகப் படைத்த பரதர், முப்புரம் எரித்ததையே இவ்வாறு அமைத்ததாகக் கூறுவர். இதை வடமொழியில் டிமம், லலாட திலகம் என்பர். தமிழில் கொடுகொட்டி என்பர்.

இத்தாண்டவ உருவத்தில் சிவனுக்கு 4, 8, 16 கைகள் அமைப்பது உண்டு. ஆனால் 4 கைகளைத்தான் அமைப்பது வழக்கமாகக் காணப் படுகிறது. காலின்கீழ் முயலகன், வலக்கை இரண்டில் துடி, அபய முத்திரை காணப்படும். இடக்கை இரண்டில் ஒருகையில் தீச்சுடரும், மற்றொரு கையைத் தலைக்கு மேல் உயரத் தூக்கி அகங்கையைக் கவிழ்த்துத் தூக்கிய திருவடிக்கு மேல் அமைத்துக் காணப்படும்.

ஒருகாலை ஊன்றி மறுகாலைத் தூக்கி ஆடுவது போல் இவ்வுருவம் அமைக்கப்படுவது வழக்கம். தூக்கிய திருவடியில் அருளல் செயலும், ஊன்றிய திருவடியில் மறைத்தல் செயலும் நிகழ்கின்றன

ஐப்பசித் திங்களில் முழுநிலா நாளில், ஆகமத்தில் கூறிய முறைப்படி இறைவனை வணங்கி, இத்தாண்டவத்தைக் காண்பவருக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களும் கிடைக்கும் என்று காரணாகமம் கூறுகிறது.

## திருவாலங்காட்டுத் தாண்டவம்

திருவாலங்காட்டில் அமைந்துள்ள ஊர்த்துவத் தாண்டவத்தில் இறைவனுக்கு எட்டுத் திருக்கரங்கள் உள்ளன. இடக்காலைத் தலை வரையில் உயரத் தூக்கி ஆடுகின்றார். திருவடியின்கீழ் முயலகன், பாம்பு காணப்படுகின்றன. தாண்டவம் மிக வேகமாக நிகழ்வதை அவிழ்ந்து பறக்கும் சடைகள் காட்டுகின்றன. கைகளில் துடி, தீச்சுடர், அபயமுத்திரை, திரிசூலம், பாம்பு ஆகியவை காணப்படுகின்றன.

அம்மையார் அருளிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள், திருவிரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி ஆகிய பனுவல்களில் இறைவனின் திருநடனக் காட்சியைப் பல பாடல்களில் கூறியுள்ளார். ஆயின் அம்மையார் திருவாலங்காட்டில் இறைவன் புரியும் திருக்கூத்தைக் கண்டு தொழுது, 'கொங்கை திரங்கி', 'எட்டி இலவம்' என்னும் இரண்டு மூத்த திருப்பதிகங்களைப் பாடினார் என்பது வரலாறு காட்டும் உண்மை. இவ்விரு பதிகங் களிலும் அம்மையார் கண்ட திருக்கூத்தை இவண் காண்பது பொருத்த முடையதாக இருக்கும்.

மாலையில் ஆடுகின்ற நடனம் 'அந்தி நிருத்த'மாகும். இதையே அம்மையார்,

> "அந்தியில் மாநடம் ஆடும் எங்கள்
> அப்பன் இடம்திரு வாலங்காடே" (10)

என்பார்.

இறைவன் ஈமப்புறங்காட்டில் தாழ்சடையை எட்டுத் திசையும் வீசி எல்லா உலகங்களிலும் பொருந்த அனலைக் கையிலேந்தி ஆடுகின்றார்; ஊழ்வயத்தால் இறந்த உயிர்கள் உள்ளம் குளிர்ந்து அமைதி அடையும்படி உயிர்க்குயிராகிய சிவபிரான் இடுகாட்டில் ஆடுகின்றார்; வாகையின் நெற்றுக்கள் காற்றினால் சலசல என்று ஒலி செய்ய அறிவை மயக்கும் இருண்ட கானகத்தில் கூகையோடு ஆண்டலை பாட, ஆந்தையின் கொம்புடன் அதன் மேல் குதித்தோடு மாறு ஆடுகின்றார்; கழலொலி ஓசைச் சிலம்புகள் ஒலிக்கக் காலுயர்

வட்டணை இட்டுச் சுழன்று ஆடுகின்றார்; பிறைச் சந்திரனைச் சடைமீது அணிந்து, இடையில் பாம்பைக் கச்சையாகக் கட்டிக் கொண்டு, மலைமகள் மருண்டு நோக்க, பேய்க்கணம் சூழச்சூழக் காடும் கடலும் மலையும் மண்ணும் விண்ணும் சுழலுமாறு அனலைக் கையிலேந்தி புயங்கக் கூத்தை ஆடுகின்றான்.

ஆழமான வேள்விக்குழியில் உள்ள சோற்றை எடுத்துக் குறுநரி உண்ணுகிறது; சுழலும் அழல்விழிக் கொள்ளிவாய்ப் பேய்கள் ஒன்றுகூடித் துணங்கை எனும் கூத்தை ஆடுகின்றன; கடலைச் சுடுகாட்டில் பிணங்கள் எரிந்து கொண்டிருக்கின்றன.

இறைவன் ஆடும் திருக்கூத்திற்குத் துத்தம், கைக்கிளை, விளரி, தாரம், உழை, இளி, ஓசை என்ற ஏழு பண்கள் இசைக்கப் படுகின்றன. சச்சரி, கொக்கரை, தக்கை, தகுணி, துந்துபி, தாளம், வீணை, மத்தளம், கரடிகை, தமருகம், குடமுழா, மொந்தை முதலிய இசைக் கருவிகள் இன்னிசை எழுப்புகின்றன. இவற்றை அமரர்கள் முறைமை தவறாமல் இசைக்கின்றனர். பேய்க்கணங்கள் குழலூது கின்றன

திருவாலங்காட்டில் அம்மையார் கண்ட இத்திருக் காட்சியைக் காணும் பொழுது சாதாரண நிலையிலுள்ளவர்களுக்குப் பேரச்சம் தருவதாக இருக்கும். இறைவன் திருமேனியில் உள்ள மலைமகளுக்கே சிவபிரான் ஆடிய இக்கூத்து அச்சத்தைத் தருவதால் மருண்டு பார்த்ததாக அம்மையார் கூறுவதைக் காண முடிகிறது.

சுடுகாட்டை அரங்காகக் கொண்டு பேய்களோடு ஆடும் காட்சியை அருளாளர்கள் பல பாக்களில் பாடியுள்ளனர். ஆயின் பேய்க்கோல முடையவனாகிய இறைவனைப் பேய்க் கோலமாகக் காணாது பரம்பொருள் தத்துவமாகக் காணும் நிலை அம்மையாரிடம் மட்டுமே உள்ளது. இதற்கு ஞானமும், பக்குவமும் வேண்டும். இதனை,

"இவரைப் பொருளுணரமாட்டாதார் எல்லாம்
இவரை இகழ்வதே கண்டீர் – இவர்தமது
பூக்கோல மேனிப் பொடிபூசி என்பணிந்த
பேய்க்கோலங் கண்டார் பிறர்"

என்று அம்மையார் கூறுவதனால் அறியமுடிகிறது. இதன் மூலம் அம்மையாரின் உள்ளக்கிடக்கையை இறைவன் உலகமறியச் செய்த திறம் வியப்பிற்குரியது.

# 5

# அப்பர் காட்டும் வாழ்வியல் நெறி*

சைவ சமயத்தைச் சார்ந்த அருளாளர்கள், சிவபரம் பொருளை வாழ்த்தியும், சைவ சமயத் தத்துவக் கோட்பாடுகளை விளக்கியும் எண்ணற்ற நூல்களைச் செய்துள்ளனர். இவற்றுள், சிவபரம்பொருளை வாழ்த்துவதாக அமைந்தவை தோத்திர நூல்கள் எனவும், சைவ சமயக் கோட்பாடுகளை விளக்குவன சாத்திர நூல்கள் எனவும் கூறப்படும். எனவேதான் அப்பர் பெருமான்,

"சொல்லும் பொருளெலாம் ஆனார்தாமே
தோத்திரமும் சாத்திரமும் ஆனார்தாமே" (6.78.5)

என்று பாடினார் போலும்!

பன்னிரு திருமுறை நூல்கள் தோத்திரமாகவும், பதினான்கு நூல்கள் சாத்திரமாகவும் ஆன்றோரால் வகைப்படுத்தப்பட்டுள்ளன. 'நாலு பேர் போன வழியே நாமும் போவோம்' என்பது நம் நாட்டில் வழங்கிவரும் பழமொழியாகும். பக்தி வெள்ளம் கரை புரண்டு ஓடிய காலம் - நாயன்மார்களில் குறிப்பாகச் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வர் தோன்றிய நற்காலம் எனலாம். இவர்கள் நால்வரையும் சைவ உலகத்தில் சமய குரவர் எனக் கூறுவர். இந்நால்வர் காட்டிய நன்னெறியை - சிவநெறியைப் பின்பற்ற வேண்டும் என்ற கருத்தை உட்கொண்டே நாலுபேர் போனவழியே நாமும் போவோம் என்ற பழமொழியை மொழிந்திருக்கக்கூடும்.

இத்தகு ஏற்றம் பெற்ற நால்வரில் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் அருளிய தேவாரப் பாக்கள் முதல் ஏழு திருமுறைகளாக அமைந்துள்ளன. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம், திருக்கோவையார் ஆகியன எட்டாம் திருமுறையாக உள்ளன. திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார்,

---

* 'பக்தி இலக்கியக் கருத்தரங்கம்' எனும் தலைப்பில் பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் 02-03-2005இல் நடைபெற்ற தேசியக் கருத்தரங்கில் படிக்கப்பெற்ற கட்டுரை.

புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பதின்மர் பாடிய திருவிசைப் பாமாலை அவற்றையடுத்து ஒன்பதாம் திருமுறையாக அமைந்துள்ளது திருமூலர் அருளிய திருமந்திரம் பத்தாந் திருமுறை யாகும். திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமாள், நக்கீரதேவர், கல்லாடதேவர், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், திருவெண்காட்டடிகள், நம்பியாண்டார் நம்பி ஆகிய பன்னிருவர் அருளிய நாற்பது சிற்றிலக்கியங்கள் பதினொராந் திருமுறையாகும் சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம் எனும் பெரியபுராணம் பன்னிரண்டாந் திருமுறையாகும். இவற்றுள் திருநாவுக்கரசர் அருளிய பாக்களைத் தேவாரம் எனவும், விருத்தாப்பிய தேவாரம் எனவும் ஆன்றோர் அழைப்பர். இவரருளிய பாக்கள் 4, 5, 6 ஆகிய மூன்று திருமுறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. மொத்தப் பதிகங்கள் 312; பாடல் தொகை 3,066 ஆகும்.

சேக்கிழார் அருளிய பெரியபுராணத்திலும், அப்பரருளிய தேவாரப் பாக்களிலும் அப்பரடிகளின் வாழ்வு, அக்காலச் சமுதாய நிலை, வாழ்வியல் நெறி முதலானவற்றைக் காணமுடிகின்றன. அடிகளார் பெற்ற அருள் அனுபவங்கள் இனிய கவிதைகளாக இனிது வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அவர் ஆற்றிய திருத்தொண்டு நெறித் திறத்தை அவரருளிய பாக்களில் காணமுடிகின்றன. ஆயின் அப்பர் காட்டும் வாழ்வியல் நெறியை இக்கட்டுரை ஆராய்கிறது

## திருமுறை நூல்களின் காலம்

பன்னிரு திருமுறைகளில் உள்ள திருப்பாடல்களின் மொத்த எண்ணிக்கை ஏறத்தாழப் பதினெண்ணாயிரம் ஆகும். இவற்றைப் பாடிய அருளாளர்கள் இருபத்தெழுவர். இவர்களுள் காலத்தால் முற்பட்டவர்கள் திருமூலரும் காரைக்காலம்மையாரும் ஆவர். காலத்தால் பிற்பட்டவர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் பெருமான் ஆவர். எனவே கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையிலுள்ள காலத்தைச் சைவத் திருமுறைகள் எழுந்த காலமாகக் கொள்வது பொருந்தும்.

## மனிதப் பண்பு

மனிதனாகப் பிறந்தவர் எல்லோரும் மனிதனாகிவிட முடியாது உணவைப் பற்றியோ, உறக்கத்தைப் பற்றியோ, பணம் தேடுவதைப் பற்றியோ, வேறு மற்ற உலகப் பொருள்களைப் பற்றியோ நினைப்பவன் மனிதனாக மாட்டான். உண்பது, உறங்குவது,

மக்களைப் பெறுவது முதலான அனைத்தும் விலங்குகளுக்கும் நமக்கும் பொது. ஆனால் மனிதர்களாகிய நாம் எந்த வகையில் விலங்குகளைவிட மேலானவர்கள்? என்ற கேள்வி எழுகின்றது.

நான் யார்? என் உள்ளம் யார்? நான் எங்கிருந்து வந்தேன்? எதற்காகப் பிறந்தேன்? இந்த உடம்பு தானே வந்ததா? ஒருவன் தந்து வந்ததா? தந்தவன் தன்பொருட்டுத் தந்தானா? என்பொருட்டுத் தந்தானா? நான் எங்கே போக வேண்டும்? இந்த உடம்பைத் தந்த ஒருவன் தன்மை யாது? அவனை அடையும் வழி யாது? அடைந்த வர்கள் யார்? என்பன போன்ற வினாக்களை உள்ளுக்குள் கேட்டுக் கொண்டு, அவற்றைப்பற்றி ஆழமாக நினைத்து, தகுந்த விடைகளை அறிந்து அறவொழுக்கத்தில் நிற்பவன்தான் உண்மையான மனிதன். இல்லையேல் மனித உடம்பெடுத்த விலங்குதான்.

திருவொற்றியூரில் ஒரு மகான் இருந்தார். மாலைப் பொழுதில் இறைவனை வழிபடுவதற்காக மக்கள் கோயிலுக்குச் செல்வதைப் பார்த்து, "குதிரை போகின்றது, எருமை போகின்றது, நாய் போகின்றது, ஆடு போகின்றது, புலி போகின்றது, நரி போகின்றது, பூனை போகின்றது" என்று கூறுவாராம். இராமலிங்க அடிகளார் போனால் மட்டும் 'மனிதன் போகின்றான்' என்பாராம். ஆகவே 'மனிதப் பண்புடையவனே உண்மை மனிதனாவான்' என்பது இந்நிகழ்வு மூலம் அறியமுடிகிறது.

## இன்சொல்

மனிதராய்ப் பிறந்த நாம் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றினாலும் அறம் புரிய வேண்டும். கடவுள் நினைவு, நற்சிந்தனை ஆகியவை மனத்தால் செய்யும் அறமாகும். ஆண்டவன் திருநாமத்தை யும் புகழையும் ஓதுதலும், பிறருக்குத் துன்பம் பயவாத மொழிகளைக் கூறுவதும் மொழியால் புரியும் அறமாகும். இறைவனை மலர் கொண்டு பரவுதல், அடியார்க்குத் தொண்டு புரிதல், பிற உயிர்களுக்கு நன்மை செய்தல் ஆகியவை உடலாற் புரியும் அறமாகும்.

பிறருக்கு எந்த வகையிலும் துன்பம் பயவாச் சொல்லே இன்சொல் ஆகும்.

"யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரை தானே"

என்பது திருமந்திரம். அன்பும் அருளும் நிறைந்த உரைகள் பிறருக்கு இன்பத்தைக் கொடுக்கும். பகைவர்களும், இன்சொல்லால் நம் நண்பராவர். அத்தகைய இன்சொல்லைக் கூறுபவர்க்கு, இயமன்

தூதரும் அஞ்சுவர் என்பர் ஞானசம்பந்தர்.

இன்சொல் பேசுகின்றவர்களுக்கு உலகில் எந்த வகையான துன்பமுமில்லை. இயமவாதனையும் கிடையாது. அவர்களுக்குச் சிவகதி திண்ணமாகக் கிடைக்கும். இதைத்தான் 'வாக்கினிலே நல்இனிமை வேண்டும்' என்றனர் போலும்!

எல்லாம் இறைமயமாய் நோக்கும் ஞானியர்க்கு மட்டுமே துன்பத்தையும் இன்பத்தையும் சமமாகக் காணும் இயல்பு உள்ளது "நன்றும் தீதும் பிறரால் வருவனவல்ல; நாம் செய்தன நம்மை நாடி வருகின்றன. துன்புறுதலும், துன்பம் நீங்குதலும் அப்படியே" என எண்ணும் உள்ளம் இருக்குமாயின் அது தெய்விக எண்ணம் பெற்ற திருவுள்ளமாகத்தான் இருக்க முடியும்.

## அன்பு நெறி

உயிருக்கு இயல்பான பண்பு அன்பு. இந்த அன்பின் சிறப்பைப்பற்றி அனைத்துச் சமயங்களும் கூறியதுண்டு. அன்பு செய்தால் இறைவனை அடையலாம் என்று கூறும் சமயங்கள் உண்டு ஆனால்

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே" (திருமந்திரம் 270)

என்று கூறும் சமயம் சைவம் ஒன்றுமட்டுமேயாம். சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கை அன்பு. இதையே அளவிற்கும் இடத்திற்கும் ஏற்பக் கருணை, இரக்கம், பாசம், காதல் என்பர். இறைவனை எண்ணிக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க வேண்டும் என்று கூறப்படுகிறது. உலகில் காணப்படும் சமயங்களின் உட்கிடக்கையும் பிற உயிர்களின்பால் அன்பு காட்டலேயாகும்.

இத்திருமந்திரப் பாடலை மேல்நோக்காகப் பார்க்கும்போது எளிமையாகத் தோன்றுகிறது. இப்பாடலில் அமைந்துள்ள அருமையான கருத்துகளைக் கொண்டு சிந்திக்கச் சிந்திக்க நம் எல்லோருடைய அறிவிற்கும் பெருவிருந்தாக அமைவதைக் காணலாம்.

திருமுறைகள் இம்மக்களுக்கு அன்புநெறியைத்தான் காட்டுகின்றன. எல்லோரும் வாழ வேண்டும் என்று நினைக்கும் உள்ளந்தான், உயர்ந்த பண்பட்ட உள்ளம். தான் மட்டும் வாழ நினைப்பது குறுகிய

உள்ளம். எனவேதான் வள்ளலார்,

"அப்பா நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்"

என்றார்.

'அன்பே சிவம்' என்று வாயளவில் சொல்வதால் மட்டும் எப்பயனும் விளையாது. எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணி இரங்கி உதவும் மனப்பான்மை நம்மில் ஒவ்வொருவருக்கும் வரவேண்டும். அடுத்த வீட்டுக்காரரையே பகைவராகப் பார்க்கும் நமக்கு - சொந்த உறவினரையே வெறுத்தொதுக்கி வாழும் நமக்கு - மற்றவர்களை அன்பால் நோக்கி, அவர்க்கு உதவுதல் கடினமே!

அன்பு என்பது பொதுவாக எல்லா மக்களிடத்திலும், ஏன் எல்லா உயிர்களிடத்திலும் உள்ள ஒரு பண்புதான். தாயன்பு, தந்தையன்பு, மகவன்பு, உடன்பிறந்தார் அன்பு, கணவன் அன்பு, மனைவி அன்பு, சுற்றத்தார் அன்பு என்று இப்படி எத்தனையோ வகையாக அன்பு அளவின்றிப் பல்கிக் கிடக்கின்றது.

தாய், தந்தை, கணவன், மனைவி முதலிய யாவரும் என்றைக்கும் ஒரே நிலையான பண்புடையவர் அல்லர். மேலும் அவர்கள் பிறரது உதவியை விரும்புகின்ற தன்னலம் உடையவர்கள். அதனால் அவர்களது அன்பு நிலையில்லாமல் நீங்கிவிடும். ஆயின் இறைவன் எவ்விதக் குற்றமும் இல்லாதவன். அஃதாவது மாறிமாறி நிகழும் குணபேதங்கள் அவனிடத்து இல்லை. அவன் குறையற்றவனாதலின் அவனுக்குப் பிறரால் ஆகவேண்டுவது ஒன்றும் இல்லை. ஆகவே தன்னலம் கருதல் என்பது அவனுக்கு இருக்க வழியே இல்லை. அதனால் அவன் பிறர்நலம் கருதியே என்றும் எல்லாவற்றையும் செய்து வருகின்றான். தன்னலம் கருதாது பிறர் நலம் கருதும் இத்தன்மையே அருள், கருணை, கிருபை என்றெல்லாம் சொல்லப் படுகிறது. ஆகவே அவனது பெருமையை உணர்ந்து செய்கின்ற அன்பு, என்றென்றைக்கும் நிலைத்து நிற்பதோடு, நாளுக்கு நாள் வளர்ச்சியுற்றுக் கரைகடந்த பேரன்பாகி மலரும். அந்த அன்பிலே தான் இறையாகிய சிவம் விளங்கித் தோன்றும். நாமும் அறிவுடை யவர்களாய் அன்பு செய்து, நம்மால் அன்பு செய்யப்பட்டவர்களும் அறிவுடையவர்களாய் இருப்பார்களானால் இருவரிடையேயும் தாம் அவர் என்ற வேறுபாடற்ற நிலை உண்டாகும். அங்ஙனமாக உண்மை ஞானம் வந்தவர்கள் அந்த ஞானத்தால் இறைவனிடத்தில் அன்பு மிக்குடையவர் ஆவார்களாயின், முற்றறிவும் பேரருளும் உடையவ

னாகிய இறைவன் அந்த அன்பர்கள் வேறு, தான் வேறு என்று சொல்லும்படி வேற்றுமைப்பட்டு நிற்கமாட்டான். வேற்றுமையற்ற அந்த அனன்னிய மான நிலையை வைத்துத்தான் திருமூலர் 'அன்பும் சிவமும் வேறல்ல அன்பே சிவம்' என்றருளிச் செய்தார்

எனவேதான் திருமுறை பாடிய அருளாளர்கள் எல்லா உயிர்களிடத்திலும் அன்பு செய்தல் வேண்டும் என்றனர். அதுவும் இறைவன்மீது உண்மை அன்போடு அகம் குழைந்து பக்தி செலுத்தி னால் இறைவனே அன்பு செலுத்தும் உயிர்கள் இருக்குமிடம் நாடி வருவான் என்பதை அருளாளர்கள் தம் பாடல்களில் கூறிச் சென்றுள்ளனர்.

"அஞ்சி யாகிலும் அன்பு பட்டாகிலும்
நெஞ்சம் வாழி நினை நின்றி யூரை நீ
இஞ்சி மாமதில் எய்திமை யோர்தொழக்
குஞ்சி வான்பிறை சூடிய கூத்தனே" (5.23.9)

என்று அப்பர் கூறுவது இவண் நோக்கத்தக்கது.

அன்பினால் மட்டுமே இறைவனை அடைய முடியும். வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்துள்ள இறைவனை நாம் மனம் வாக்கு காயம் என்ற மூன்றாலும் தூயவர்களாய்ப் பக்தி செய்ய வேண்டும். அன்பு, ஒழுக்கம், ஆசாரம் முதலிய பண்புகளால் நம் மனத்தைத் தூய்மை அடையச் செய்ய வேண்டும். கடவுளிடத்தில் அன்பு செலுத்துவதற்குச் சாதி தேவை யில்லை. மதம் தேவையில்லை மக்கள் பிறப்பாலும், சிறப்பாலும், பிறவாற்றாலும் வேறுபடினும் தூய உள்ளத்துடன் இறைவன்மீது அன்பு செலுத்தினால் அவனருள் கிட்டும்

அன்பு இல்லாத ஒருவன் மனிதன் ஆகமாட்டான். அன்பில்லாத ஒருவனைத் திருவள்ளுவர் பிணம் என்றுகூடச் சொல்ல விரும்பவில்லை. பிணம்கூடப் பலருக்குப் பணம் தரச்செய்து உதவு கின்றது. ஆதலால் அன்பில்லாத ஒருவனை என்புதோல் போர்த்த உடம்பு என்கிறார்.

"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு" (திருக்குறள் 80)

என்பது திருக்குறள்.

அப்பரடிகள் அறியாமுன்னே, அவரைக் காண்பதற்கு

முன்பே அடிகள் மீது காதல் கூர்ந்த அன்புடையவராகத் திங்களூரில் அப்பூதியடிகள் திகழ்ந்தார். அப்பரடிகளின் பெயராலே வீட்டிலுள்ள மக்கள், அளவைகள், ஆ, மேதி முதலியவற்றுக்கும் திருநாவுக்கரசு என்று பெயரிட்டு அழைத்து வந்தார். அவர் பெயராலே தண்ணீர்ப் பந்தர்கள் முதலிய பல தருமங்களையும் செய்து வாழ்ந்து வந்தார். அப்பூதியடிகளின் அன்பின் திறத்தைச் சேக்கிழார் திறம்பட மொழிந் திருப்பதைப் பெரியபுராணம் காட்டுகிறது. தவம் எதுவும் புரியாமல், தழல் எதுவும் வளர்க்காமல், திருநாவுக்கரசு எனும் ஒரு திருப்பெயரைச் சொல்லிய அளவிலேயே அன்பின் திறத்தால் முத்திநிலை பெற்றார் எனில் நாவரசர்தம் பெருமையை இவ்வொரு நாவால் ஏத்தல் இயலுமோ?

இதேபோன்று இராமனின் திருப்பெயரைச் சொல்லியே அனுமன் பல நலங்களையும் வளங்களையும் பெற்றார் என்பது வரலாறு காட்டும் உண்மையாகும்.

ஈசன்பால் அன்பு கொண்டு செய்யும் எல்லாச் செயல்களும் நன்கு பயனளிக்கும். இறைவனிடம் அன்பின்றி ஆற்றும் செயல் பயனளிக்காது. இதை,

> "கோடி தீர்த்தம் கலந்து குளித்து அவை
> ஆடி னாலும் அரனுக்கு அன்பு இல்லையேல்
> ஓடு நீரினை ஓட்டைக் குடத்து அட்டி
> மூடி வைத்திட்ட மூர்க்கனோடு ஒக்குமே" (5.99.9)

எனும் இப்பாடலில் கூறுகின்றார். இப்பாடல் அமைந்த பதிகத்தில் இறைவனை உள்ளன்புடன் ஏத்தி வணங்குதல் வேண்டும் என்கின்றார். பரமனுடைய கழலை அடைக்கலமாக அடைந்து, மகிழ்ந்து அன்பு கூர்ந்து ஏத்தி வழிபடுவீராக! கங்கை, காவிரி, குமரித்துறை மற்றும் கடல்நீர் ஆகிய புனிதத் தீர்த்தங்களில் ஆடினாலும், அனைத்துக் கலை களிலும் பட்டம் பெற்று வல்லவராக இருந்தால்தான் என்ன? சாத்திர நூல்களைக் கேட்டு அறிந்த கேள்வி ஞானம் உடையவராக இருந்தால் தான் என்ன? தான தருமம் முதலானவற்றைச் செய்தும் அன்ன தானம் புரிந்தும் அறப்பணிகளை மேற்கொண்டிருந்தாலும்தான் என்ன? வேதங்களை ஓதினால் என்ன? வேள்விகள் செய்தால் என்ன? நீதி நூல்களை நாள்தோறும் ஓதி உரைத்தால் என்ன? வேதத்தின் ஆறு அங்கங்களையும் உணர்ந்தால் என்ன? உடலை வருத்தி உணவை விலக்கித் தீர்ந்தால் என்ன? நோன்பு முதலான விரதங்கள் ஆற்றி உபவாசம் இருந்தால் என்ன? மலையின் உச்சியில் ஏறி அமர்ந்து ஏகாந்தமாக அரிய தவத்தை மேற்கொண்டால் என்ன? இவற்றால்

எவ்விதப் பயனும் ஏற்படப் போவதில்லை. மனம் கனிந்து உள்ளம் ஒன்றிச் சிவநாமத்தை ஓதவில்லையாயின், மேன்மை எதுவும் இல்லை. ஓட்டைக் குடத்திலே நீர் தங்காதது போல அன்பில்லாத இதயத்திலே இறைமை தங்காது என்பதைத்தான் 'ஓடு நீரினை ஓட்டைக் குடத்திலே வைத்து மூடி வைத்தவன் செயல் போல முடியும்' என்ற ஓர் உவமை மூலம் முடிக்கின்றார்.

## தொண்டு நெறி

தொண்டு நெறியை மேற்கொண்டு வாழ்ந்து காட்டியவர் அப்பர். தொண்டு நெறியை மேற்கொண்டு ஒழுகுவோர்க்குப் புண்ணிய உலகம் கிடைக்கும்; நரகத் துன்பம் இல்லை என்று பல பாடல்களில் எடுத்தியம்பியுள்ளார். அவற்றுள் ஒருசில பாடல்கள் :

"தொண்டர்க்குத் தூநெறியாய் நின்றான்தன்னைச்
சூழ்நரகில் வீழாமற்காப்பான் தன்னை" (6.79.1)

"தம் அடியாராகி வீடிலாத் தொண்டர்
தம்மை நரகத்தில் வீழ வொட்டார்" (4.70.7)

"ஏழ்நரகத் தென்னைக் கிடக்க வொட்டார்
சிவலோகத் திருத்திடுமே" (4.105.1)

"கொடு நரகக் குழிநின்று அருள்தரு
கைகொடுத் தேற்றும் ஐயாறன்" (4.92.4)

இறைவனுக்குத் தொண்டு செய்வதில் பல வகைகளுண்டு. விளக்கிடுதல், திருமெழுக்கிடுதல், பூமாலைகள் தொடுத்தல், கீதங்கள் பாடுதல் முதலானவற்றுள் எத்தொண்டைச் செய்தாலும் ஈசனுக்கு உகந்ததேயாகும். 'இன்னதுதான் செய்தல் வேண்டும்' என்ற கட்டாயம் இல்லை. ஆனால் ஒவ்வொரு தொண்டுக்கும் தனித்தனிப் பயன்கள் உண்டு என்பதை,

"விளக்கினார் பெற்ற இன்பம்
மெழுக்கினாற் பதிற்றி யாகும்
துளக்கின்நன் மலர் தொடுத்தால்
தூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின்
மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில் கீதம் சொன்னார்க்கு
அடிகள்தாம் அருளுமாறே" (4.77.3)

எனும் பாட்டில் கூறுகின்றார்.

## பாவ மன்னிப்பு

தொண்டு நெறியில் நிற்போர் தம் அறியாமையால் செய்த பிழைகளை இறைவன் பொறுத்தருளுவான். இதனையே பாவ மன்னிப்புக் கோட்பாடாகக் கொள்ளலாம்.

"நாயேன் பிழைத்தனகள் எத்தனையும்
பொறுத்தாயன்றே
எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறே" (6.95.8)

"உன்பால் அன்பர் பிழைபொறுத்தி
என்பதுவும் பெரியோய் நின்றன் கடனன்றே"

"அடியார் செய்த அனாசாரம் பொறுத்தருளி
அவர்மேல் என்றும் சீறாத பெருமான்" (6.80.5)

"அடியவர் பிழைப்பு நீக்குவர்
அடியார் செய்த பாவமும் பிழையும் தீர்ப்பர்"

எனவரும் பாடல்கள் 'குற்றங்கள் செய்தோர்க்கும் மன்னிப்புக் கிடைக்கும்' என்ற உணர்வையே உண்டாக்குகிறது என்பது வெள்ளிடைமலை.

## பயனிலாச் செல்வம்

'செல்வம் செல்வம்' என்று தம் வாழ்நாள் முழுவதும் தேடிப் பொழுது போக்கும் மனிதர்களைப் பார்க்கின்றார் அப்பர். பொருள் செல்வத்தைத் தேடுவதற்காக அவர்கள் கூறும் பொய்களை எல்லாம் எண்ணுகின்றார்.

"நாட்டிலே உள்ள பொய்களை எல்லாம் கூட்டிப் பேசும் மக்களே! உங்கள் செயல் தவறானது என்று அறிந்திருந்தும் வெட்க மில்லாமல் அச்செயலைச் செய்கின்றீர்களே! உடம்பாகிய இக் கூட்டை விட்டு உயிர் பறந்து போகும் முன் உங்கள் கடன் எது என்று உணர்ந்து கொள்வீர்களாக. திருக்காட்டுப்பள்ளி எனும் தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சேவடியை எப்போதும் நினைவீர்களாக!" என்கின்றார்.

"மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்

கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியுளான் கழல் சேர்மினே" (5.84.2)

என்பதுவே அப்பர் காட்டும் பாடல்.

## தன்நிலைக்கு இரங்கல்

இந்நிலவுலகில் நீண்ட நாள் வாழ்ந்த பெருந்தகை அப்பரடிகளாவர். அதனால்தான் அவர் அனுபவித்தவற்றைப் பல பாடல்களில் 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதற்கேற்ப அருளியுள்ளமையைக் காணமுடிகிறது. இதனால் இவ்வுலக மக்கள் நீடு வாழ்வதற்கு வழிகாட்டியாய் அவரருளிய பாக்கள் அமைந்து விளங்குகின்றன.

"காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்
கரைநின்றவர் கண்டுகொள் என்றுசொல்லி
நீத்தாய கயம்புக நூக்கியிட
நிலைக்கொள்ளும் வழித்துறை ஒன்றறியேன்
வார்த்தையிது ஒப்பது கேட்டறியேன்
வயிற்றோடு துடக்கி முடக்கியிட
ஆர்த்தார்புனல் ஆர் அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை அம்மானே" (4.1.5)

எனும் இப்பாடலில் சைவ சமயத்தை விட்டுச் சமண சமயம் சென்றதனை நினைந்து பாடுகின்றார். அதாவது, தமக்கையார் திலகவதியார் முதலானோர் அறிவுறுத்தியதைப் பொருட்படுத்தாமல் வேற்றுச் சமயமான சமண சமயத்திற்குச் சென்றார். சமண சமயத்தைச் சேர்ந்தவர்களின் அறிவுரையினால் அச்சமயத்திலிருந்து மீண்டு வரும் வழியை அறியாமல் இருந்த நிலையை வருந்திக் கூறுகின்றார். இதனால் தம்மைவிட வயதிலும், அறிவிலும் மூத்த பெரியோர் சொல்வதைக் கேட்டு அதன்படி ஒழுகினால் வாழ்வில் எவ்விதத் துன்பமும் நிகழ வாய்ப்பில்லை என்பதை இவ்வுலக மக்களுக்குத் தம் வாழ்க்கை மூலம் எடுத்துக் காட்டியுள்ளார். இவ்வாறு அப்பரடிகள் சமண சமயத்திற்குச் சென்று உழன்றதை நினைத்து, வருந்திப் பல பாடல்களில் கூறுவதைக் காணமுடிகின்றன.

## இன்பம் தருவன

ஈசன் எந்தை இணையடி நீழலும், மாசில் வீணையும், மாலை மதியமும், மூசுவண்டறை பொய்கையும், வீங்கிள வேனிலும், வீச

தென்றலும் இவ்வுலக வாழ்வில் இன்பம் தருவனவாகும் என்று அப்பர் கூறுகின்றார். மேலும் தன்னைச் சரணம் அடைந்தவர்களுக்கு இனிமையாக இருந்து நலன்களைப் புரிபவன்; கனியினும் இனிமை யானவன்; கரும்பின் கட்டியைவிடச் சுவை மிக்கவன்; செந்திருவைக் காட்டிலும் நன்மையாய் இருந்து நலம் அருள்பவன்; ஆட்சி செய்யும் அரசினும் பெருமையும் சிறப்பும் உடையவராய் இருந்து நலம் புரிபவன் எனும் கருத்தமைந்த பாடலில் இன்பம் தருவனவாகக் கருதப்படுகின்றமையை இவ்வுலக மக்களுக்குக் காட்டுகின்றார்.

"கனியினும் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க் குழல் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளும் அரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கு இடைமருதனே" (5.14.10)

## மக்கள் வாழும் நெறி

தலை, கண்கள், செவிகள், மூக்கு, வாய், நெஞ்சம், கைகள், உடல், கால்கள் ஆகிய இவ்வுடல் உறுப்புகளால் உண்டாகும் பலன்களை அப்பர் ஒரு பதிகத்தில் கூறியுள்ளார். இவ்வுலகில் வாழ்கின்றவர்கள் என்றாவது ஒருநாள் இவ்வுலக வாழ்வை நீத்தல் இயல்பு அவ்வாறு உடலை விட்டு உயிர் பிரிந்து செல்லும்பொழுது உயிர்க்குத் துணையாய் இருப்பவர் ஈசனேயன்றி வேறு எவரும் இலர். சிவபிரானை வணங்குவதற்காகவே தலையைப் படைத்துள்ளான். ஈசனைக் கண்டு வழிபடுவதற்காகவே கண்களைப் படைத்துள்ளான். அதனால்தான் சேக்கிழார் பெருமான்,

"மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டு ஆர்தல்
உண்மையாம் எனில் உலகர்முன் வருகென உரைப்பார்"

(பெரிய. திருஞான. 1087)

என்று கண்களின் சிறப்பைப் போற்றிப் பாடுகின்றார். ஈசனுடைய திருப்புகழ்ப் பாடல்களையும், அருட்செயல்களையும் கேட்பதற் காகவே இச்செவிகள் படைக்கப்பட்டுள்ளன. ஈசனுடைய திருவைந் தெழுத்தை, திருநாமத்தைத் தியானம் செய்யும் வழியாக ஒலித்து (முரன்று) ஓதுவதற்காகவே மூக்கு படைக்கப்பட்டுள்ளது. ஈசனை வாழ்த்திப் பேசுவதற்காகவே வாய் உள்ளது. ஈசனை நறுமணம் மிகுந்த

மலர்களால் தூவித் தொழுது போற்றுவதற்காகவே கைகள் உள்ளன. ஈசன் உறையும் கோயிலை வலம் வந்து வணங்குவதற்காகவே இவ்வுடலும் கால்களும் உள்ளன.

மனிதர்காள்! இங்கே வாருங்கள், உங்களுக்கு ஒரு நற்செய்தியைச் சொல்லுகின்றேன். இன்றிருப்பவர் நாளை இல்லை. சுவைமிக்க கனியைக் கொடுத்தால் நீங்கள் விரும்பி உண்பதற்கு உரியவர் அல்லவா! சிவபிரானின் திருக்கழல் அத்தகைய கனியாக உள்ளது. இனிமையுடையது, குற்றமற்றவர்களுக்கு விருப்பம் உடையது. அதனை உண்டு மகிழ்வீராக! எனும் பொருளில்,

"மனிதர் காள்இங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே" (5.91.7)

என்கின்றார்.

## சாதிகள் இல்லாச் சமயம்

சைவ சமயத்துக்குள் சாதி பார்க்கக் கூடாது என்ற கொள்கையைச் சேக்கிழார் தம் காப்பியத்தில் வலியுறுத்துகின்றார் அறுபத்து மூவரில் வேதியர் இருந்தனர்; வேளாளர் இருந்தனர்; சாலியர் இருந்தனர்; சான்றார் இருந்தனர்; பஞ்சமர் இருந்தனர்; பரதவர் இருந்தனர்; வண்ணார் இருந்தனர்; வேடர் இருந்தனர்; வேறுபல சாதியருமிருந்தனர். இப் பெரியவர்கள் தாங்கள் பிறந்த சாதியில் உயர்வு தாழ்வு கற்பித்துக் கொண்டு, தாங்கள் செய்த சேவையில் ஒருவரோடு ஒருவர் மலைந்து பூசல் விளைத்தார்களோ? எல்லோரும் ஆன்மநேய ஒருமைப்பாட்டில் கட்டுப்பட்டுக் கிடந்தனர். ஆதிசைவ பிராமண குலத்தில் பிறந்த சுந்தரர் உருத்திர கணிகையர் குலத்தில் பிறந்த பரவை நாச்சியாரையும், வேளாளர் குலத்தில் பிறந்த சங்கிலியாரையும் மணம் செய்தார்.

வேளாளர் குலத்தில் பிறந்த அப்பர் மீது பிராமண குலத்தில் பிறந்த அப்பூதியடிகள் அளவிலாக் காதல் கொண்டு திகழ்ந்தார். அப்பூதியடிகளின் அன்பின் திறம் மிகப் பெரிது. காணாமலே பேரன்பு பூண்ட திறம், தாம் பெற்ற மக்களுக்குத் திருநாவுக்கரசர் என்று பெயரிட்ட திறம், மகனைப் பாம்பு தீண்டியும் மனம் தடுமாற்ற

மில்லாமல் சவத்தை மறைத்து அப்பரை அமுது செய்விக்க முந்தும் திறம், மகன் உயிர் பெற்றெழுந்ததும் மகிழாமல் அப்பர் அமுது செய்யத் தாழ்த்ததற்கு வருந்தும் திறம் என்பன போன்ற அன்பின் திறம் கண்டு போற்றாமல் இருக்க இயலாது. எனவேதான்,

"அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே" (6.95.10)

என்று அப்பர் கூறினார்.

## குலம் பாரா நிலை

மேலும் சம்பிரதாயச் சடங்குகள், தமது குலங்களுக்கேற்ற மரபுகள் போன்றவற்றை மட்டும் பெரிதாகக் கொண்டு என்ன செய்வீர்? என்று கேள்வி கேட்கின்றார்.

"சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
கோத்தி ரமும் குலமும் கொண்டு என்செய்வீர்" (5.60.3)

"குலமிலராகிலும் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே" (4.11.6)

எனும் பாடல்களில் குலம், கோத்திரம் என்பன அடிகளார்க்கு உடன்பாடு இல்லாதவை என்பதையே காட்டுகின்றன. இறைவனிடத்துத் தூய அன்பு கொண்டோரே உயர்ந்தவர் ஆவர்.

## மனிதப்பிறவியின் மாண்பு

மனிதனுடைய வாழ்க்கை எப்படியோ வாழ்ந்து முடிவது என்பது அன்று. இப்படி இப்படி வாழவேண்டும் என்ற குறிக்கோளோடு இயங்குகின்ற வாழ்க்கை மனிதனுடைய வாழ்க்கை யாகும். அல்லற்பிறவி அறுத்துப் பேரானந்தப் பெரு வெள்ளத்திலே மூழ்கித் திளைப்பதற்குத்தான் மனிதப்பிறவியே தவிரப் பொருள் அல்லவற்றைப் பொருள் என்றுணரும் மருளால், பிறவிப் பெருங் கடலில் அழுந்திக் கிடப்பதற்காக அன்று. நேற்று இருந்தவன் இன்று இல்லை. இதுதான் இந்த உலகின் பெருமை என்பதைத் திருவள்ளுவர்,

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு" (திருக்குறள் 336)

எனும் திருக்குறளில் தெளிவுறுத்துகின்றார். மண்ணில் தோன்றிய மனிதர்கள் அனைவருமே ஒருநாள் மறைய வேண்டியவர்களே எவ்வளவு காலம் வாழ்ந்தான் என்பதிலே அல்ல, அவன் எப்படி வாழ்ந்தான் என்பதிலேதான் மனிதவாழ்வின் பெருமை அடங்கி யிருக்கிறது. பசித்துப் புசிப்பதும், படுத்து உறங்குவதும் மட்டுமல்ல மனித வாழ்க்கை.

நல்லன தீயனவற்றை அறிந்துணரும் ஆற்றல் பெற்றுள்ள மனிதன் தனக்கு வாழ்த்த வாயையும், நினைக்க நெஞ்சையும், தாழ்த்தச் சென்னியையும் தந்துள்ள இறைவனை உணர்ந்து வழிபட்டு உய்யும் நெறியை, மானுடப் பிறப்பின் பயனாகப் பெறும்போதுதான் உயர்ந்த நிலையைப் பெறுகிறான். இப்பிறவி எடுத்ததன் நோக்கத்தை அப்பர்,

> "குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயில் குமிண்சிரிப்பும்
> பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
> இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
> மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே" (4.81.4)

என்றருளிச் செய்கின்றார். 'வாய்த்தது நந்தமக்கு ஈதோர்பிறவி மதித்திடுமின்' (4.81.5) என்று பெற்ற பிறவியை மதிக்க வேண்டும் என்கின்றார். அதாவது 'மனிதப்பிறவி ஒன்றே இறைவனது திருவடிப் பேற்றைப் பெறுதற்கு உதவியாயிருப்பது' என்ற நிலையில் 'இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே' (5.1.1) என ஏங்குகின்றார்.

உலகில் அறுபதாண்டுகளைப் பயனின்றிக் கழித்த ஒருவர் அப்பரடிகளைச் சந்தித்தார். "அப்பர் பெருமானே! இப்பிறப்பில் அடியேனுக்கு உய்தி கிடைக்குமா? இறந்த பிறகு எனக்கு வீடுபேறு கிட்டுமா? கூறியருள வேண்டும்" என்று கேட்டார்.

அப்பரடிகள் அவரைப் பார்த்து, "ஐயா! முதியவரே! இறந்தபிறகு உங்கள் உயிர், சொர்க்கத்தை அடையுமா? அல்லது வீடுபேற்றைப் பெறுமா? என்பதைக் கணித்தறிய உங்களிடம் சில கேள்விகளைக் கேட்க விரும்புகிறேன். அதற்கு நீங்கள் அளிக்கும் விடையை வைத்துக் கொண்டுதான் உங்கள் கேள்விக்கு விடை சொல்ல வேண்டும்" என்று முதல் கேள்வியை அம்முதியவரிடம் கேட்டார்

"இறைவன் திருநாமமாக விளங்கும் திருவைந்தெழுத்தை, நமச்சிவாய மந்திரத்தை உங்கள் வாழ்க்கையில் நீங்கள் எத்தனை முறை செபம் செய்திருப்பீர்கள்?" என்பது முதற்கேள்வி.

அம்முதியவர் அப்பரடிகளைப் பார்த்து, "ஐந்தெழுத்தா? அது இன்னது என்பதையே இந்நாள்வரை அறியேன் ஐயனே!" என்று விடையிறுத்தார்.

அப்பர் சிந்தித்தார், ஓர் ஆசாரியனை அடுத்துப் பஞ்சாட்சர உபதேசம் பெற்று அதனை முறையாக ஒருவன் செபம் செய்வது அரிய செயலாகவும் இருக்கலாம். எல்லோரும் மேற்கொள்ளத்தக்க எளிய செயலாகவே மற்றொன்று கேட்போம் என்று திருவுளத்து எண்ணி அடுத்த கேள்வியைக் கேட்டார்.

இறைவனது அளவற்ற ஆற்றலையோ, அல்லது அவன் உயிர்களுக்கு வழங்கும் கருணையின் திறத்தையோ வியந்தும் புகழ்ந்தும் மற்றவர்களிடம் உரையாடியது உண்டா? என்று அவரிடம் இரண்டாவது கேள்வியைக் கேட்டார்.

"அடிகளே! இந்நாள்வரை பயனின்றிப் பேசிப் பொழுது கழித்தேனே யொழிய இறைவன் புகழை வாழ்த்தியோ அவன் திறம் விரித்தோ யாரிடமும் எதுவும் பேசியதில்லை" என்று இரண்டாவது கேள்விக்கு அம்முதியவர் விடையிறுத்தார்.

நாள்தோறும் அல்லது வாரம் ஒருமுறையாவது அல்லது திருவிழாக் காலங்களிலாவது திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபாடு செய்ததுண்டா? என்று அப்பர் மூன்றாவது கேள்வியைக் கேட்டார்.

"திருக்கோயில் எங்கள் ஊருக்கு நடுவில் இருக்கிறது. திருப்பள்ளி யெழுச்சி, காலை, நண்பகல், மாலை, இராக்காலம், அர்த்தசாமம் ஆகிய ஆறு காலமும் வழிபாடுகள் நடைபெறுகின்றன. பூசை வேளைகளை ஊர் மக்களுக்கு இடைவிடாமல் கோயில் மணியோசை தெரிவிக்கவும் செய்யும். அப்படியிருந்தும் ஒருநாளும் திருக்கோயிலுக்குள் சென்று கோயிலை வலம் வந்து வழிபடவில்லை சுவாமி" என்றார் அம்முதியவர்.

"வீட்டிலாவது ஒரு தெய்வத் திருவுருவமோ படமோ வைத்து வழிபாடு செய்து வருகின்றீரா? நீராடி உண்பதற்குமுன் மலர் பறித்துச் சார்த்தி வழிபட்டு அதன்பின் உண்பதுண்டா?" என்று அடுத்த கேள்வியைக் கேட்டார் அப்பர் பெருமான்.

இக்கேள்விக்கும் அம்முதியவர் 'இல்லை' என்றே பதில் தந்தார்.

அப்பரடிகள், "இந்தக் கேள்விக்காவது நன்றாகச் சிந்தித்து நல்ல பதிலைச் சொல்லுங்கள்" என்று கூறி அடுத்த கேள்வியைக் கேட்டார்.

சைவர்களாக இருப்பவர் எல்லோரும் நாள்தோறும் திருவெண்ணீறு அணியத் தவறமாட்டார்களே! திருநீற்றின் பெருமையையோ அணிவதற்குரிய காரணத்தையோ அறியாதவர்கள் கூடத் திருநீறு உடலில் உள்ள பலவகை நோய்களையும் போக்க வல்லது என்பதை அறிந்து திருநீறு பூசுவார்கள். ஆதலின் இம் முதியவர் நிச்சயம் திருநீறு அணிபவராக இருக்கலாம் என்று திருவுளத் தெண்ணி, நாள்தோறும் நீராடிய பின்னர் நெற்றியில் திருநீறு அணிவதுண்டா? என்று அடுத்த கேள்வியைக் கேட்டார்.

அதற்கும் அம்முதியவர் 'இல்லை' என்றே பதில் கூறினார்

அப்பரடிகள் அம்முதியவர்மேல் இரக்கப்பட்டார். இப் பெரியவர் தன் வாழ்க்கையில் இறைவனது கருணையை இழந்து விட்டாரே என்று உளங்கசிந்தார். இவர் நோய்கள் பலவும் நலியப் பிறப்பு இறப்பு என்னும் சுழலிற்பட்டு இன்னும் பலகாலம் பிறந்து இறந்து வாழும் நிலையைப் பெற்றுவிட்டாரே என்று இரங்கினார் முதியவரை விளித்து எஞ்சிய வாழ்நாளிலாவது கடவுள் வழிபாட்டைச் செய்தால் நற்கதி பெறலாம் என்று அறிவுரை கூறி அனுப்பியருளினார் இக்கருத்துகளை,

"திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒருநாளுந் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே" (6.95.6)

அப்பர் முதியவரிடம் கேட்ட கேள்விகளை நாம் ஒவ்வொருவரும் நம்மை நாமே கேட்டுக் கொள்ள வேண்டும் கடவுள் வழிபாட்டைத் தங்கள் கடமைகளில் ஒன்றாகக் கருதி வாழ்பவரே பிறவாநெறியார் பேரின்ப வாழ்வு பெறுவர். இறைவன் திருவடிகளைச் சிந்திப்பதும், அவன் எழுந்தருளிய திருக்கோயில்களுக்குச் சென்று வழிபடுவதும், ஆசையை அகற்றி வாழ்வதுமே பிறவி அறுதற்குரிய

வழிகளாகும். அப்பர் முதியவரிடம் கேட்ட இக்கேள்விகளே சைவ சமய ஒழுக்கங்களாகும். அதாவது திருநீறு அணிதல், திருவைந் தெழுத்தை ஒவ்வொரு நாளும் ஓதுதல், திருமுறைகளை ஓதுதல், இறைவனை வழிபடுதல், நாள்தோறும் அல்லது வாரந்தோறும் திருக்கோயிலுக்குச் செல்லுதல் போன்றவற்றையே சைவ சமய ஒழுக்கங்களாக ஆன்றோர் கூறுவர்.

**முடிவுரை**

அப்பரருளிய திருமுறைகளுள் நுழைந்தால் இத்தகைய அரிய வாழ்வியல் நெறிகள் பலவற்றைக் கண்டு இன்புறலாம். அப்பரருளிய தீந்தமிழ்ப் பதிகங்களை நாளும் ஓதி உணர்ந்தால் இம்மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம். இப்பூவுலகில் பிறந்தால் நாவரசரைப் போலப் பிறந்து நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் அமரவேண்டும். அதுவே இம்மனிதப்பிறவி எடுத்ததன் மாண்புறு பயனாகும்.

# 6

# சேக்கிழார் காட்டும் திருமணம்*

'தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து' எனப் புகழப்படும் தொண்டை நாட்டில் குன்றத்தூரில் வேளாண்குடியில் தோன்றிய சேக்கிழார் அருளிய பெரியபுராணத்திற்குத் தனியான தொரு சிறப்புண்டு. இப்பெரியபுராணத்தில் பேசப்பெறும் சிவனடியார்கள் பல்வேறு ஊரினர்; பல்வேறு காலத்தினர்; பல்வேறு மரபினர் அனைவரும் சிவபிரானையே முழுமுதற் பரம்பொருளாகக் கொண்டு ஒழுகியோராவர். இவ் அடியார் பெருமை கூறும் இந் நூலுக்குச் சேக்கிழார் இட்ட பெயர் 'திருத்தொண்டர் புராணம்' ஆகும். ஆயின் இன்று 'பெரியபுராணம்' என்பதே பெருவழக்கா யுள்ளது.

பெரியபுராணத்தில் பேசப்பெறும் அடியார்கள் அனைவரும் செயற்கரிய செய்த பெரியவர்க்ள். எனவேதான் இது பெரியபுராணம் எனப் புகழப்படுவதாயிற்று. அதனால்தான்,

> **"செயற்கரிய செயல் செய்த பெரியோர் வரலாற்றைக் கூறுவதாலும், ஓதுவோருக்குப் பெருமை சேர்ப்பதாலும், சிவன் பெருமையை, அச்சிவபிரான் அடியார்க்கு எளியனாக எழுந்தருளிய அருமையில் எளிய பெருமையை எடுத்து விளக்குவதனாலும், முன்னும் பின்னும் இதனையொத்த பெருமையுடைய நூல் தோன்றாமையாலும் பெரியபுராணம் என்று பாராட்டப்பெறுகிறது"**

என்று மறைந்த தவத்திரு குன்றக்குடி அடிகளார் குறிப்பிடுவதும் எண்ணி மகிழத்தக்கது.

சேக்கிழார் அமைச்சராக இருந்தமையினால் தமிழகம் முழுவதும் களப்பணியாகச் சென்று பல்வேறு செய்திகளைச் சேகரித்துத் தம் காப்பியத்தில் அவற்றைப் பதிவு செய்துள்ளார். சேக்கிழார் பாட எடுத்துக் கொண்ட காப்பியக் கதைமாந்தர்கள்

---

* தெய்வச் சேக்கிழார் 5ஆவது உலக மாநாட்டுச் சிறப்பு மலர், இலங்கை 2005, இந்து சமய விவகார அலுவல்கள் அமைச்சு, கொழும்பு, பக். 32–33.

அடியார்கள், கற்பனைப் பாத்திரங்கள் அல்லர். இவர்கள் இந்த நாட்டின் பல்வேறு பகுதிகளில் தோன்றிப் பணி செய்தவர்கள். இக்காப்பியத்தில் இடம்பெறும் பல்வேறு வாழ்க்கை நெறிகளுள் திருமணமும் ஒன்று. இக் காப்பியத்தில் சேக்கிழார் அக்காலத்தில் இருந்த பல்வேறு திருமணச் சடங்கு முறைகளைப் பதிவு செய்துள்ளார். அவற்றைக் காண்பது இக்கட்டுரையின் நோக்கம்.

அக்காலத்தில் திருமணத்திற்கு முன்பு, மணமகனின் வீட்டைச் சார்ந்த முதியோர் சிலர், பெண்ணின் பெற்றோரை நாடி மணம் பேச வருவர்.[1] அங்ஙனம் மணம் பேச வருவோர், அறிவின் மிக்கோராயும் இருப்பர். பெண்ணின் குலம் மட்டுமின்றி அவளின் குணத்தையும் விரும்பினர்.[2] இதையே சி.கே. சுப்பிரமணிய முதலியார்,

> "மணம் செய்தற்கண் உளங்கொள்ள வேண்டிய இன்றியமை
> யாத பொருள்கள் குலம், குடி, உரிமை என்ற இம்மூன்று மாம்
> என்பது முந்தையோர் வழக்கு"

என்பார்.

திருஞானசம்பந்தருக்கு அவரது பெற்றோர் திருமணம் செய்ய நினைத்துச் சாதக முறைப்படிச் சடங்கு பார்த்ததாகச் சேக்கிழார் கூறுவதன்[3] மூலம் சாதகம் பார்த்தலும் உண்டு என்பதை அறியமுடிகிறது.

மகட்பேசவரும் முதியோர் ஒத்த குடியும், மரபும் பார்த்தலோடு இவற்றிலும் மேலாய சிவனடித் திறமுடைமையையும் கருதினர்.[4]

இக்காலத்தில் மணமகனுக்குப் பணம் பெரிதும் தருதலாகிய வழக்கம் இருப்பது போல, அந்நாளில் பெண்ணுக்கு விலையாகப் பணம் கொடுத்தனர் என்னும் செய்தியை அறியமுடிகிறது.[5]

இரு வீட்டாரும் பேசி முடித்தபின், பெண்ணின் பெற்றோர், தம் மகளைக் கொடுக்க இசைவு தெரிவிப்பர்.[6]

---

1. சேக்கிழார், <u>பெரியபுராணம்</u> காரைக்காலம்மையார் புராணம் 16, மானக்கஞ்சாற நாயனார் புராணம் 16.
2. <u>மேலது</u> திருநாவுக்கரசு நாயனார் புராணம் 23.
3. <u>மேலது</u> திருஞானசம்பந்த நாயனார் புராணம் 1043.
4. <u>மேலது</u> மானக்கஞ்சாற நாயனார் புராணம் 16.
5. <u>மேலது</u> திருஞானசம்பந்த நாயனார் புராணம் 480.
6. <u>மேலது</u> திருநாவுக்கரசு நாயனார் புராணம் 24.

இவை மணநிகழ்ச்சியின் இன்றியமையாத முதற்பகுதியாகும். இதிலிருந்தே மணவினையும் தொடங்குகிறது.

இங்ஙனம் இருதிறத்தாரும் இன்னானுக்கு இன்னவள் எனப்பேசி, உறுதி செய்துவிட்டால், அதில் மாற்றம் எதுவும் நிகழக் கூடாது. எதிர்பாராதவிதமாகத் திருமணம் தடைப்பட்டால், பின் விளைவு யாது என்பது குறித்துச் சேக்கிழார் திலகவதியார் வரலாற்றில்,

"எந்தையும்எம் அனையுமவர்க் கெனைக்கொடுக்க இசைந்தார்கள்
அந்தமுறை யால்அவர்க்கே உரியதுநான் ஆதலினால்
இந்தவுயிர் அவருயிரோ டிசைவிப்பன் எனத்துணிய"[7]

முற்பட்டபோது, மருணீக்கியார், அவர்தம் அடியிணையில் விழுந்தார் எனவே, தம் தம்பிக்காக உயிர் தாங்கினார் திலகவதியார்

எனவே, திருமணப் பேச்சு முடிவானபோதே, ஆன்றோரால் உறுதி செய்யப்பட்டவனையே மணமகனாக எண்ணி வாழும் பெற்றியும், மணமகளாக ஆகப்போகும் ஒருத்திபால் இருந்தது என்ற நிலையையும் காணமுடிகின்றது. இத்தகு நிலையை இக்காலத்தும் சில குடும்பப் பெண்கள் கடைப்பிடித்து ஒழுகி வருவதைக் காணமுடிகிறது.

பொதுவாகப் பண்டைநாளில் மணப்பருவம் ஆணுக்குப் பதினாறு வயதும், பெண்ணிற்குப் பன்னிரண்டு வயதுமாகக் கணக்கிடப்பட்டது என்பதை இறையனார் களவியல் உரை கூறுகிறது[8] பெரியபுராண காலத்தும் இது வழக்கில் இருந்ததாகக் கருதமுடிகிறது

நம்பியாரூரர், சிறுதேர் உருட்டும் பருவமாகிய மூன்றாவது வயது முதல் மணப்பருவமாகிய பதினாறாவது வயது வரை அரசது அரண்மனையில், காதற் பிள்ளையாய் வளர்ந்து வந்தார்[9] திருஞான சம்பந்தர் புராணத்தில்,

"திருவளர்ஞா னத்தலைவர் திருமணஞ்செய் தருளுதற்குப்
பருவமிது வென்றெண்ணி அறிவிக்கப் பாங்கணைந்தார்"[10]

என்பதில் வரும் பருவம் என்பதற்குச் சிவக்கவிமணி, திருமணப் பருவம்,

---

7. சேக்கிழார், பெரிய புராணம் திருநாவுக்கரசு நாயனார் புராணம் 32.
8. இறையனார் களவியலுரை, சூத்திரம் 1.
9. சேக்கிழார், பெரிய புராணம் தடுத்தாட்கொண்ட புராணம் 6.
10. சேக்கிழார், பெரிய புராணம் திருஞானசம்பந்த நாயனார் புராணம் 1155.

இஃது ஆண்பாலார்க்குப் பதினாறாட்டைப் பருவத்தில் நிகழு மென்பது தமிழ் மரபு என்று விளக்கம் தருகின்றார்.

திருமணத்திற்கு உறுதி செய்யப்பட்டபின், மணநாள் குறித்து ஓலை எழுதுதல் மரபு. இதற்கு நாளோலை அல்லது திருநாளோலை என்று பெயர்.[11]

மணமாகும் ஆடவனின் வலது கையிலும், பெண்ணின் இடது கையிலும் கயிறு கட்டுதல் மரபு. இக்கயிறு பொன்நாண் எனப்படும். கட்டிய நாளிலிருந்து மணநாள் வரை இதை அவிழ்ப்பது கிடையாது. மணமக்களை எந்தத் தீமையும் அணுகாதபடிக் காவல் செய்வதாகலின் இதற்குக் காப்பு என்று பெயர். வேறுபல காப்பு, வரையுறை கடவுட் காப்பு என்பர் சேக்கிழார்.[12]

மணநாளன்று மணமகனைக் குதிரைமீது அமரச்செய்து, மணவீட்டுக்கு அழைத்து வருதலும் உண்டு. மங்கல மகளிர் நிறை குடம், விளக்கு, தூபம், மலர்மாலை, முளைப்பாண்டில், புணுகு, கத்தூரி முதலிய வாசனைப் பொருள்களை நன்கு உறைத்துக் கட்டிய கலவைச் சாந்து ஆகியவற்றை ஏந்தி மணமகனை வரவேற்பது மரபு.[13]

திருமண நாளன்று நகரையும் திருவீதிகளையும் திருமனை யையும் நிறைகுடம், விளக்கு முதலியவற்றால் அலங்கரிப்பர்.[14]

மணமகனின் கால்களைப் பால்கொண்டு நீர் வார்த்து விளக்குதல், மணமகளைப் பெற்ற அன்னையார் செய்தலும் உண்டு. திருமணத்தின்போது, கல்வியைக் கொடுத்தேன் என்று சொல்லி, நீர் வார்த்து, மணமகளை மணமகனது கையில் ஒப்படைத்தல் மரபு.[15]

இந்நாளில் மங்கலநாண் பூட்டுதலுக்கு நல்ல நேரம் பார்ப்பது போல, அந்நாளிலும் இவ்வழக்கம் இருந்தது. இதனைச் சேக்கிழார் 'பழுதில் நற்பொழுது நண்ண' என்பார்.[16] ஆளுடைய பிள்ளையாரின் திருமண நிகழ்ச்சியை,

---

11. சேக்கிழார், _மு.கா.நூல்_, காரைக்காலம்மையார் புராணம் 10.
12. _மேலது_, தடுத்தாட்கொண்ட புராணம் 12, திருஞானசம்பந்த நாயனார் புராணம் 43, கண்ணப்ப நாயனார் புராணம் 18.
13. _மேலது_, தடுத்தாட்கொண்ட புராணம் 19, திருஞானசம்பந்த நாயனார் புராணம் 1227, 1228.
14. _மேலது_, திருஞானசம்பந்த நாயனார் புராணம் 1170.
15. _மேலது_, 1232.
16. _மேலது_ 1236.

"பிள்ளையாரது திருவடி விளக்கப்பெற்றது; அவர், தூமலர்த் தவிசின்மேல் எழுந்தருளியிருந்தார்; அகில் தூபம் சுற்றிலும் மணம் பரப்பியது; மணியணி விதானம், மேலே விளங்கிற்று; மடவார் வாழ்த்தொலி எழுப்பினர்; சூழ இருந்த மறையோர் மறைமொழிகளால் ஏத்தினர்; வெண்பொரியை வேள்வித் தீயிலிட்டு ஆகுதி செய்து உரிய மந்திரம் பாவனைகளுடன் இறைவனை ஏத்தும் சடங்கு நிகழ்ந்தது"[17]

என்று சேக்கிழார் விளக்குகின்றார்.

மணமகளது கழுத்தில் மணமகன் மங்கலநாண் பூட்டுவதும் மரபாயிருந்து வந்துள்ளது. மணச்சடங்குகளில் இதுவே மிகமிக இன்றியமையாதது. மங்கல நூல் மட்டுமே அணிதலும், மங்கல நூலுடன் தாலியும் சேர்த்து அணிதலும் உண்டு எனக் கருதலாம்.[18] 'அம்பொன் மணிநூல்'[19] என்று சேக்கிழார் இதனைக் குறிப்பர். திருநாண் பூட்டிய மணமகன், தன் துணைவியின் கையைப் பிடித்தல் மரபு. இதனைப் 'பாணிக் கிரகணம்' என்று கூறுவதுண்டு.[20] மணம் முடிந்தபின் தாம்பூலம் முதலியன வழங்குவர்.[21] இரு வீட்டு உறவினர்களும் ஒருங்குகூடிப் புறப்படுவர். அக்கூட்டம் முன்னைவிடப் பெருகிக் காணப்படும்.[22]

இவ்வாறு தெய்வச் சேக்கிழாரின் பெரியபுராணத்தில் அக்காலச் சமுதாயத்தில் நிகழ்ந்த திருமண முறைகள், திருமணச் சடங்கு முறைகள் போன்றவற்றைப் பரக்கக் காணலாம்.

---

17. சேக்கிழார், மு.க.சா.நா.கு. திருஞானசம்பந்த நாயனார் புராணம் 1231, 1232, 1237.
18. மேலது. குங்குலியக்கலய நாயனார் புராணம் 9.
19. மேலது. திருநாவுக்கரசு நாயனார் புராணம் 34.
20. மேலது. மானக்கஞ்சாற நாயனார் புராணம் 20. பாணி – கை, கிரகணம் – பற்றுதல்.
21. மேலது. தடுத்தாட்கொண்ட புராணம் 20.
22. மேலது. மானக்கஞ்சாற நாயனார் புராணம் 36.

# ஆண்மைத் திருப்பணி செய்த வீரத் திருத்தொண்டர்*

தமிழகத்தில் 'தெய்வப்புலமை' சான்ற பெரும் புலவராகப் பாராட்டப் பெறுபவர் இருவர். ஒருவர் திருவள்ளுவர்; மற்றவர் சேக்கிழார். அவ்வாறே 'தேவர்' எனத் தொழுதற்குரியாரும் இவ் விருவரேயாவர். திருவள்ளுவரைத் 'தேவர்' எனவும், சேக்கிழாரை 'அருண்மொழித் தேவர்' எனவும் சான்றோர் போற்றுவர். இவ்விரு பெரும் புலவரும் கருத்தாலும் ஒன்றுபட்டவரேயாவர்! திருவள்ளுவ ரிடம் சேக்கிழார் பெருமதிப்பும் பேரன்பும் உடையவர். திருக்குறளில் ஆழ்ந்த புலமையும் ஈடுபாடும் உடையவராயுமிருந்தார். தாம் முதன் முதலாகச் சோழப் பேரரசனால் அமைச்சராக அமர்த்தப்படும்போது, அவ்வரசன் கேட்ட "கடலிற் பெரியது எது? ஞாலத்திற் பெரியது எது? மலையிற் பெரியது எது?" என்ற வினாக்களுக்குச் சேக்கிழார்,

"பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது" (திருக்குறள் 103)

"காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது" (திருக்குறள் 102)

"நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது" (திருக்குறள் 124)

என்ற திருக்குறட் பாக்களையே விடையாக இறுத்தார் என்னும் வழிவழிச் செய்தியால், திருக்குறளிடத்து இவர் கொண்டிருந்த பெருமதிப்புப் புலனாகும்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்" (திருக்குறள் 50)

என்ற குறட்பாவுக்கு இலக்கியமாகவே இத்திருத்தொண்டர் புராணத்தைச் சேக்கிழார் இயற்றினார் என்று கூறினாலும் இழுக்கில்லை!

---

* 'இலக்கியப் பேருரை' எனும் வரிசையில் திருச்சிராப்பள்ளி அகில இந்திய வானொலி நிலையத்தில் சத்தி நாயனார் தொடர்பாக 09-11-2005 அன்று நிகழ்த்திய பொழிவு.

சேக்கிழார் தம் நூலில் தொல்காப்பியம் முதல் தம் காலத்து நூல் ஈறாக உள்ள செந்தமிழ் நூல்களின் கருத்துகளையும், சொற்பொருள் நலங்களையும் பொன்னே போல் போற்றி எடுத்தாண்டுள்ளார் என்பதை நூலைப் பயில்வார் உணர்தல் கூடும்.

அறுபத்துமூன்று நாயன்மார்களின் வரலாற்றைச் சொல்வதன் வாயிலாகத் தமிழக வரலாற்றையே அழகுபட இலக்கிய நடையில் எடுத்து மொழிந்துள்ளார். அப்பர் காலத்துப் பல்லவ மன்னன் சமணத்திலிருந்து சைவம் சார்ந்து குணதரவீச்சரம் எடுத்தமை, பல்லவர் வாதாபியை அழித்தமை, நாட்டில் ஏற்பட்ட பஞ்சங்கள், புறச்சமயத்தார் செயல்கள், சாதிப் பிரிவுகள், திருக்கோயில் அமைப்பு முறைகள், வழிபாட்டு நிலைகள், அமைச்சர் முதலானோர் ஆற்றும் கடமைகள், அரசியர்களின் பணிகள், நாட்டின் பல்வேறு பிரிவுகள், வளப்பங்கள், மக்களின் பழக்க வழக்கங்கள் முதலானவற்றை அமைச்சுத் தொழில் பூண்டு அடியாராய் விளங்கிய அருண்மொழித் தேவர் ஆங்காங்கே அழகுறச் சித்திரித்துள்ளார்.

அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவர் சத்தி நாயனார். இவரைப் பற்றிய வரலாற்றைச் சேக்கிழார் பெரியபுராணத்தின் இரண்டாவது காண்டத்துள் மூன்றாவது சருக்கமாகிய பொய்யடிமை இல்லாத புலவர் சருக்கத்தில் ஏழாவது நாயனாராகக் கூறியுள்ளார்

> "வரிஞ்சையூரில் இருந்த வேளாளர் சத்தி நாயனாருக்கும்
> நான் அடியேனாவேன்" (7)

என்பது சுந்தரர் பாடிய திருத்தொண்டத்தொகையாகும் இப்பாடலடியைக் கொண்டு நம்பியாண்டார் நம்பி சற்று விரித்து,

> "சோழ நாட்டிலுள்ள வரிஞ்சையூரில் வேளாளர் குலத்தில் சத்தியார் வாழ்ந்து வந்தார். சிவனடியார்களை யாராவது இகழ்ந்து பேசினால் அவர்களது நாவைத் துண்டித்து விடுவார். முடிவில் எம்பெருமான் மலரடிகளை அடைந்தார்"
> (55)

என்று வகைப்படுத்திப் பாடினார்.

சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையையும், நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதிப் பாடலையும் மூலச்சான்றாகக் கொண்டு சேக்கிழார் 7 பாடல்களில் சத்தி நாயனார் வரலாற்றை விரித்துப் பாடுகின்றார். இனிச் சேக்கிழார் காட்டும் சத்தி நாயனார் வரலாற்றைக் காண்போம்.

ஒரே செங்கோல் வலிமையினால் எட்டுத் திசைகளிலும் தம் வெற்றித் தூண்களை நாட்டி அரசு செய்யும் சோழ மன்னரின் காவிரியாறு பாயும் நாட்டில் உள்ளது வரிஞ்சையூர் என்பதாகும். இவ்வூரில் உழவர்கள் களை எனக் களைந்து எடுத்த தாமரை மலர்கள் சொரிந்த தேனானது குளத்தை நிறைக்க உள்ளது.

இவ்வூரிலே வாய்மை எனும் சத்தியம் தவறாத பண்பை யுடைய வேளாளர் இருந்து வந்தனர். வேளாளர் என்போர் யார்? என்பதற்கு அபிதான சிந்தாமணி (இவ்வாறு) பின்வருமாறு கூறுகிறது.

பரமேசுவரனின் முடியில் கங்காதேவி இருக்கிறார். அவரை இறைவன் பார்த்தருளினார். அவரிடத்திலிருந்து ஓர் ஆண் குழந்தை தோன்றியது. திருமாலின் பாதத்திலும் ஒரு கங்கை இருக்கிறார். அவரை இறைவன் நோக்கியருள அவரிடத்திலிருந்து ஒரு பெண் குழந்தை தோன்றியது. தேவர்கள் அவ்விருவருக்கும் திருமணம் முடித்து வைத்தனர். இவர்களிடத்திலிருந்து தோன்றியதுதான் வேளாளர் குலம். இத்திருமண காலத்தில் உடனிருந்தவர்கள் 8,000ம் மகரிஷிகள் ஆவர். அவர்களின் பாரம்பரியத்தில் 8,000ம் கோத்திரங்கள் தோன்றின. கோத்திரம் எனும் சொல் வழிவழியாக வந்தவர்கள் என்ற பொருளுடையது. அதனால்தான் இன்றைக்கும்,

> "கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு
> பாத்திரம் அறிந்து பிச்சை இடு"

என்று கூறிவருகின்றனர்.

'வேளாளர்' எனும் சொல்லுக்கு இலக்கிய வகையில் பிறிதொரு பொருள் கூறப்படுகிறது. 'வேள்' எனும் சொல் 'விருப்பத்தை உண்டுபண்ணுபவர்' என்னும் பொருளுடையது. 'வேள்', 'குரிசில்', 'நம்பி' போன்ற சொற்கள் இன்றும் ஆண்களில் சிறந்தவர்களுக்குப் பட்டமாக வழங்கப்படுவதைக் காண்கிறோம். முருகவேள், காமவேள், தமிழவேள் போன்ற சொற்களையும் இதற்குச் சான்றாகக் கூறலாம்.

விருப்பத்தை உண்டுபண்ணுபவர்கள் என்றால் எல்லோருக்கும் உதவியாக இருந்து மக்கள் விரும்பும் செயல்களை மேற்கொள்கின்ற ஒழுக்கம் உடையவர்கள் என்பது விளக்கமாகும். அதனால் வேள் + ஆளர் எனும்பொழுது விருப்பத்தை ஆள்பவர்கள், விருப்பத்தால் ஆள்பவர்கள் என்று பொருள் கூறலாம். இவர்கள் சிறந்த ஈகைக் குணம் கொண்டவர்கள் என்பதற்குச் சான்றாக

'வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்' என்று கல்லாதனார் எனும் புலவர் கூறுகின்றார். அதாவது வேளாளன் என்பான் பிற விருந்தினர்கள் இருக்கும் பொழுது தான் தனித்து உண்ணும் பழக்கம் இல்லாதவன் என்பது இதற்குப் பொருளாகும். இக்கருத்தைத்தான் திருவள்ளுவரும்,

"தாளாற்றித் தந்தபொருள் எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தல் பொருட்டு" (திருக்குறள் 212)

என்று கூறுகின்றார். முயற்சியால் ஈட்டப்படும் பொருள் தக்கவர்களுக்கு உதவுதல் பொருட்டேயாகும் என்பது இதன் பொருளாகும்.

இத்தகைய பெருமை பெற்ற வேளாளர் குலமானது பெரிய சிறப்பை அடையுமாறு அதனுள் வந்து சத்தி நாயனார் தோன்றினார். நான்முகன் முதலான தேவர்களும் நினைப்பதற்கும் அரிய சிலம்பை அணிந்த சிவபெருமானின் திருவடிக்கு ஆட்செய்பவராய் வந்து தோன்றினார்.

சிவபெருமானுடைய அடியவர்களை யாரேனும் இகழ்ந்து பேசினால், வேர் நாவைக் குறட்டினால் பிடித்து இழுத்து சத்தி என்ற ஆயுதத்தால் அரிவார். அதனால், இவர் சத்தி நாயனார் என்று பெயர் பெற்றார் என்பதைச் சேக்கிழார்,

"அத்த ராகிய அங்கணர் அன்பரை
இத்தலத்தினில் இகழ்ந்து இயம்பும் உரை
வைத்த நாவை வலித்தரி சத்தியால்
சத்தியார் எனும் நாமம் தரித்துளார்" (சத்தி 3)

எனும் பாடலில் கூறுகின்றார்.

சிவனடியாரைத் தீங்கு சொல்லி இகழ்ந்தவரின் நாவைத் துண்டித்தலுக்கு வளைந்த தண்டாயம் என்ற சுற்றி இழுப்பதற்குரிய குறடு போன்ற கருவியால் இழுத்து அங்கேயே கூர்மையான கத்தியால் அரிந்து அன்புடன் ஓங்கும் சிறப்புடைய தொண்டில் உயர்வுடையவ ராய் விளங்கினார். நாயனார் இவ்வாறு செய்தலினால் சிவனடி யார்கள் நிந்தனையின்றி உலகம் திருந்தி நல்வழிப்பட்டது.

மற்றவர்கள் செய்ய இயலாத இவ் வீரத்திருப்பணியை நிலைபெற்ற இவ்வுலகத்தில் வலிமையுடன் நீண்ட நெடுங்காலம் அன்புடன் பணி செய்து வந்தார். தலையில் கங்கையாற்றைச் சூடிய இறைவரின் செம்மை நெறித் தொண்டினைச் செய்து வந்தார்.

சந்தேகம் இல்லாமல் செயற்கரிய இத்திருத்தொண்டை உள்ளபடியே செய்த வீரத்தன்மை உடைய தொண்டரான சத்தியார், உலகம் உய்யும்பொருட்டு அழகிய அம்பலத்தில் ஆடுகின்ற நடராசப் பெருமானின் செம்மை தரும் பாதநிழலைச் சேர்ந்தார்.

இறைவன் அடியவர்களின் இதயத்தில் இமைப்பொழுதும் நீங்காமல் எழுந்தருளி இருக்கின்றான். இறை நிந்தனையைக் காட்டிலும் அடியார் நிந்தனை கொடியது. இறைவனைப் பகைத்தவரும் ஒரு காலத்தில் உய்வு பெறுவர். ஆனால் அடியாரைப் பகைத்தவர் எக்காலத்திலும் உய்வு பெறமாட்டார். சூரியன் முன் எதிர்த்துப் பல மணிநேரம் நிற்கலாம். சூரியன் அருள்பெற்ற நொய்மணலில் சில நிமிடங்கள்கூட எதிர்த்து நிற்கமுடியாது.

திருமாலை ஐந்து கோடி இருபத்தைந்து இலட்சத்து முப்பத்தையாயிரம் ஆண்டுகள் இரணியன் நிந்தித்தான். அதேநேரம் திருமாலின் அடியவராகிய பிரகலாதனைப் பகைத்தான். அதனால் இரணியன் விரைந்து அழிந்து விட்டான். எனவே அடியார் நிந்தனை என்பது அதிபாதகச் செயலாகும். அப்பாதகத்தைச் செய்வோரை இம்மையில் தண்டித்தால், அப்பாவம் மறுமையில் தொடராது. தண்டிக்காமல் இருந்தால் செய்த பாவம் ஒன்றுக்கு ஆயிரமாக வளர்ந்து மறுமையிலே வந்து துன்புறுத்தும். அதனை முளையிலே கிள்ளி எறிவது நல்லது. அதனால்தான் அடியார் நிந்தனை புரிந்து அப்பாதகச் செயலால் மறுமையில் பெருந்துன்பமுற்று வருந்தாமல் இருத்தற்பொருட்டுக் கருணையினால் சத்தி நாயனார் இவ்வாறு தண்டித்து வந்தார். ஆகவே, இது மறச்செயலன்று, அறச்செயலே யாகும். அதனால்தான் சேக்கிழார் பெருமான் ஏனையோரால் மேற் கொள்ள முடியாத இச்செயலை 'அன்னதாகிய ஆண்மைத் திருப்பணி' என்றார். சத்தி நாயனாரை 'ஐயமின்றி அரிய திருப்பணி மெய்யினாற் செய்த வீரத் திருத்தொண்டர்' என்று வியந்து போற்றினார்.

இவ்வாறு சிவபெருமானின் தொண்டர்களை நன்மை சொல்லாதவர் வீழ, அவர்களின் நாவை அரியும் சத்தி நாயனாரின் திருவடிகளை வணங்கி அவரது அடிமைத் திறத்தைப் போற்றிப் பாராட்டுகின்றார் சேக்கிழார்.

ஒவ்வொரு நாயனாருக்குமெனத் திருநட்சத்திரம் உண்டு. அந்தந்த நாளில் அந்தந்த நாயனாருக்கு, எல்லாச் சிவன் கோயில் களிலும் குருபூசை செய்து வருவது தொன்றுதொட்ட மரபாக இருந்து வருகின்றது. அம்முறையில் சத்தி நாயனாரின் திருநட்சத்திரம்

பூசமாகும். அன்று இந்நாயனாருக்குக் குருபூசையும் வழிபாடும் செய்யப்பெறும்.

8

# கல் எறிந்து பேறு பெற்ற ஆலயம்*

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர் சாக்கிய நாயனார். இவரைப் பற்றிய வரலாறு சேக்கிழார் அருளிய பெரியபுராணத்தின் இரண்டாவது காண்டத்துள் இரண்டாவது சருக்கமாகிய 'வார்கொண்ட வனமுலையாள் சருக்கத்'தில் இடம் பெற்றுள்ளது.

> "சிவபிரானின் திருவடிகளை மறவாமல் கல் எறிந்து அதனால் வீடுபேறு பெற்ற சாக்கிய நாயனாருக்கும் நான் அடியேனாவேன்"

என்பது சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையாகும். இப் பாடலடியைக் கொண்டு நம்பியாண்டார் நம்பி சற்று விரித்து,

> "புத்தர்கள் போர்த்தும் தகடு போன்ற செந்நிற ஆடையை உடைய சாக்கிய நாயனார் புத்த சமயத்தில் இருந்து பின் சிவநெறி உணர்ந்து அவ்வேடத்துடனே சிவவழிபாட்டில் நின்றார். காஞ்சிபுரத்தில் இந்நாயனார் கல் எறிந்து பேறு பெற்ற ஆலயம் முத்தீசர் கோயில் என வழங்கப்பட்டு வழிபடப்படுகின்றது"

என்று வகைப்படுத்திப் பாடினார்.

சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையையும், நம்பி யாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதிப் பாடலையும் மூலச்சான்றாகக் கொண்டு சேக்கிழார் பெருமான் 18 பாடல்களில் சாக்கிய நாயனார் வரலாற்றை விரித்துப் பாடுகின்றார். இனிச் சேக்கிழார் காட்டும் சாக்கிய நாயனார் வரலாற்றைக் காண்போம்.

இந்தியாவின் புனிதத் தலங்கள் ஏழனுள் ஒன்றாகக் கருதப் பெறும் காஞ்சிமாநகருக்கு அருகில் பழைய பதிகளுள் ஒன்றாகத் திகழும் ஊர் திருச்சங்கமங்கையாகும். இவ்வூர், தளர்ச்சி அறியாத வளர்ச்சியுடைய நன்மக்கள் வாழ்கின்ற ஊராகும். இவ்வூரில்,

* 'இலக்கியப் பேருரை' எனும் வரிசையில் திருச்சிராப்பள்ளி அகில இந்திய வானொலி நிலையத்தில் சாக்கிய நாயனார் தொடர்பாக 16-11-2005 அன்று நிகழ்த்திய பொழிவு.

"உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து" (திருக்குறள் 1032)

எனும் திருக்குறளுக்கேற்ப இவ்வுலகில் அச்சாணியாகத் திகழ்ந்து வரும் உழவுத் தொழிலை மேற்கொண்ட வேளாளர் குலத்தில் ஒருவர் தோன்றினார். அவர் நிரம்பக் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார். எல்லா உயிர்களுக்கும் அன்பும் அருளும் உடையவராகி ஒழுகி வந்தார். இவ்வுலகில் பிறந்தும் இறந்தும் வரும் நிலையின் தன்மையிலிருந்து விடுபட்டு இப்பிறப்பிலேயே அந்நோயைத் தவிர்க்க வேண்டும் என்னும் கருத்துடையவராய் வாழ்ந்து வந்தார்.

அந்நாளில் காஞ்சிபுரம் கல்வியில் சிறந்த மாநகரமாகத் திகழ்ந்து வந்தது. காஞ்சியிலிருந்த கல்வி நிலையம் 'கடிகா' எனப் பட்டது. 'கடிகா' என்ற வடமொழிச் சொல்லுக்கு ஆழ்ந்து அறிவுபெற முயலும் இடம் என்பது பொருளாகும். கி.பி. 4ஆம் நூற்றாண்டி லிருந்தே உலகின் பல்வேறு நாடுகளிலிருந்தும் இக்காஞ்சிக் கடிகைக்குப் பலரும் வந்து கல்வி கற்றதற்குரிய சான்றுகளைப் பல கல்வெட்டுகளின் மூலம் அறியலாம். மேலும் கி.பி. 640இல் நம் நாட்டுக்கு வந்த சீனப்பயணி யுவான்சுவாங் காஞ்சியில் தங்கியிருந்தார்.

"அந்நாளில் காஞ்சி மாநகர் சமய விசாரணை செய்வோர்க்கு உதவியாகப் பலவகைச் சமய நிலையங்களுக்கும் கலைஞான சாதனங்களுக்கும் இருப்பிடமாய் விளங்கியது. பல்கலைக்கழகங்கள், சமயக் கல்வி நிலையங்கள் அந்நகரில் இருந்தன. அங்கு புத்தர்களது பள்ளிகள் நூற்றுக்கு மேல் இருந்தன. புத்த சமயத் துறவிகள் ஆயிரத்திற்கும் மேல் இருந்தனர்"

என்று தம் பயணக்குறிப்புகளில் யுவான்சுவாங் எழுதியுள்ளார்.

அத்தகைய பழம்பெருமை வாய்ந்த மதில் சூழ்ந்த காஞ்சி மாநகருக்கு நாயனார் வந்தார். நல்ல ஞானம் பெறுவதற்குப் பல வழிகளையும் ஆராய்ந்தார். அங்கு புத்தசமயக் கோட்பாடுகளும், புத்தர் கூறும் அறவுரைகளும் அவரை முதலில் கவர்ந்தன. உயிர்களிடத்து அருளுடையராய் வாழ்ந்து பிறவிப் பிணியிலிருந்தும் விடுதலை அடைவது என்ற புத்தர் கூறிய அறம் அவரை வெகுவாகக் கவர்ந்தது. நாயனார் புத்த சமயத்தில் சேர்ந்தார். அச்சமயத்தின் பிரமாண நூலாகிய திரிபிடகத்தைக் கற்றார். புத்த சமயத்தின் பிற நூல்களையெல்லாம் ஓதி உணர்ந்தார்.

பல பசுக்களுக்கிடையே ஓர் இளங்கன்றை விடுத்தால், அந்த இளங்கன்று தாய்ப்பசுவை வெகுவிரைவில் அறிந்து அதன் மடியில் பாலைப் பருகுவது போல, அவரவர் செய்த வினைகளும் செய்தவனை அறிந்து வந்து சேரும் என்று பௌத்தம், சமணம் முதலான சமயங்கள் கூறுகின்றன.

மேலும் நன்மை செய்தால் நன்மை வரும். தீமை செய்தால் தீமை வரும். கடவுள் ஒன்று வேண்டற்பாலதன்று. கருமமே முக்கியம் என்று பூர்வ மீமாம்சம் கூறும்.

இவ்வாறு நாயனார் புத்த சமய நூல்களையும், வேறு புறச்சமயம் சார்பாகக் கூறப்படும் முடிபுகளையும் அறிந்து இவை யெல்லாம் உண்மைப் பொருள் அல்ல என்ற உண்மையினைத் தெளிந்தார். சிவபிரானின் திருவருள் கூடியதனாலே அழிவில்லாத சிவநன்னெறியே உண்மைப் பொருளாகும் என்பதை ஐயம் திரிபற உணர்ந்தார்.

சிறு குழந்தை தானே பாலை எடுத்துப் பருகாது. பாலும் தானே போய்க் குழந்தை வாயில் புகாது. குழந்தைக்கும் பாலுக்கும் இடையே தாய் காலம் அறிந்து இடம் அறிந்து புகட்டுவது போல், கருணை நிறைந்த இறைவன் ஆன்மாக்களுக்கு அவரவர் செய்த வினையைப் பக்குவமறிந்து ஊட்டுவான். நோய்வாய்ப்பட்ட குழந்தைக்கு வேப்பங் கொழுந்தை அரைத்து ஊட்டுவது போலத் தீவினை செய்த ஆன்மாக்களுக்கு இறைவன் துன்பத்தை ஊட்டுவான்.

எனவே வினை, வினை செய்தவன், வினைப்பயன், வினையைக் காலம் இடம் அறிந்து ஊட்டுபவன் என்ற இந்த நான்கும் இருந்தே தீரவேண்டும். இவற்றைத் தெளிவாக எடுத்து விரித்து விளம்புவது சைவ சித்தாந்தம் ஒன்றேயாகும். இதனைச் சாக்கிய நாயனார் சிவபிரான் திருவருளால் நன்கு உணர்ந்தார் என்பதைச் சேக்கிழார் பெருமான்,

"தன்னிலையும் புறச்சமயச் சார்வுகளும் பொருளல்ல
என்னும்அது தெளிந்து ஈசரருள்கூட வீறில்சிவ
நன்னெறியே பொருளாவது எனஉணர்வு நாட்டுவார்" (சாக்கிய. 4)

என்று கூறுகின்றார்.

சிவபிரானின் அருள் கூடுதலைச் சிவசத்தி பதிதல் எனவும், சத்தி நிபாதம் எனவும் ஆன்றோர் கூறுவர். அதாவது சத்தியினது வீழ்ச்சி என்று அதற்குப் பொருள் கூறுவர். அதாவது 'அவளது

பார்வை அவனிடத்து வீழ்ந்திருக்கின்றது' என்று சொல்லுவது போலச் சத்தி நிபாதம் இருக்கும். இது அக அனுபவமாகும். இந்நிலையில் உள்ளவர் 'நம்செயல்' என ஒன்றில்லை; 'எல்லாம் சிவன் செயலே' என்ற மனநிலைக்கு வருவர்.

'நம்பர் அருளாமையினால் அமண் சமயம்' குறுகினார் அப்பரடிகள். அப்பருக்கு அருள் கூடாமையினால் அவர் சைவ சமயத்திலிருந்து சமண சமயத்திற்குச் சென்றதாகச் சேக்கிழார் எதிர்மறைப் பொருளில் கூறினார். ஆயின், சாக்கிய நாயனார் புராணத்தில் புறச்சமய நெறியிலிருந்து உண்மை உணர்ந்து சைவ நெறியில் புகுவதற்கு உடன்பாட்டுப் பொருளில் அருள்கூட என்றார்.

எனவே சேக்கிழார் பெருமான், உண்மைச் சமய அறிவு கொள்வதற்கும் கொள்ளாமைக்கும், அருள் கூடுதலும் கூடாமையுமே காரணமாகும் என்பதை உடன்பாட்டாலும், எதிர்மறையாலும் கூறியதை அறியலாம்.

அதேபோன்று நல்வினை உடையவர்களே கடவுளை உணர்ந்து பக்தி செய்வர், தீவினை உடையவர்கள் கடவுளை வழிபட மாட்டார்கள். அவர்கள் ஒருவேளை வழிபட நினைத்தாலும்அவர்கள் செய்த வினை அவர்களை எவ்வாறேனும் தடுத்துவிடும்.

இருவினைகளைச் செய்கின்ற உயிர்கள், அவ்வுயிர்களால் செய்யப்படும் நன்மை தீமைகளாகிய வினைகள், அவ்வினைகள் காரணமாக உயிர்களைச் சேர்தற்குரிய இன்பதுன்ப நுகர்ச்சிகள், அவ்வுயிர்கள் செய்த வினைப்பயன்களைச் செய்த உயிர்களே நுகருமாறு நியமித்து அங்ஙனம் நுகரச் செய்பவனாகிய இறைவன் என்ற இந்த நான்கினையும் சைவ சமய நூல்களேயன்றி வேற்றுச் சமய நூல்கள் கூறவில்லை. ஆகவே, 'சிவமே பரம்பொருள்' என்று திருவருளால் நாயனார் உணர்ந்து அறிந்து கொண்டார்.

புறச்சமயத்தில் இருந்த சாக்கிய நாயனார் ஒப்புநோக்கி ஆராய்ந்து இவ்வாறு கூறியதை எண்ணி வியக்க வேண்டியுள்ளது. பிற எச்சமயத்திற்கும் இல்லாது சைவ சமயத்திற்கு மட்டுமே உள்ள இத்தனிச்சிறப்பு இலக்கணத்தைச் சேக்கிழார்,

"செய்வினையும் செய்வானும் அதன்பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக்கு இல்லையென
உய்வகையால் பொருள்சிவன் என்றருளாலே உணர்ந்தறிந்தார்"

(சாக்கிய. 5)

என்ற பாடல் மூலம் கூறியுள்ளார். சைவ சித்தாந்தக் கருத்தைச் சாக்கிய நாயனார் வரலாற்றின் மூலம் அதுவும் புறச்சமயநெறியில் இருந்து ஒருவர் கூறும் கூற்றாகச் சேக்கிழார் மொழிந்திருப்பதை நினைந்து எண்ணிப் பார்க்க வேண்டும்.

இவ்வாறு 'சைவ சமயமே சிறந்த நெறி' என்பதை உணர்ந்து அறிந்த சாக்கியர்,

"எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்என்றே" (சாக்கிய. 6)

நிற்கலானார்.

எந்த நிலையில் ஒருவர் நின்றாலும், எந்த வேடத்தைக் கொண்டிருந்தாலும் நிலைபெற்ற சிறப்பினையுடைய சங்கரன் திருவடியை மறவாமல் இருப்பதே உண்மையான உறுதிப் பொருளாகும் என்று எண்ணி, தாம் மேற்கொண்டு தாங்கிய அந்தச் சாக்கிய சமய வேடத்தை நீக்காமல், தூய்மை செய்யும் சிவலிங்கக் குறியை மிகுந்த அன்பினால் இடையறாமல் சிந்தித்துக் கொண்டிருந்தார். எல்லாவற்றையும் தமக்கு உடைமையாக உடைய சிவபெருமான் ஒருவரே பரமபதி. இவ்வுண்மையை உணராத சாக்கியர்கள் கீழ்மக்களாகின்றனர். கரிய விடம் பொருந்திய கண்டத்தை உடைய சிவபெருமானுக்கு இந்த உலகிலுள்ள ஆன்மாக்கள் எல்லாம் அடிமைகளேயாம் என்று உணர்ந்த நாயனார், பௌத்த சமயத்தவர் தாங்கும் வேடத்தை மாற்றாமலே சிவன்பால் அன்பின் வழியிலே நின்று ஒழுகலானார். எனவேதான் சேக்கிழார்,

"எப்பொருளும் ஆக்குவான் ஈசனே எனும் உணர்வும்
அப்பொருள்தான் ஆளுடையார் அடியார்கள் எனும்அறிவும்"
(சம்பந்தர் புராணம்)

என்று ஆளுடைய பிள்ளையார் வரலாற்றில் கூறினார். இதையேதான்,

"எல்லாம் உன் அடிமையே எல்லாம் உன்உடைமையே
எல்லாம் உன்னுடைய செயலே" (தாயுமானவர் பாடல்)

என்று தாயுமானவர் கூறினார் போலும்!

கண்ணுக்குப் புலப்படாத அருவத் திருமேனிக்கும், கண்ணுக்குப் புலப்படும் உருவத் திருமேனிக்கும் காரணமாக விளங்குவது சிவலிங்கம்; திருமாலும் நான்முகனும் காணும்படி

அருளினாலே அவர்கள் நடுவில் விண்ணையும் பாதலத்தையும் அளாவும் அனல் வடிவாக, ஜோதிப் பிழம்பாக நின்ற குறிப்பும் சிவலிங்கத்தையே குறிக்கிறது. அது ஆன்மாவில் உயிருக்கு உயிராய் விளங்குகின்றது. ஆன்மா அறிவுப்பொருள். ஆன்மாவுக்கும் சிவத்துக்கும் இடையில் அருள் ஒளிர்கின்றது. எனவே ஆன்மசோதி, அருட்சோதி, சிவசோதி ஆகிய இந்த மூன்றும் ஒருங்கு கூடியதே சிவலிங்கமாகும். சிவலிங்கத்தின் அடிவட்டம் ஆன்மசோதி. சிவலிங்கத்தைச் சூழ்ந்திருக்கின்ற ஆவுடையார் அருட்சோதி. மேல் நோக்கியிருக்கின்ற சிவலிங்கம் சிவசோதி. இந்த மூன்றும் சேர்ந்து சிவலிங்கமாக நமக்குக் காட்சி தருகின்றது.

'சோதியே சுடரே சூழொளி விளக்கே' என்பார் மணிவாசகர். இதனைச் சேக்கிழார் பெருமான் இந்நாயனார் புராணத்தில், 'எட்டிரண்டும் இதுவாம் இலிங்கம்' என்று அருணகிரிநாதர் கூறியபடி, எட்டாவது பாடலில் கூறிய திறம் எண்ணியெண்ணி வியக்கத்தக்கது.

"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்
நாணாது நேடியமால் நான்முகனும் காணநடுச்
சேணாரும் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்" (சாக்கிய. 8)

என்பதுவே அப்பாடலாகும்.

சிவபெருமானை வழிபடுவதற்கு எல்லா வழிபாடுகளிலும் சிவலிங்க வழிபாடே தலைசிறந்தது என்ற முடிவுக்குச் சாக்கிய நாயனார் வந்தார். அவ்வாறு தெளிந்த நாயனார் நாள்தோறும் சிவலிங்கத்தைக் கண்டு தொழுத பின்னரே உணவு உண்ணவேண்டும் என்னும் நியமத்தை மேற்கொண்டார். அருகில் ஒரு வெட்ட வெளியில் ஒரு சிவலிங்கத்தைக் கண்டார். கண்டவுடன் அவருடைய உள்ளத்திலே வெள்ளம் போன்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. அதிக மகிழ்ச்சியினால் இன்னது செய்வதென்றே அறியாதவராயினார். முன் காணாமலே பெருங்கேண்மை கொண்ட அப்பரடிகளைக் கண்டவுடன் அப்பூதியடிகள் மனமிக மகிழ்ந்து திகைத்துச் செயல் மறந்ததை இவண் எண்ணிப் பார்க்க வேண்டும். இந்நிலையில் சாக்கிய நாயனார் பக்கத்தில் இருந்த ஒரு கல்லை எடுத்தார். அதையே மலராக எண்ணி அச்சிவலிங்கத்தின்மீது எறிந்தார்.

பலவகைச் சிவவழிபாடுகளுள் நாயனார் மேற்கொண்டது ஒருவகையாகும். அதாவது, நாள்தோறும் உண்பதற்குமுன்

சிவலிங்கத்தைக் காண்பதும், வழிபடுவதும், அதன்பின் உண்ணுதலு மாகிய இவற்றைப் பின்பற்றியது. இவர் வரலாற்றை அறிந்த நாவரசர் தாம் அருளிய தேவாரத்தில்,

"அரும்போடு மலர் பறித்திட்டு உண்ணா ஒரும்" (6.95.5)

"உண்பதன்முன் மலர் பறித்திட்டு உண்ணா ராகில்" (6.95.6)

என்று கூறுவது இவண் நினைத்தற்குரியதாகும்.

குழந்தைகள் சில நேரங்களில் அளவு கடந்த அன்பினால் இகழத்தக்க செயல்களைச் செய்வதுண்டு. ஆயின் பெற்றோர்க்கு அச்செயல்கள் இன்பமாக இருக்குமேயன்றி அதனால் அவர்களுக்கு எவ்விதத் துன்பமும் ஏற்படுவதில்லை. அதுபோலவே இந்நாயனார் செய்ததாகிய கல் எறிந்த வன்மைச் செயலைச் சிவபெருமான் மகிழ்ந்து ஏற்றுக் கொண்டார்.

சிறுவர்களிடமும் பேரன்பு கொண்டு களித்து மகிழும் பெற்றோர் அம்மகிழ்ச்சி அதிகரிக்கும்பொழுது அக்குழந்தைகளைச் சிறிதே அடித்தல், கிள்ளுதல், இறுகப் பற்றுதல் முதலிய வன்மைச் செயல்களையும் செய்வர். மிகுந்த அன்பின் காரணமாகவே தங்களிடம் தம் பெற்றோர் இவ்வாறு செய்கின்றனர் என்பதை அக்குழந்தைகளும் அறிவர். ஆதலின் அவ்வன்மைச் செயல்களும் அவர்க்குத் துன்பம் தராமல் இன்பத்தையே நல்கும். இஃது உலகியல் நிலையில் கண்கூடாக அறியக்கிடக்கும் உண்மையாகும்.

"தொடங்கிய நாள் அருளிய அத்தொழில் ஒழியா வழிதொடரும்
கடன்புரிவார் அதுகண்டு கல்லெறிவார் துவராடைப்
படம்புனை வேடம் தவிரார் பசுபதியார் தம்செயலே
அடங்கலும் என்பது தெளிந்தார் ஆதலினால் மாதவர்தாம்" (சாக்கிய. 12)

"இந்நியதி பரிவோடு வழுவாமல் இவர்செய்ய
முன்னுதிருத் தொண்டாகி முடிந்தபடி தான்மொழியிற்
றுன்னிய மெய்யன்புடனே எழுந்தவினை தூயவர்க்கு
மன்னுமிகு பூசனையாம் அன்புநெறி வழக்கினால்" (சாக்கிய. 13)

என்று இவ்வாறு சாக்கியரின் செயலைச் சேக்கிழார் மொழிகின்றார்.

அன்புநெறி வழக்கினால் தொண்டர்கள் செய்யும் செயல் இறைவனுக்குப் பூசனையாகும். முன்பு வில் ஏந்திய கண்ணப்ப நாயனார் செருப்படியை இறைவன் விரும்பியதைப் போலவே இவருடைய கல்லெறியையும் விரும்பி ஏற்றுக் கொண்டார். மற்றவர்

கல் என்று சொல்வர். ஆயின் சிவபெருமானுக்கு அது மலராகவே ஆனது.

"கல்லாலே எறிந்ததுவும் அன்பானபடி காணில்
வில்வேடர் செருப்படியும் திருமுடியின் மேவிற்றால்
நல்லார் மற்றவர் செய்கை அன்பாலே நயந்ததனை
அல்லாதார் கல்லென்பர் அரனார்க்கு அஃது அலரானால்" (சாக்கிய. 14)

என்று சேக்கிழார் பாடுகின்றார்.

இவ்வாறு நாயனார் இருந்துவரும் நாளில் ஒருநாள் சிறிது மறதியாக உணவு உண்ண அமர்ந்தார். அவ்வேளையில் தொண்டு நினைவு அவருக்குத் தோன்றியது. உடனே நாயனார், 'அந்தோ! இன்று தொண்டை மறந்தேனே!' என்று எழுந்தார்; விரைந்து நடந்தார்; சிவலிங்கப் பெருமானை அடைந்தார்; திருமுன்னே நின்றார்; ஒரு கல்லை எடுத்துச் சிவலிங்கப் பெருமான் மீது எறிந்தார்.

கல் எடுத்துக் குறி தவறாமல் எறியும் பொருட்டு உணவை ஒழித்து வேட்கையுடன் ஓடிவரும் திருத்தொண்டர்முன் கண்ணுதற் கடவுள் அருள் பொழியும் திருநோக்கத்துடனே வானில் உமையம்மையுடன் இடபவாகனத்தில் தோன்றுவாராயினார்.

"மழவிடைமேல் எழுந்தருளி வந்ததொரு செயலாலே
கழலடைந்த திருத்தொண்டர் கண்டுகரம் குவித்து இறைஞ்சி
விழவருள் நோக்களித்தருளி மிக்கசிவ லோகத்தில்
பழவடிமைப் பாங்கருளிப் பரமர் எழுந்தருளினார்" (சாக்கிய. 17)

"ஆதியார் தம்மை நாளும் கல்லெறிந்து அணுகப்பெற்ற
கோதில்சீர்த் தொண்டர் கொண்ட குறிப்பினை அவர்க்கு நல்கும்
சோதியார் அறிதலன்றித் துணிவதென்?" (சாக்கிய. 18)

என்று சேக்கிழார் இக்காட்சியைக் கூறுகின்றார். நாவரசர் இதனை.

"கல்லினால் எறிந்து கஞ்சி
தாமுணுஞ் சாக்கியனார்
நெல்லினாற் சோறு ணாமே
நீள்விசும் பாள வைத்தார்" (4.49.6)

என்றார்.

இவ்வாறு இந்நாயனார் சாக்கிய சமயத்தில் நின்றபடியே சிவபெருமானை வழிபட்ட இவருடைய உறுதியும் அன்பும் சாலவும் போற்றத்தக்கதாகும்.

திருமாலின் மனத்தில் தோன்றிய மன்மதன் இவ்வுயிர் களுக்குக் காமத்தை உண்டுபண்ணும் தொழிலை உடையவன். இவன் மனைவி இரதிதேவி. சூரபன்மன் முதலான அரக்கர்களால் தேவர்கள் துன்பமுற்றனர். அத்துன்பத்தைப் போக்குவதற்கு முருகப்பெருமான் தோன்றுவதாக இருந்தது. ஆனால், அவன் தோன்றுவதற்கு மூலப் பொருளாய் உள்ள சிவபெருமான், யோகத்தில் ஆழ்ந்திருந்தார். தங்களுக்கு விரைவில் வழி பிறக்கவேண்டும் என்ற பேராவலால் இந்திரன் முதலான தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கிச் சிவபெருமான் நிட்டையைக் கலைப்பதற்காக மன்மதன் இறைவன்மீது மலர் சொரிந்தான். அவன் கணை என்று விட்டது மலர்கள்தாம். ஆனால் இறைவன் நிட்டை கலைந்து கண் விழித்துப் பார்க்க அக்கணமே மன்மதன் எரிந்து சாம்பலானான். ஆயின் கல்லாலே தம்மீது எறிந்த சாக்கிய நாயனாருக்குச் சிவபெருமான் சிவலோகம் ஈந்தனர். கல்லெறிதல் என்பது தீங்கு; ஆயின் மலர் எறிதல் என்பது நன்று. ஆனால் இங்கே நன்று செய்தவனுக்குத் தண்டனையையும், தீங்கு செய்தவருக்குத் திருவருளும் கிடைத்தன. இதற்கு என்ன காரணம்? மன்மதன் மலர் எறிந்த செயல் நன்றேயாயினும் அவன் உள்ளம் இறைவனை மயக்க வேண்டும் என்று துணிந்தது. அதனாலேயே அச்செயல் தீமையாயிற்று.

சாக்கியர் கல் எறிந்தாலும் இறைவன்மீது எல்லையில்லாத அன்புடன் திருவருளையே தாரகமாகக் கொண்டு செயலறியாது கல்லெறிந்தார். பின்னர், அதனையே திருவருட் குறிப்பாகக் கொண்டு ஒழுகினார். ஆகவே இவருடைய செயல் இறைவனுக்கு உகந்ததாக ஆயிற்று.

ஒருவன் செய்கின்ற செயலுக்கு முக்கியத்துவம் தராமல் அச்செயலின் பின்னேயுள்ள மனநிலைக்கு மட்டுமே முக்கியத்துவம் தரவேண்டும் என்பதையே இச்செயல் நமக்குக் காட்டுகிறது. இதைத்தான் நாவரசர்,

> **"கரும்பு பிடித்தவர் காயப்பட்டார் அங்கோர் கோடரியால்**
> **இரும்பு பிடித்தவர் இன்புறப்பட்டார்" (4.102.5)**

என்றார். அதாவது கரும்பை எடுத்து வளைத்து மலர்களை அம்பு போல் போட்ட மன்மதன் எரிக்கப்பட்டான். ஆனால் கோடரியை எடுத்துத் தந்தையின் காலைச் சேதித்த சண்டேச நாயனார் வீடு பேற்றைப் பெற்றார்.

சிவபெருமானை வழிபடுவதற்கு அன்பு என்ற பண்பு ஒன்றே போதும்; உண்மை அன்போடு பக்தி செலுத்தினால் இறைவனே அன்பு செலுத்தும் உயிர்கள் இருக்குமிடம் நாடி வருவான்; அன்புடன் செய்யும் செயல் எதுவாக இருப்பினும் அது பெருமானுக்குப் பூசனையேயாகலின் இதுவும் தொண்டாகி முடிந்தது. இறைவன்மீது அன்பு செலுத்துவதற்குக் கோலம் ஒரு தடையில்லை என்பதையே சேக்கிழார் இந்நாயனார் புராணத்தின் மூலம் அனைவருக்கும் அறிவுறுத்துகின்றார்.

# 9

# மறைப்பெரு வள்ளலார்*

சைவ சமயத்தில் முப்பெரும் புராணங்கள் உள்ளன. அவை பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கந்தபுராணம் என்பனவாம். இம்மூன்றையும் சிவபெருமானின் முக்கண்களுக்கு ஒப்பாகச் சொல்வது மரபு. இறைவனது வலக்கண் சூரியன்; இடக்கண் சந்திரன்; நெற்றிக்கண் அக்கினி. ஞாயிறு போன்றது பெரியபுராணம்; திங்கள் போன்றது திருவிளையாடற்புராணம்; அக்கினியை ஒத்தது கந்தபுராணம். சிவபெருமானின் முக்கண்களும் ஞாயிறு, திங்கள், அக்கினியாக இருந்து இவ்வுலகிலுள்ள அனைத்து உயிரினங்களுக்கும் தேவையானவற்றைக் கொடுத்துக் காப்பாற்றி வருகின்றன.

ஞாயிறு எங்ஙனம் வெப்பத்தைக் கொடுத்து எல்லா உயிர் களையும் வாழ வைக்கிறதோ அதுபோன்று பெரியபுராணமும் திருத் தொண்டர்களை வருத்தி ஆட்கொள்ளும் இறைவனின் அருமைப் பாட்டை விளக்குகிறது. அனபாய சோழ மன்னன் காரணமாகப் பெரியபுராணம் தோன்றியது என்பதும், அச்சோழர்கள் சூரிய குலத்தவர்கள் என்பதும் ஒப்புமைப்படுத்திச் சிந்திக்கத்தக்கதாகும்.

இவ்வுலகில் மக்கள் பலதரப்பட்டவர்களாதலால் ஒவ்வொரு மனிதனுக்கும் அறத்தைக் கூறும்பொழுது ஒரேமாதிரியாகக் கூறாமல் சிலருக்கு எளிமையாகக் கூறவேண்டியுள்ளது. அவ்வகையில் அறச்செய்திகளைத் திருவிளையாடற்புராணம் எளிமையாகக் கூறுகிறது. சேக்கிழாரின் பெரியபுராணம் கடுமையாகச் சொல்கிறது. கந்தபுராணமோ கொடுமையாகத் தண்டனை அளித்துக் கூறுகிறது.

பெரியபுராணத்தில் பேசப்படுகின்ற அடியார்கள் ஏழை, பணக்காரன், முதலாளி, தொழிலாளி என்ற வேறுபாடில்லாமல் எல்லோரும் ஓர் உயரிய குறிக்கோளில் நின்று தொண்டு செய்தால் இறைவன் அருளைப் பெறலாம் என்பது உயிரோட்டமான கருத்தாக இருப்பதை உணரலாம். அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர் சிறப்புலி நாயனார். இவரைப் பற்றிய வரலாற்றைச் சேக்கிழார் பெரியபுராணத்தின் இரண்டாவது காண்டத்துள் இரண்டாவது

* 'இலக்கியப் பேருரை' எனும் வரிசையில் திருச்சிராப்பள்ளி அகில இந்திய வானொலி நிலையத்தில் சிறப்புலி நாயனார் தொடர்பாக 23-11-2005 அன்று நிகழ்த்திய பொழிவு.

சருக்கமாகிய வார்கொண்ட வனமுலையாள் சருக்கத்தில் இரண்டாவதாகக் கூறியுள்ளார்.

> "சிறப்பினைக் கொண்ட புகழையுடைய வள்ளலாகிய சிறப்புலி நாயனாருக்கும் நான் அடியேனாவேன்" (6)

என்பது சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையாகும். இப் பாடலடியைக் கொண்டு நம்பியாண்டார் நம்பி சற்று விரித்து,

> "இவ்வுலகத்திலே திருநீறும் உருத்திராக்கமணியும் விளங்க அணிந்து வந்த சிவனடியார்களுக்குச் சிறப்புச் செய்கின்ற தத்துவத்தின் காரணராய் விளங்கும் பண்புடையவர்; நிலவுலகத்தில் கீர்த்தியை யுடைய தென் ஆக்கூரில் அவதரித்த தலைவராகிய அரிய வேதியராகிய சிவனது நியமமாகிய ஒழுக்கத்திலே சிறந்து நின்ற பழமையாகிய சிறப்பினையுடையது நமது சிறப்புலியார்"

என்று வகைப்படுத்திப் பாடியுள்ளார்.

சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையையும், நம்பி யாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதிப் பாடலையும் மூலச்சான்றாகக் கொண்டு சேக்கிழார் பெருமான் 6 பாடல்களில் சிறப்புலி நாயனார் வரலாற்றை விரித்துப் பாடுகின்றார். இதைச் சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார்,

> "தொகைநூல் பேரும் பண்பும் அடிமைத் திறமாகிய சரிதக் குறிப்பும் பேசிற்று; வகைநூல் ஊரும் மரபும் பேரும் பண்பும் சரிதச் சிறப்பும் அடிமைத்திறமும் வகுத்தது. இவை விரிந்தபடி விரிநூலுட் கண்டுகொள்க"

என்று கூறுவார்.

இனிச் சேக்கிழார் காட்டும் சிறப்புலி நாயனார் வரலாற்றைக் காண்போம்.

நிலைபெற்ற புகழையுடைய சோழவளநாட்டில் மயிலாடு துறையிலிருந்து கிழக்கில் தரங்கம்பாடிக்குச் செல்லும் வழியில் அமைந்துள்ள தலமே திருவாக்கூர் ஆகும். காவிரியின் தென்கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. சம்பந்தர், அப்பர் ஆகியோரால் பாடல் பெற்ற சிறப்புடையது. அகத்திய முனிவருக்குச் சிவபெருமான் திருமணக் காட்சி அருளிய தலமாகும். இவ்வூரில் அமைந்துள்ள

கோயில் மாடக்கோயில் அமைப்பைச் சார்ந்தது. தான்தோன்றிமாடம் என்று பெயர் பெற்றது. இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் திருப்பெயர் தான்தோன்றியப்பர். இறைவியின் திருப்பெயர் வாள்நெடுங்கண்ணியாகும்.

ஓர் அரசன் இறைவன் கட்டளையிட்டபடி ஆயிரம் அடியார்களுக்கு அன்னமிட்டதாகவும், அவர்களில் இறைவனும் ஒருவராய் வந்து உண்டதாகவும், அதைப் பின்னர் மன்னன் அறிந்து மகிழ்ந்ததாகவும் ஒரு வரலாறு உண்டு. இறைவன் எழுந்தருளியிருக்கும் இக்கோயிலைத் 'தொல் கோயில்' என்றே சம்பந்தப் பெருமான் பாடல்தோறும் பாடியுள்ளார்.

எல்லாச் சிறப்புகளும் பொருந்திய தலம் திருவாக்கூர். இங்குள்ள பொன்னியாற்றின் கரைகளில் மீன் வகைகளை வாயில் கவ்விய பறவைகள் எப்பொழுதும் இருக்கும். இங்குள்ள பொய்கை களில் ஆம்பல், பிற அழகிய பூக்கள் மலர்ந்து மணம் வீசும். சேல் மீன்கள் மருவி, தாமரை மலர்களும் குவளை மலர்களும் செங்கழுநீர்ப் பூக்களும் நிறைந்து விளங்கும் நீர்வளம் மிக்க ஊராகத் திகழ்கிறது. இங்குள்ள வேளாளர்களைத் திருஞானசம்பந்தர்,

"வாளார்கண் செந்துவர்வாய் மாமலையான் தன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினான் தொல்கோயில்
வேளாளர் என்றவர்கள் வள்ளன்மையால் மிக்கிருக்கும்
தாளாளர் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே" (2.178.3)

என்று சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இவ்வுலகத்துள்ளோர்களில் வறுமையினாலே இரந்து சென்றவர்களுக்கு இல்லை என்று சொல்லாமல் அவர்க்கு வேண்டியதை வரையாது கொடுக்கும் இயல்புடையவர்கள் இவ்வூரில் வாழ்கின்றனர்.

சுத்தமாகிய குளிர்ந்த மலர்கள் நிறைந்த சோலைகள், வானளாவிய மாடமாளிகைகள், பெருமை பெற்ற மேகங்களின் முழக்கம் அடங்கும்படி வேத ஒலிகள் எப்பொழுதும் இவ்வூரில் கேட்டுக் கொண்டேயிருக்கும். அழகிய வீதிகளில் அகிற்புகைத் தூபமணம் கமழும். ஓமங்கள் செய்யும் வேள்விச் சாலைகளில் நெய் விடுவதனால் உண்டாகும் புகை அதிகரிக்கும்.

கரும்பு ஆலைகளைச் சூழ்ந்த பாக்கு மரங்கள் வேலி போல் சூழ்ந்து விளங்கும். இத்தகைய வளப்பம் கொண்ட திருஆக்கூரில் நிறைந்த புகழுடன் சிறப்புலி நாயனார் வாழ்ந்து வந்தார்.

'அந்தணர் என்போர் அறவோர்' என்பது திருவள்ளுவர் வாக்கு. உலகில் எல்லா உயிர்களும் வாழவேண்டும் என்ற அருளுடைய ராயிருக்கும் செந்தண்மையை அவர்கள் கொண்டு வாழ்கின்றனர். ஆதலின் அந்தணரை அறவோர் என்று கூறுவதும் பொருத்தமே யாகும். உலகம் பசியாலும் பஞ்சத்தாலும் துன்புறுகின்றதே என்று எண்ணி, அத்துன்பம் நீங்கி வளம் பெருக, அந்தணர்கள் வேள்வி செய்கின்றனர் ஆதலின் அவர்கள் அறவோர்தானே? வேள்வி செய்தால் மழை பொழிந்து வளம் சுரக்கும் என்னும் குறிப்பில் சேக்கிழாரும் 'வேள்வி நற்பயன் வீழ்புனலாவது' என்று அருளிச் செய்கின்றார். இத்தகைய பெருமை பெற்ற நான்கு வேதங்களையும் ஓதும் வேதியர்களது குலத்தில் சிறப்புலி நாயனார் அவதரித்தார்.

விடம் பொருந்திய கருமை மிக்க கண்டத்தையும், எண்தோள் களையும் உடையவராகிய நடராசப் பெருமானிடத்தில் அன்பு பூண்டு ஒழுகி வந்தார். சிவத்தொண்டினை மேற்கொண்டு ஒழுகும் சீலமுடையவராகிச் சால்பு பொருந்திய சிவனடியார்களுக்குப் பாரி போல் வரையாது வாரி வழங்கும் வள்ளலாராக அவர் திகழ்ந்தார். அதனால்தான் சம்பந்தர்,

> "இன்மையால் சென்றிரந்தார்க்கு இல்லை என்னாது ஈந்துவக்கும்
> தன்மையார் ஆக்கூரின் தான்தோன்றி மாடமே" (2.178.9)

என்று கூறினார்போலும்!

உலகங்கள் யாவற்றையும் ஆளுகின்ற தலைவராகிய சிவபெருமானுடைய அன்பர்களைக் கண்டால் அவர்கள் திருவடியில் வீழ்ந்து பணிவார். மூண்டெழுகின்ற அன்பு மேன்மேற் பொங்க, அவர்கள் திருமுன்பு நின்று இனிய மொழிகளைக் கூறுவார். நாள் தோறும் அவர்களுக்கு அறுசுவை உணவு ஊட்டி, வேர்கள் விரும்பிய எல்லாவற்றையும் கொடுத்து அதனால் பேருவகை கொள்வார். மேன்மேலும் பெருகி வளர்கின்ற இன்பத்துள்ளே வாழ்ந்து பொன் மழை பொழியும் புயலைப் போல விளங்கினார்.

> "ஆளும் அங்கணருக்கு அன்பர் அணைந்தபோது அடியில் தாழ்ந்து
> மூளும் ஆதரவு பொங்க முன்பு நின்று இனிய கூறி
> நாளும் நல்லமுதம் ஊட்டி நயந்தன எல்லாம் நல்கி
> நீளும் இன்பத்துள் தங்கி நிதிமழை மாரி போன்றார்" (சிறப்புலி. 4)

என்பார் சேக்கிழார்.

ஓதுகின்றவரை வாழவைக்கும் 'நமச்சிவாய' எனும் திருவைந்தெழுத்து மந்திரத்தை நாளும் ஓதி முத்தீ வளர்த்து நல்ல வேள்விகளைச் செய்வார். தவநெறியில் நின்று தலையாய சிவ புண்ணியங்கள் பல செய்து கொண்டிருந்தார். சிவபெருமான் பாதங்களில் பொருந்தும் வண்ணமாகவே அவர்தம் அடியார்களுக்கு எக்காலத்திலும் இடையறாமல் பல நற்பணிகளைச் செய்வாராயினார். அடியார்களுக்கு அன்பினாலே வள்ளலாக வரையாது கொடுக்கும் தன்மை உடையவராக விளங்கினார். இவ்வாறு சிறப்புலி நாயனார் எண்ணிலாத நல்லறங்களைச் செய்து அம்பலவாணர் திருவடி நிழலில் கலந்து பேரின்பப் பெருவாழ்வு பெற்றார்.

சிவபக்தியின் முதற்படி ஈவிரக்கமேயாகும். தம்மிடம் உள்ள செல்வம் சிவன் தந்தது என்று கருதி, சிவனடியார்களுக்கு 'நாம் தருகின்றோம்' என்ற தன்முனைப்பு ஒருசிறிதுமின்றி, 'இச்செல்வம் சிவனுடையது; சிவனடியார்க்கு இது உரியது' என்று ஆராத காதலுடன் தாராளமாகத் தருவதுவே அடியார்க்குரிய அரிய பண்பாகும்.

இவ்வாறு சிவதருமங்களால் மிகுந்த மேன்மை பெற்ற அந்தணர்கள் வாழும் திருவாக்கூரில் வந்த வேதியராகிய சிறப்புலியார் அள்ளி வழங்கும் வள்ளலாக விளங்கினார் என்பதைச் சேக்கிழார் பெருமான்,

**"நீலமார் கண்டத்து எண்தோள் நிருத்தர்தம் திருத்தொண்டு ஏற்ற**
**சீலராய்ச் சாலும் ஈகைத் திறத்தினில் சிறந்த நீரார்" (சிறப்புலி. 3)**

என்று அழகாகக் கூறுகின்றார்.

ஆகவே, பெரிய வள்ளல் தன்மையுடன் தம்மிடம் உள்ள பொருள்களை யெல்லாம் அடியார்களுக்காக அவர்கள் கேட்பதற்கு முன்னரே வழங்கிச் சிறப்புடன் நாயனார் வாழ்ந்தார். அதனால் இவரைச் சேக்கிழார் பெருமான் 'வள்ளலார்' என்றே குறிப்பிடுகின்றார்.

**"அறத்தினில் மிக்க மேன்மை அந்தணர் ஆக்கூர் தன்னில்**
**மறைப்பெரு வள்ளலார் வண்சிறப்புலி யார்" (சிறப்புலி. 6)**

என்பது சேக்கிழார் வாக்கு.

மனிதன் தன் வாழ்வில் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நால்வகைப் பயன்களை அடைதல் வேண்டும் என்பர் ஆன்றோர்.

அதனால்தான் பவணந்தி முனிவர், 'அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே' என்றார்போலும்!

அறத்தை நன்குணர்ந்து அவ்வறத்தின்வழிப் பொருளை ஈட்டுதலும், இன்பத்தைத் துய்த்தலும் யாருக்கு வரும் எனின்? எப்பொழுதும் இறையுணர்வு உள்ளவர்களுக்கே வரும் என்பது ஔவைப்பிராட்டியின் வாக்கு.

"ஈதலறம் தீவினை விட்டு ஈட்டல் பொருள் எஞ்ஞான்றும்
காதல் இருவர் கருத்தொருமித்து – ஆதரவு
பட்டதே இன்பம் பரனை நினைந்து இம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு"

என்பதே ஔவையார் கூறிய அப்பாடல். இதில் பரனை நினைந்து ஈதல் அறம், பரனை நினைந்து தீவினை விட்டு ஈட்டல் பொருள், பரனை நினைந்து காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதே இன்பம், பரனை நினைந்து இம்மூன்றும் விட்டதே பேரின்ப வீடு எனப் பொருள் கொள்ள வேண்டும். ஆகவே எல்லாவற்றிற்கும் அடிப்படை யாய் உள்ள அறம் எதுவெனில் அதுவே இறையுணர்வு என்பது தெளிவாகும்.

அருணந்தி சிவாசாரியார்,

"ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம்
உபசாரம் உறவு சீலம்
வழுக்கிலாத் தவம் தானங்கள்
வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவு அடக்கம்
அறிவொடு அர்ச்சித்தல் ஆதி
இழுக்கிலா அறங்கள் ஆனால்
இரங்குவான் பணி யறங்கள்" (சிவஞான சித்தி. சுபக்கம் 113)

எனும் பாடலில் பல்வேறு அறங்களைக் கூறிச் செல்கின்றார். தமக்குற்ற ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தல், எவ்வுயிர்க்கும் அன்புடை யராயிருத்தல், பிற உயிர்கள்மாட்டுக் கருணை உடையராய் இருத்தல், அகத்தும் புறத்தும் தூயராயிருத்தல், பிறரை அகமும் முகமும் மலர உபசரித்தல், பிறருடன் பண்பு பாராட்டி உறவு கொள்ளுதல், நன்னெறி உடையராயிருத்தல், வழுவிலாத் தவநெறியுடையராயிருத்தல், நல்லோருக்குப் பொருளை வழங்கல், பெரியோரைக் கண்டவழி கைகூப்பி வழிபடுதல், அடுத்துத் தலை நிலம்தோய விழுந்து

வணங்குதல், வாக்கினால் மெய் பேசுதல், அழுக்கில்லாத் துறவு நெறியுடையராயிருத்தல், எல்லாம் தெரிந்தும் அடங்கியிருத்தல், இறைவனை மலர்கள் இட்டு அர்ச்சித்தல் எனும் இவையும் இவை போல்வன பிறவும் அறங்களாகும். சிவஞான சித்தியாரில் இடம் பெறும் இவ்வறங்கள் அனைத்தையும் சிறப்புலி நாயனார் தம் வாழ்வில் மேற்கொண்டு ஒழுகினார்.

ஈகைத்திறம் மேற்கொள்வோர் உலகில் சிறந்த புகழ் பெறுவர் என்பதையும், சிவன் திருத்தொண்டும் சிவனடியார் வழிபாடும் சிவப்பேற்றை அளிக்கும் தன்மையன என்பதையும், ஐந்தெழுத்து ஓதுதலும் சிவனை நோக்கி நல் வேள்வி செய்தலும் மறையவரது சிறந்த ஒழுக்கங்களாகும் என்பதையும், வள்ளல் தன்மை பொருந்த அடியார்களுக்கு அன்பினால் கொடுத்தல் சிறப்புடையது என்பதையும் சேக்கிழார் பெருமான் சிறப்புலி நாயனார் வரலாற்றின் மூலம் இவ்வுலகுக்கு எடுத்துரைத்துள்ளார்.

திருத்தொண்டர்தம் பெருமைதான் என்னே!
சிவபெருமான் பேரருள் திறந்தான் என்னே!
இதனை இனிது எடுத்து மொழிந்த தெய்வச் சேக்கிழார்தம் சிறப்புத்தான் என்னே!

வாழ்க சேக்கிழார் சேவடிகள்!

# 10

# செப்பேடுகளில் முருகன்*

மெல்லிய தகடுகளாலும் அதிக அளவிலான எடை உள்ளனவாகவும் காணப்படும் செப்பேடுகள் கி.பி நான்காம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கின்றன.[1] இடத்திற்கு இடம் இச்செப்பேடுகளைப் பயன்படுத்துவதைப் பொறுத்து இவற்றின் அளவுகள் மாறுபடுகின்றன. தமிழகத்தைப் பொறுத்த அளவில் பல்லவர், பாண்டியர், சோழர், விஜயநகரர், நாயக்கர், மராத்தியர் போன்றவர்களின் ஆட்சிக் காலத்தில் பயன்படுத்தப்பெற்ற செப்பேடுகள் கிடைக்கின்றன. இவற்றில் மன்னர் பரம்பரை, வெற்றி, கொடைச் சிறப்புகள், சமயம் தொடர்பான குறிப்புகள், மக்களின் சமுதாய வாழ்க்கை முதலான பல்வேறுபட்ட செய்திகளைக் காண முடிகின்றன. செப்பேடுகளில் காணப்படும் முருகன் தொடர்பான செய்திகளையும், வரைகோட்டு ஓவியங்களையும் இக்கட்டுரை ஆராய்கிறது.

## செப்பேட்டின் சிறப்பும் அமைப்பும்

ஏறத்தாழப் பத்துக்கும் மேற்பட்ட செப்பேடுகளில் முருகன் தொடர்பான செய்திகளும், வரைகோட்டு ஓவியங்களும் காணப்படுகின்றன. நீண்ட சதுர வடிவில் அமைந்துள்ள இப் பிற்காலச் செப்பேடுகள் விஜயநகர, நாயக்கர், மைசூர் அரசர், தஞ்சை மராத்தியர் போன்றவர்களின் காலத்தைச் சேர்ந்தவையாகும். கி.பி.1480 முதல் கி.பி. 1770 வரை உள்ள காலத்தைச் சேர்ந்த இவற்றில் ஓரிரு செப்பேடுகளில் மட்டும் காலம் குறிக்கப்படவில்லை. இவை பழனி திருக்கோயில் தேவஸ்தானத்திலும், இராமநாதபுரம் அரசு அருங்காட்சியகத்திலும், மைய அரசு தொல்லியல் அளவீட்டுத்துறையின் கல்வெட்டுப் பிரிவிலும், குகையீசுவரர் திருமடத்திலும், பரம்பரைப் புலவர் இல்லத்திலும், திருவாரூர்க் கோயிலிலும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

* 'தமிழ் மரபும் முருக வழிபாட்டு நெறியும்' எனும் தலைப்பில் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சார்பில் அருள்மிகு பழனியாண்டவர் கலை-பண்பாட்டுக் கல்லூரியில் 8,9-08-1998இல் நடைபெற்ற தேசியக் கருத்தரங்கில் படிக்கப்பெற்ற

1. John Guy, Palm-Leaf and Paper, National Gallery of Victoria, 1982, p. 57.

*சில செப்பேடுகள் வாழ்த்துப் பாடலுடன் தொடங்குகிறது. இறைபுகழ் பாடுதல், மன்னர் மெய்க்கீர்த்தி, கொடை கொடுத்தவர்கள், வரிகள், பூசைகள், வழிபாடு, விழாக்கள் போன்ற பல்வேறு சிறப்புகளை இவற்றில் காணமுடிகின்றன. சில செப்பேடுகளின் இறுதியில்,*

> "தெண்டாயுதபாணி துணை" (196)[2]

> "பழனி வேலாயுதசுவாமியாரும் லட்சிக்கவும் . . . . . . .
> வேலுமயிலு முன்னடக்க குமாரசுவாமியார் ரட்சிக்கவும்"
> (207)

> "பளனியப்பரையும், வள்ளி தெய்வானையும் சேவித்த பலன்
> பெருவாராகவும்" (294)

> "ஸ்ரீ வேலாயுதசுவாமி அனுக்கிரகிப்பார்" (302)

> "வேலு மயிலும் துணை உ" (306)

*என்று காணப்படுகிறது.*

## முருகன் புகழ்

*ஆறுமுகன், கந்தன், குமாரன், சரவணன், சுப்பிரமணியன், தண்டாயுதபாணி எனும் பெயர்கள் முருகனைக் குறிப்பனவாகச் செப்பேடுகளில் காணப்படுகின்றன. ஆயின் 'முருகன்' எனும் பெயர் எந்தச் செப்பேட்டிலும் இடம்பெறவில்லை.*

*கவுரி திருமகன் (107, 205), பரமேசுர குமாரன் (191), சிவசுப்பிர மணியன் (191), பார்வதி மைந்தன் (205) என்று சிவன் - பார்வதியின் மகனாக முருகன் போற்றப்படுகின்றான். ஒரு செப்பேட்டில்,*

> "செம்புத் தீவில் தொண்டை மண்டலத்தில் காஞ்சி மாநகரில்
> திருக்கம்பையாற்றில் ஒற்றைடா மாவடியில் பார்வதிதேவி
> அர்த்தபாகம் பெறவேண்டி அரிய தவசு பண்ணுகையில்
> அப்போது காட்சி கொடுத்து ஐந்து தலமுள்ள பொருள்
> தனையும் கொண்டுவரும் பொன்னிப் புனலாறு புடை சூழ்ந்த
> கொங்குதன்னில் தெட்சிண கைலாச மென்கின்ற ஸ்ரீ நாககிரி
> பர்வதத்தில் அர்த்தபாகம் கொடுத்தருளிய அர்த்தநாரீஸ்வர

பிறை வளைவுக்கோட்டில் காணப்படும் எண்கள், செ. இராசு பதிப்பித்த '*கொங்கு நாட்டுச் சமுதாய ஆவணங்கள்*' எனும் நூலின் பக்க எண்களைக் குறிக்கும்.

ருடைய தம்பிரான் அவருடைய ஸ்ரீமத் குமாரராகிய, விப்பிரப்பிரியன் விகவமூர்த்திகவர பாலன் சரவணபாலன் சண்முகப்பிரதாபன் கெவுரி திருமகன்" (205)

*என்று தாய், தந்தையரின் பெருமையைக் கூறி 'இன்னாரது திருமகன்' எனக் கூறுவதைக் காணமுடிகின்றது.*

*சரவணப் பொய்கையில் முருகன் பிறந்ததைச் 'சரவண பாலன்' (205) என்றும், 'பரமசிவன் கிருபை கூர்ந்து சரவணையி லுதித்த ஆண்டவர்' (226) என்றும் கூறப்படுகின்றன.*

*முருகப் பெருமானின் சகோதரர்களாக விநாயகரும் (107, 205), வீரபாகு தேவரும் (206) கூறப்படுகின்றனர். செங்குந்த முதலியாரின் பெருமைகளையும் முன்னோர் மரபையும் கூறிவரும் பொழுது 'கந்தன் சகோதரர் ஆகிய வீரபாகுதேவர் மரபுடைய செங்குந்த முதலிமார்கள்' (206) என்று காணப்படுகிறது.*

*வள்ளி, தெய்வானையின் கணவனாகவும் (107), திருமாலின் மருமகனாகவும் (191), மயிலை வாகனமாக உடையவனாகவும் (191) முருகப்பெருமான் போற்றப்படுகின்றனன்:*

'தேவர் சிறை மீட்ட தேவர் சேனாபதி' (107)

'அமரற் சிறை மீட்ட தேவர்கள் தேவன்' (191)

'அசுறர் குலைகாறன்' (191)

'தெய்வலோக நாயக அகிலாண்டகோடி பிறமாண்ட நாயகன்' (191)

'மாள்வதற்கு வடவனல் போல வெழுந்த வடிவே லெடுத்த சேவல்த்தீரன்' (191)

'அமராபதி காவலன்' (191)

'தேவர்கள் சேனாபதி' (191)

*என்று முருகனின் புகழ், வீரம் போன்றவை கூறப்படுகின்றன.*

"அகஷ்த்தியர்க்கு செந்தமிள்ப் பனுவலும் ஆறெழுத் துண்மையும் ஓதி வைத்தவன், வாணிக்கு வாக்கு வரமுங் கொடுத்தவன், மறைமகனுக்கு யின்பமும் வரமுங் கொடுத்தவன், தேவிறுக் கின்பமும் சிறப்பா யளித்தவன், சூரியன் பதவி தோன்ற அளித்தவன்" (192)

என்றும்,

> "தேனுவுக்கு யின்பம் சிறப்பா வழித்தவன், சூரியனுக்குப் பதவி தோன்றயழித்தவன், வாணிக்கு வாக்கு வரமுங் கொடுத்தவன், மலைமகள்க் கின்பமும் வாள்வுங் கொடுத்தவன்" (291)

என்றும்,

> "சிஷ்டிக்கும் பிரமன் சிரசு திண்டாட குட்டிக் குடுமியை நெட்ட வாங்கும் குமார கெம்பீரன்" (206)

என்றும் முருகனின் திருவிளையாடல்கள் கூறப்படுகின்றன.

> "திருப்பரங்குன்றம், சீரலைவாயி, திருவாவினன்குடி, திருயேறகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகப் பதியாகிய ஆறு தலத்திலும் பிறப்பதியாகிய தில்லை, திருவேங்கடம், திருக்காளஷ்த்தி, திரிகாஞ்சிபுரம் யிப்படி பனிரெண்டு தலத்திலும் எழுந்தருளி" (192)

யிருப்பவன் முருகப்பெருமான் ஆவர்.

'பழனிமலைச் செப்பேட்'டில் உலகத் தோற்றத்தைப் பற்றிக் காணப்படும் பகுதியில்,

> "சுப்பிரமணிய சுவாமி ஆறுமுகங்களுக்குத் திருமேனி யொன்றாய் நின்ற தமைபோல் இந்த ஆறுதரிசனங்களாலே தீர்த்தங்கள் பிறந்தன" (300)

என்று ஆறு திருமுகத்திலிருந்து ஆறு தீர்த்தங்கள் பிறந்தனவாகக் காணப்படுகின்றன.

## பாடல்களில் முருகன்

முருகனின் புகழ் பாடும் தோத்திரப் பாடல்கள் சில செப்பேடுகளில் காணப்படுகின்றன. அப்பாடல்கள் (191, 299) வருமாறு :

> "கருணைபொழி திருமுகங்க ளாறும் வாழி
> கரகமல பன்னிருகை வேலும் வாழி
> இருசரண மென்தலைமேல் நாளு மோங்க
> யிந்துரவிக் கப்பாலு மினிது வாழி

அருள்பரவி அமரர்சிறை மீட்டே ஆண்ட
ஆறிரண்டு திருநயனத் தழகும் வாழி
மருவணியும் கடப்பந்தார் மார்பும் வாழி
மயில்பரியே வல்கொடியும் வாழி வாழி

அடைந்தவர் துணைவா வாழி
அடியவர்க் கெளியாய் வாழி
மடந்தைதன் மைந்தா வாழி
மாதவன் மருகா வாழி
திடம்புனை வேலா வாழி
தேவரா ருயிரே வாழி
படந்தபோ ரசுரர் கூற்றாம்
பரமனே வாழி வாழி

நன்னெறி முகமும் வாழி
நல்லெள முடியும் வாழி
பன்னிரு கரமும் வாழி
பாதபங் கயமும் வாழி
கன்னிபா ரெழுவர் வாழி
கதிர்மதி மன்னி வாழி
என்னிரு வினைய கற்றும்
இளையவன் வாழி வாழி"

ஆறு, எட்டு ஆகிய சீர்களில் காணப்படும் இப்பாடல்களில் சில எழுத்துகள், சொற்கள் பிழைபட எழுதப்பட்டுள்ளன. பழனி திருநீலகண்டர் மடத்துச் செப்பேடு, பழனிமலைச் செப்பேடு 1,3 ஆகிய மூன்று செப்பேடுகளின் தொடக்கத்தில் இடம்பெறும் இப்பாடல் களில் ஒரு செப்பேட்டில் மட்டும் 'ஆறுமுகம் துணை' (291) என்று காணப்படுகிறது.

## முருகனும் பிள்ளையாரும்

முருகப்பெருமானது திருவவதாரமானது அசுரர்களை அடக்கித் தேவர்களைக் காப்பாற்றுவதற்காக நிகழ்ந்தது. அது போலவே ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்தர் இவ்வுலகில் சமண முதலாகிய பரசமயங்களை நிராகரித்து அவற்றின் மீறுகையினால் அடக்கி ஒடுக்கப்பட்ட சைவ சமயத்தை ஆக்கம் செய்வதற்காகவே பிறப்பெடுத்தார். இதனை,

"பரசமய நிராகரித்து நீறாக்கும்
புனைமணிப் பூண் காதலன்"[3]

---

3. சேக்கிழார், <u>பெரியபுராணம்</u> திருஞானசம்பந்த நாயனார் புராணம் 19.

என்பார் சேக்கிழார்.

ஆளுடைய பிள்ளையாரின் வாழ்வில் பொற்றாளம் பெற்றல், முத்துச்சிவிகை பெற்றல், முயலகன் நோய் தீர்த்தல், முத்துப்பந்தர் பெற்றல், ஆயிரம் பொன் பெற்றல், விடத்தைத் தீர்த்து மணம் செய்வித்தல், பொற்காசு பெற்றல், மறைக்கதவம் திறப்பித்தல், அனல் வாதம் - புனல் வாதம் செய்தல், ஆண் பனையைப் பெண் பனை யாக்குதல், எலும்பைப் பெண்ணாக்குதல் போன்ற செயல்கள் இறைவன் திருவருளால் நிகழ்ந்தன. இவற்றுள் சில செயல்கள் முருகப் பெருமானாலே செய்தனவாகச் சில செப்பேடுகளில் காணப்படுகின்றன.

"சிவசமய பரிபாலகன் ஏடெளுதி வைத்தவன் எதிரிலை யேற விட்டவன்" (312)

என்றும்,

"யெண்ணாயிரம் சமணரைக் கழுவில் லேற்றி வைத்தோன்" (312)

"துட்ட சமணரை வெட்டிக் கழுமிசை வைத்தப் பிரமண்ணியப் பிள்ளையார் பழனி வேலாயுத சுவாமியார்" (207)

"துஷ்டச் சமணரை வெட்டிக் கழுமிசை வைத்த சுப்பிர மண்ணிய சுவாமியார்" (107)

என்றும் செப்பேடுகளில் காணப்படுகின்றன.

திருவோத்தூரில் வாழ்ந்து வந்த சைவ அன்பருக்காக ஆளுடைய பிள்ளையார் ஆண் பனையைப் பெண் பனையாக்கியதை,

"ஆண்பனையை பெண்பனையாக்கி வைத்தவன்" (312)

என்று முருகப்பெருமான்மீது ஏற்றிச் செப்பேட்டில் பொறித்தமை யைக் காணமுடிகிறது.

பெரியபுராணத்தில் சம்பந்தரின் வரலாற்றில் காணப்படும் திருமயிலை சிவநேசச் செட்டியாரின் மகள் பூம்பாவையைப் பிள்ளையார் உயிர்ப்பித்துக் கொடுத்த நிகழ்ச்சி, 'கபிலமலைச் செப்பேட்டில்',

"திருமயிலுறு சிவனேச செட்டியார் மகட்குத் திருமணஞ்

செய்து வைத்தவன்" (312)

என்று காணப்படுகிறது. பூம்பாவை மணம் செய்து கொள்ளாமல் கன்னிமாடத்தில் தவவாழ்க்கை மேற்கொண்டதாகச் சேக்கிழார் கூறுவதற்கு மாறாக இச்செப்பேட்டில் அப்பெண்ணுக்கு முருகப் பெருமான் திருமணம் செய்து வைத்ததாகக் கூறுவதைக் காணமுடிகிறது.

முருகப் பெருமானே திருஞானசம்பந்தராக அவதாரம் எடுத்ததாக அருணகிரிநாதர் திருப்புகழில் பாடியிருக்கின்றார். இவர் காலம் கி.பி. 15ஆம் நூற்றாண்டாகும். செப்பேடுகளின் காலமும் ஏறத்தாழ இதே நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். எனவே இக்காலகட்டத்தில் முருகப்பெருமானின் அவதாரமாகச் சம்பந்தனை எண்ணியிருந்தமையின் விளைவையே செப்பேடுகள் காட்டுகின்றன. ஆயின் சேக்கிழார், ஆளுடைய பிள்ளையார் வரலாற்றைக் கூறும் பகுதியில்,

> "நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
> சேமவுல கப்பரிதி யிற்றிகழ் பிரானைத்
> தாமரை மிசைத்தனி முதற்குழவி யென்னத்
> தூமணி நிரைத்தணிசெய் தொட்டிலமர் வித்தார்"[4]

எனும் பாடலுக்கு உரை எழுதிய சி.கே. சுப்பிரமணிய முதலியார்,

> "ஆளுடைய பிள்ளையார் என்னும் திருஞான சம்பந்த நாயனார் அவதாரஞ் செய்தருளினார். அவருக்கு உரிய நாளிலே நாமகரணம் (பெயர் சூட்டுதல்) செய்தார்கள். உலகத்துக்குச் சேமம் செய்ய உதயமாகி வரும் சூரியனைப் போல விளங்கும் அப்பெருமானைச் சரவணப் பொய்கையினிடத்தே தாமரையின்மீது விளங்கும் தனி முதலாகிய குழவியாய் வந்த முருகப் பெருமானைப் போல் விளங்கும்படி தூயமணிகள் வரிசையாய் அமைத்து அணி செய்த தொட்டிலினிடத்தே அமர்வித்தனர்"

என்று கூறுவதை இவண் நினைவுகூர்தல் பொருந்தும்.

## முருகன் ஓவியங்கள்

செப்பேட்டில் உளி கொண்டு எழுத்துகளைச் செதுக்கு

4. சேக்கிழார், பெரியபுராணம், திருஞானசம்பந்த நாயனார் புராணம் 43.

வதைப் போலவே ஓவியமும் வரைகோட்டு வடிவத்தில் வரையப் பட்டுள்ளதைக் காணமுடிகின்றன. சில செப்பேடுகளில் ஓவியங்களை வரைந்து அதன் கீழ்ப்பகுதியில் செப்பேட்டுப் பகுதிகளை வெட்டி யிருப்பதைக் காணமுடிகின்றன. சில செப்பேடுகளில் செப்பேட்டுப் பகுதிகள் முடிந்த பிறகு இறுதியாக ஓவியத்தைச் செதுக்கி யிருப்பதையும் காணமுடிகின்றன. செப்பேட்டில் அதைச் செதுக்கிய ஆசாரியின் பெயரையும் பொறித்து வைத்திருப்பதையும் காண முடிகிறது. ஓவியங்கள் காணப்படும் செப்பேடுகளில் ஒன்றில் மட்டும் 'பழனியில் கந்தசாமி ஆசாரி' (297) என்றுள்ளது. ஏனையவற்றில் ஆசாரியின் பெயர் காணப்படவில்லை.

முருகன் ஓவியங்கள் காணப்படும் செப்பேடுகளில் குழுவாகவும், தனிநிலையிலும் முருகன் எழுந்தருளியிருப்பதைக் காணமுடிகின்றன.

சிவபிரான் அல்லது நடராசர் அல்லது முகவடிவிலான சிவலிங்கம், பார்வதி, விநாயகர், அடியார்கள், முனிவர்கள், திருமால், அரசர்கள் ஆகியோருடன் முருகப் பெருமான் எழுந்தருளியிருக்கும் நிலையில் குழு ஓவியங்கள் அமைகின்றன.

தஞ்சை மராத்திய மன்னர் முதலாம் துளஜா என்ற துக்கோஜி மன்னர் காலத்தைச் சேர்ந்த செப் பேட்டில்[5] வேலைப்பாடமைந்த தேரின்மீது திருவாரூர்த் தியாகேசர், உமையவளுடன் எழுந்தருளி யுள்ளார். தேரின் இடப்புறம் பிறைச் சந்திரனும் வலப்புறம் சூரியனும் பெரிய அளவில் உள்ளன. பிறைச் சந்திரன் உருவத்தின் கீழ் முருகப் பெருமான் நின்ற கோலத்தில் எழுந் தருளியிருக்கிறார். சூரியன் உருவத் தின்கீழ் விநாயகர் அமர்ந்த நிலையில் காட்சி தருகின்றார். அதன் பின்னர் நான்கு முனிவர்கள், இரு அடியவர்கள் காட்சி அளிக்கின்றனர்.



5. காலம் : 02-06-1733.

முதலாம் சரபோஜி மன்னர் காலத்தைச் சேர்ந்த செப்பேட்டில்[6] தில்லை நடராசர் நடனமிடும் காட்சி உள்ளது. நடராசரின் இடப்புறம் சிவகாமி அம்மையார் குவளை மலரைத் தாங்கி நின்ற கோலத்தில் எழுந்தருளியுள்ளார்.



இவருக்கு இடப்பக்கத்தில் நான்கு கைகளுடன் மயில் வாகனத்தில் முருகன் இருக்கின்றார். பின் வலக் கையில் வேற்படையும் இடக்கையில் வச்சிரப்படையும் முன்வலக்கை அபயம் அளித்தும் இடக்கை வர மருளியும் காணப்படுகின்றன. நடராசரின் வலப்பக்க ஓரத்தில் விநாயகர் உள்ளார்.

விநாயகருக்கும் நடராசருக்கும் இடையில் சிறிய வடிவில் நின்ற நிலையில் பதஞ்சலி, வியாக்கிரபாதர், இரணியவர்மர் ஆகிய மூவரும் பெருமானின் திருநடனக் காட்சியைக் கண்டு வழிபடுகின்றனர்.

இத்தொகுதியின் தொடர்ச்சியாகக் கோவிந்தராசப் பெருமாள் பாம்பணையில் பள்ளி கொண்டிருக்கும் தொகுதியும் உள்ளது. பெருமாள் அருகில் இலக்குமியும் காலடியில் பூமகளும் நின்று கொண்டிருக்கின்றனர். மேல் விமானத்திலுள் சக்கரம், தென்கலை நாமம், சங்கு ஆகிய மூன்றும் உள்ளன. நடராசருக்கும் பெருமாளுக்கும் நேராகக் கொடிமரமும் மண்டபத்துடன் கூடிய நந்தியும் பலிபீடமும் உள்ளன.

வைத்தீசுவரன் கோயில் செப்பேட்டின் நடுவில் முருகப் பெருமான் மயில் வாகனத்தில் நின்ற கோலத்தில் நான்கு கைகளுடன் எழுந்தருளியுள்ளார். அவரின் இரு புறமும் வள்ளியும், தெய்வயானையும் நின்ற நிலையில் காணப்பெறு கின்றனர். வலப்புறத்தில் முகவடிவி



---

6. காலம்: 26–08–1719.

லான சிவலிங்கமும், இடப்புறத்தில் நான்கு கைகளுடன் உமையவளும் காட்சியளிக்கின்றனர். இத்தொகுதியின் தொடர்ச்சியாக விநாயகர், அடியவர்கள் காட்சியளிக்கின்றனர்.

பழனி தேவாங்கர் மடத்துச் செப்பேட்டின் இறுதியில் காணப்படும் ஓவியத் தொகுதியில் முதலில் முக வடிவிலான சிவலிங்கம் பூமாலை சாத்தியிருப்பது போல் காணப்படுகிறது.



அடுத்துக் கையில் சூலத்துடன் உமையவளும், ஆண்டிக் கோலத்தில் கையில் வேலைத் தாங்கிய நிலையில் முருகனும், தனியாக வேலும், தோகை விரித்த நிலையில் மயிலின் காலடியில் படம் விரித்த நிலையில் பாம்பும், கணபதியும் காட்சியளிக்கின்றனர்.



குறிச்சித்தெருச் செப்பேட்டின் நடுவில் நான்கு கைகளுடன் மயில் வாகனத்தில் முருகப்பெருமான் நின்றகோலத்தில் காட்சியளிக்கின்றார். இவர் உருவத்தைச் சுற்றிலும் பிரபை காணப்படுகிறது. இவரின் இருபுறமும் தனித்தனியாக வள்ளியும் தெய்வயானையும் நின்ற நிலையில் எழுந்தருளியுள்ளனர். இருவர் உருவத்தைச் சுற்றிலும் பிரபையும் காணப்படுகிறது.

முருகனின் வாகனமாகக் கருதப்படும் மயில் உருவத்தை மட்டும் இரண்டு செப்பேடுகளில் வரைந்திருப்பதைக் காண முடிகின்றன. அழகிய வேலைப்பாடுகளுடன் திகழும் இரண்டுமே இருவேறு நிலைகளில் வரைந்திருப்பதைக் காண முடிகின்றன.



திருச்செந்தூர்ச் செப்பேட்டில் மயில் அலகில் பாம்பும், மயிலின் மேற்புறத்தில் படுக்கை நிலையில் வேலும் காணப் படுகின்றன. மயிலின் இருபுறமும் பூக்கள் வரையப்பட்டுள்ளன. இச்செப்பேட்டின் கைப்பிடி மிக அழகிய வேலைப்பாட்டுடன் வரையப்பட்டுள்ளது. ஏழாயிரம் பண்ணைப் பட்டயத்தில் மயிலின் மேற்புறத்தில் செங்குத்து நிலையில் வேல் காணப்படுகிறது.

## முடிவுரை

நாயக்கர், மராத்தியர் காலத்தைச் சேர்ந்த செப்பேடுகளில் முருகன் தொடர்பான செய்திகளும், ஓவியங்களும் காணப்படுகின்றன முருகனின் வீரச்செயல்களும், அவன் செய்த திருவிளையாடல்களும், அவன் எழுந்தருளியுள்ள தலங்களும் இவற்றில் காணப்படுகின்றன. திருஞானசம்பந்தர் முருகப்பெருமானின் அவதாரமாக இலக்கியங்களில் காணப்படுவதைப் போன்றே செப்பேடுகளிலும் காணப்படுகின்றன. ஒட்டக்கூத்தர் காலம் முதல் அருணகிரிநாதர் உட்படப் பல அருட்புலவர்கள் முருகப்பெருமான் அவதாரமே திருஞானசம்பந்தர் என்று வலியுறுத்தி எழுதியுள்ளனர். இது ஆளுடைய பிள்ளையார் அன்னையின் பாலமுது உண்ட காரணத்தால் எழுந்தது எனலாம். ஆனால் கொங்கு நாட்டுச் செப்பேடுகளில் ஞானசம்பந்தர் வாழ்வில் நடந்த அருட்செயல்கள் அத்துணையும் முருகன் செயலாகக் கூறப்பட்டுள்ளது மிகவும் அரிய நிகழ்ச்சிகளாகும். ஞானசம்பந்தர் செயல்களை முருகன் செய்ததாகக் கூறியிருப்பது ஞானசம்பந்தரும் முருகனும் வேறுவேறு அல்ல ஒருவரே என்று எண்ணிய எண்ணத்தாலேயாகும். இவை கௌமார வரலாற்றில் புதுமையான எண்ணங்களாகும். இக்கருத்து மேலும் விரிவாக ஆய்வுக்குரிய ஒரு முக்கியப் பொருளாகும். முருகன் ஓவியங்கள் குழுவாகவும், தனிநிலையிலும் வரைந்திருப்பதைக் காண முடிகின்றன இச்செப்பேடுகளில் காணப்படும் செய்திகளும், ஓவியங்களும் அக்கால மக்களின் பண்பாடு, வரலாறு, சமயம் போன்றவற்றை அறிவதற்குப் பெரிதும் துணைசெய்கின்றன எனில் மிகையில்லை.

# 11

# குமரகுருபரரின் தலப்பயணங்கள்*

இந்தியநாடு கோயில்கள் சூழ்ந்த திருநாடாகும். தனி மனிதன் வாழ்விற்கும் அவன் கட்டுக்கோப்பாக வாழ்வதற்கும் ஆணிவேராக இக்கோயில்கள் அமைந்திருக்கின்றன. இத்தகைய கோயில்களைச் சுற்றியே மக்களின் வாழ்க்கை முறை அமைந்து விளங்குகிறது. எனவேதான் இக்கோயில்களுக்குப் பயணம் சென்று வருவதை ஒரு புனிதச் செயலாகப் போற்றி வருகின்றனர். இறை நம்பிக்கையுடையவர்கள் இறைவன் எழுந்தருளியுள்ள தலங்களுக்குப் புனிதப் பயணம் மேற்கொள்வதைத் தங்களின் வாழ்வியல் கடமைகளுள் ஒன்றாகவே கருதி வருகின்றனர். குமரகுருபரர் மேற்கொண்ட தலப்பயணங்களை ஆராய்வது இக் கட்டுரையின் நோக்கமாகும்.

## ஆலய வழிபாடு

தெய்வத்தை வழிபட்டால் அத்தெய்வம் வழிபடுவோரின் புறத்தே நின்று அவரைக் காத்துவரும் என்று தமிழர்கள் நம்பினர். அதனால் தெய்வங்களுக்குக் கோயில்கள் எடுத்தும், உருவங்களைச் சமைத்தும் வழிபட்டனர். தெய்வம் தமக்குச் செய்யும் நன்மைக்காகத் தெய்வத்திற்குக் கைம்மாறாக ஏதாவது செய்ய வேண்டுமென்று விரும்பினர். நன்மை பெற்றாலும் தீமை நிகழ்ந்தாலும் எல்லாம் இறைவன் திருவருளால்தான் நிகழ்கின்றன என்று கருதினர். மக்கள் மேல் நின்று தெய்வம் அவர் வாய்வழி உரைப்பதாகவும் எண்ணினர்.

ஒருவன் செய்யும் நல்வினை, தீவினைகளுக்கேற்ப நன்மை தீமையை அவன் அடைவான் என்ற கோட்பாடு காலப்போக்கில் ஊழ்வினை, மறுபிறப்பு, மோட்சம், நரகம் என்று உருவாயிற்று. ஊழ்வினையால் ஒருவன் மோட்சத்தையோ நரகத்தையோ அடைவான் என்று நம்பினர். சங்க காலம் தொடங்கி இறை தொடர்பான நம்பிக்கைகள் இன்றுவரை இருந்து வருகின்றன.

---

* குமரகுருபரர் இலக்கிய ஆய்வு மாநாடு தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையின் சார்பில் வாரணாசியில் 4,5,6–10–1999இல் நடைபெற்றபோது படிக்கப்பெற்ற கட்டுரை, குமரகுருபரர் ஆய்வுமாலை, தொகுதி 3, பக். 1391–1402.

மனிதனுக்கு உடம்பும், வாக்கும் தந்தவன் இறைவன். இவை தாமே வந்து அமைவதில்லை. நாமும் எடுத்துக் கொள்வதில்லை. வாழ்த்துவதற்கு வாயையும், நினைப்பதற்கு நெஞ்சையும், வணங்குவதற்குத் தலையையும் தந்த தலைவனாகிய இறைவனை இவ்வுலகில் பிறந்த ஒவ்வொருவரும் பூவும் நீரும் கொண்டு வணங்குதல் வேண்டும் என்பதை,

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவன்"[1]

என்கின்றார் அப்பர்.

மற்றோரிடத்தில் கால்களால் பயன் என்? என்பதை,

"கால்களாற் பயனென் – கறைக்
கண்டன் உறை கோயில்
கோலக் கோபுரக் கோகரணம் சூழாக்
கால்களாற் பயனென்"[2]

என்கின்றார். இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோயில்களுக்குச் சென்று வழிபடவேண்டும் என்பதையே அப்பர் இவ்வுலக மக்களுக்கு உணர்த்தியுள்ளார்.

சிவன்முத்தன் என்போர் மும்மல அழுக்கை ஞானநீரால் கழுவுவன்; மலநீக்கம் நீங்கும் பொருட்டுச் சிவசின்னம் அணிந்த சிவனடியார்களின் திருவேடத்தையும், சிவன் உறையும் திருக்கோயில்களையும் முதல்வனாகவே கண்டு வழிபடுவான். இதனை மெய்கண்டார்,

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானும் அரனெனத் தொழுமே"[3]

என்று கூறினார். ஆலய வழிபாடு செய்து பெரும் பேறெய்திய மார்க்கண்டேய முனிவர் இதற்குச் சான்றாவர்.

1 அப்பர் தேவாரம் 5.90.7.
2 மேலது 4.9.9.
3 மெய்கண்டார், சிவஞானபோதம் சூத்திரம் 12.

"அத்த னாலய மனைத்தும் வைகலும்
பத்தி யோடுமுன் பரவி யேமிகுந்
சுத்த னாகியே தொலைவி லாருயின்
முத்தி யெய்தினான் முழுதுணர்ந் துநோன்"[4]

என்பது கந்தபுராணம்.

### தலப்பயணம்

சங்க காலத்தில் வளமுடைய புரவலர்கள், வள்ளல்கள், மன்னர்கள் போன்றவர்களை நாடிச் சென்று அவர்களைப் போற்றிப் பாடிப் புலவர்கள் பரிசில் பெற்றனர். இவற்றினடிப்படையிலேயே ஆற்றுப்படை நூல்கள் தோன்றின. அதிலும் திருமுருகாற்றுப்படை நூல் முருகனிடம் ஆற்றுப்படுத்துவதாகப் பாடப்பட்டுள்ளது. காலப் போக்கில் இறைவன் உறையும் தலங்களுக்குச் சென்று தங்கள் குறைகளைப் போக்கிக் கொள்ள முயன்றனர். இறையனுபூதி பெற்ற அருளாளர்கள் தலப்பயணம் சென்று பாடல்களைப் பாடி மகிழ்ந்தனர். சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய சமய குரவர்கள் இவ்வாறு தலங்கள் தோறும் சென்று இறைவனைப் பாடி மகிழ்ந்த திருத்தலங்கள் 'திருமுறைத் தலங்கள்' எனப்பெற்றன. இவர்களால் பாடப்பெற்ற தோத்திரப் பாக்களும், ஆழ்வார்களால் பாடப்பெற்ற பாசுரங்களும் திருக்கோயில்களை மையமாகக் கொண்டே எழுந்தன. தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம் போன்ற பனுவல்களில் காணப்படும் திருத்தலங்களோடு புராண இதிகாச மாந்தர்கள் தொடர்பு கொண்டுள்ளனர். திருமால், நான்முகன், திருமகள், உமையவள், காளி, இந்திரன், தேவர்கள், இராமன், இலக்குவன், அருச்சுனன், சடாயு முதலானோர் வழிபட்டு வந்ததாகப் பல திருத்தலங்கள் குறிப்பிடப்படுகின்றன. இத்தகைய சிறப்புப் பெற்ற திருத்தலங்களுக்குச் சென்று வழிபட்டால் பாவம் தொலையும் என்றும் புண்ணியம் கிட்டும் என்றும் மக்கள் நம்பினர்.

இந்து சமயம், இசுலாம், கிறித்தவம் போன்ற சமயங்களில் உள்ளவர்களும் தாங்கள் சார்ந்துள்ள சமயங்களைச் சார்ந்த தலங்களுக்குப் பயணம் மேற்கொண்டனர். உலக நன்மைக்காகவும், ஆன்மநேயத்திற்காகவும், மன அமைதிக்காகவும், இறைவன் உறையும் திருத்தலங்களுக்குச் சென்றனர். சிலர் 'பாதயாத்திரை'யாகவும் சென்று வழிபட்டனர். இந்து சமயம் ஏனைய சமயங்களை விடவும் மிகுதியான கடவுளர்களைப் பெற்றுள்ளது. கடவுளை எந்த உருவிலும்

---

4. கச்சியப்ப சுவாமிகள், _கந்தபுராணம்_

எந்த முறையிலும் வழிபட முடியும் எனும் தத்துவ நெகிழ்ச்சியும் இச்சமயத்தில் உள்ளது. ஆன்மாக்களாகிய முத்தியாகிய கரையில் ஏற்றுங்காரணமாகவே மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்று வடிவாய்ச் சிவபிரான் விளங்குகின்றனன். இவற்றை முறையோடு வழிபடுவோர் பரமாசாரியரால் உண்மை ஞானம் பெற்று முத்தி யடைவர் என்பதை,

"மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"[5]

என்றார் தாயுமானவர். தலத்தை அடிப்படையாகக் கொண்டே "பிறக்க வீடு தருவது திருவாரூர்; இறக்க வீடு தருவது காசி; கண்டு வழிபட வீடு தருவது கோயில் (சிதம்பரம்); நினைக்க வீடு தருவது திருவண்ணாமலை" என்று மக்களிடையே ஆழ்ந்த நம்பிக்கை ஏற்பட்டது. இந்து சமயத்தைச் சார்ந்தவர்கள் காசி, இராமேசுவரம், பழனி, சபரிமலை, திருப்பதி, திருநள்ளாறு முதலான பல்வேறு தலங்களுக்கும் புனிதப் பயணத்தை மேற்கொண்டு வருகின்றனர்.

கிறித்தவ சமயத்தைச் சார்ந்தவர்கள் வேளாங்கண்ணி, ஜெருசலேம் போன்ற தலங்களுக்கும், இசுலாம் சமயத்தைச் சார்ந்தவர்கள் நாகூர், மெக்கா போன்ற தலங்களுக்கும் புனிதப் பயணத்தை மேற்கொண்டு வருகின்றனர். இத்தகைய தலப்பயணங்களின் மூலம் இறைமீது மக்கள் கொண்டிருந்த ஆழ்ந்த பத்தி, நம்பிக்கைகளைக் காணமுடிகின்றன; மேலும் மனஅமைதி கிடைப்பதாகவும் நம்பி வருகின்றனர்.

காலந்தோறும் மக்களிடையே சமய ஒருமைப்பாடும், சமயப் பூசல்களும், தலப்பயணங்களும் நிகழ்ந்து வருவதை வரலாற்றுச் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன. இந்தப் பின்னணியில் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய குமரகுருபரர் மேற்கொண்ட தலப்பயணங்களை ஆராய்வது பொருத்தமுடையதாகும்.

## வரலாற்று மூலம்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய 'புலவர் புராணம்', திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் பாடிய 'திருப்பனந்தாள் ஸ்ரீ குமரகுருபர ஸ்வாமிகள் சரித்திரம்', சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயர் பாடிய 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்

5. தாயுமானவர், பாடல்கள்.

புராணம்', ச. சோமசுந்தர தேசிகர் எழுதிய 'தமிழ்ப் புலவர் வரலாறு பதினோழாம் நூற்றாண்டு', மு. அருணாசலம் எழுதிய 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்' போன்ற நூல்களில் குமரகுருபரரின் வரலாறு காணப்படுகிறது.

## தலப்பயணம் மேற்கொள்ளல்

"முன்னோர் நவில் மொழியும், கலைவாணி நடம்புரியும் நாவும், முருகன் மலர்த்தாள்களும்" கொண்டு தாம் செவிவழியாகக் கேட்டறிந்த செய்திகளைத் தொகுத்துப் புலவர் புராணம் பாடியுள்ளதாகத் தண்டபாணி சுவாமிகள் கூறுகின்றார். இப்புராணத்தில் குமரகுருபரர் வரலாறு 42 பாடல்களில் பாடப்பட்டுள்ளது.

குமரகுருபரர் வரலாற்றை மீனாட்சிசுந்தரம் பிள்ளை 338 பாடல்களிலும், சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயர் 1001 பாடல்களிலும் பாடியுள்ளனர்.

சைவ வேளாளர் மரபில் தென்பாண்டி நாட்டில் பொருநையாற்றின் வடகரையிலுள்ள திருவைகுண்டத்தில் கைலாசபுரத்தில் சண்முகசிகாமணிக் கவிராயருக்கும், சிவகாமசுந்தரிக்கும் அருந்தவ மகனாகக் குமரகுருபரர் தோன்றினார். ஐந்து வயது வரை வாய் பேசாமல் ஊமையாயிருந்து திருச்செந்தூர்ப் பெருமான் திருவருளால் பேசத் தொடங்கினார்.

திருவைகுண்டத்தில் தோன்றிய குமரகுருபரர் திருச்செந்தூருக்குச் சென்றதிலிருந்தே அவரது தலப்பயணமானது தொடங்கி விடுகிறது. இவர் பாடியருளிய முதல் பனுவல் 'திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா'வாகும். அன்று முதல் இவர் பல தலங்களுக்கும் தம்முடைய பயணத்தைத் தொடங்கி விட்டார். இறையருள் பெற்ற இவர் பல தலங்களுக்கும் சென்றதோடமையாமல் சில தலங்களில் பாடியருளிய பாக்கள் தனியொரு சிற்றிலக்கியமாக அமைந்திருப் பதைக் காணமுடிகின்றன.

குமரகுருபரர் வரலாறு கூறும் பனுவல்களில் பல்வேறு தலங்களுக்கு அவர் சென்றதைப் புலவர்கள் பாடியுள்ளனர். ஆயின் மீனாட்சிசுந்தரம் பிள்ளை பாடிய பனுவலில் காணப்படும் தலப் பயணங்கள் இக்கட்டுரையில் ஆராயப்படுகின்றன.

திருச்செந்தூர்க் குமரவேள் கருணையினால் குமரனாகி, குமரகுருபரர் எனும் பெயர் தாங்கி முதன் முதலில் கந்தர் கலிவெண்பாவைத் தம் ஐந்தாம் அகவையில் பாடிய பின்னர்த் தம் பெற்றோருடன்

தாம் பிறந்த திருவைகுண்டம் ஊருக்குத் திரும்புகிறார். இவர் பிறந்த ஊர் கயிலாசபுரம் எனவும் அழைக்கப் பெறுகிறது. இங்குள்ள சிவன் கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன்மீது கயிலைக் கலம்பகம் பாடுகின்றார். இதனை,

> "அன்னமென் னடையார்சூழ வயிர்திருக் கயிலைவாழ்ந்து
> கன்னலில் சிலைமி னார்க்குக் கலம்பக மொன்றுபாடி"[6]

என்கின்றார். ஆயின் இந்நூல் கிடைக்கவில்லை என்றே பலரும் குறிப்பிடுகின்றனர்.

சிலகாலம் கழித்து, ஒருநாள் திருச்செந்தூர் முருகன் கோயிலில் வலம் வந்து கொண்டிருந்தபொழுது,

> "குழந்தாய், நீ வடதிசை யாத்திரை செய்து கொண்டு பல தலங்களுக்கும் சென்று வழிபட்டு வருவாயாக, அவ்வாறு வழிபடும் காலத்துக் காசிவரை செல்வாயாக. செல்லும் காலத்து எந்தச் சந்நிதியில் உன் வாக்குத் தடைப்படு கிறதோ அந்தச் சந்நிதியே நீ ஞானம் பெறுவதற்கான இடம் என்று அறிவாயாக!"[7]

என்று முருகன் வானொலியாக உணர்த்தியதாக மு. அருணாசலம் கூறுகின்றார்.

அதன் பிறகே குமரகுருபரர் தலப்பயணத்தை தொடங்குகின்றார்.

**தலங்களும் பனுவல்களும்**

முதன் முதல் திருச்செந்தூரில் பாடிய கந்தர் கலிவெண்பா நூல் 122 கண்ணிகளை உடையது. முருகன் திருவருளைப் பெறுவதற்காக முக்காலத்தும் பாராயணம் செய்யப்படும் நூலாகத் திகழ்கிறது முருகப்பெருமானின் இயல்பு, உயிர்களது இயல்பும் அவற்றிற்கு இறைவன் செய்யும் பெருங்கருணைத்திறமும், கந்தபுராண வரலாறு போன்றவற்றை இப்பனுவல் கூறுகிறது.

மதுரையில் மீனாட்சியம்மன் கோயிலில் திருமலை நாயக்கர் முன்னிலையில் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் எனும் நூல்

---

6. கயிலைக் கலம்பகம் 58.
7. மு. அருணாசலம், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள், ப. 10.

அரங்கேற்றம் செய்யப்பட்டது. பல்வேறு தலங்களுக்கும் சென்ற குமரகுருபரர் மதுரைக்கு வந்ததை,

"தெய்வவெண் ணீறு கண்டி திகழ்தரத் தலங்க டோறு
மையறச் சென்று சென்று வணங்கியித் தலத்து வந்தார்" (85)

என்பார் மீனாட்சிசுந்தரம் பிள்ளை. அங்கயற்கண்ணியை வணங்கிப் பிள்ளைத்தமிழ் நூலை அரங்கேற்றம் செய்ததை,

"வந்தவர் கயற்க ணம்மை மலரடி வணங்கிப் போற்றிச்
சந்தமிக் கமைந்த பிள்ளைத் தமிழ்ப்பிர பந்தம் பாடிச்
சுந்தர வல்லி முன்பு தொழுதரங் கேற்றல் செய்வா
னுந்துதம் முள்ளத் தெண்ணி யிருந்தன ருணர்தி யென்றார்" (86)

என்பார். இந்நூல் 100 பாக்கள் கொண்டது.

அதன்பின்னர் 102 வெண்பாக்களைக் கொண்ட நீதிநெறி விளக்கம், 102 பாக்களைக் கொண்ட மதுரைக் கலம்பகம் ஆகிய இரு நூல்களைப் பாடினார்.

திருவாவடுதுறைக்கு வந்த சைவ சிகாமணி அருள் நல்கும் மாசிலாமணி தேசிகரைக் கண்டு அவரைத் தம் குருவாகக் கொண்டார். திங்கள் அணிந்த பிரானின் திருமகனார் அருட்செல்வராகிய குமரகுருபரர் தம் குருநாதர் மேல் 30 பாக்கள் கொண்ட பண்டார மும்மணிக்கோவை பாடினார்.

திருவாரூரில் நான்மணிமாலையைப் பலரும் வியப்புறும்படி அரங்கேற்றினார். புள்ளிருக்குவேளூரில் முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் நூலை அரங்கேற்றினார். சிதம்பரத்தில் 30 பாக்கள் கொண்ட சிதம்பர மும்மணிக்கோவை, 84 பாக்கள் கொண்ட சிதம்பரச் செய்யுட்கோவை ஆகிய நூல்களைப் பாடினார். காசியில் 10 பாக்கள் கொண்ட துண்டி விநாயகர் பதிகம், விச்சுவேசர் மேல் 100 பாக்கள் கொண்ட காசிக் கலம்பகம் ஆகிய நூல்களைப் பாடினார். காசி நகரை ஆட்சி செய்த இசுலாமிய மன்னருக்குத் தம் புலமையைக் காட்டுவான் வேண்டித் தமக்கு அவர்கள் பேசும் மொழியைக் கற்றுத்தர நாமகளை நோக்கி 10 பாக்கள் கொண்ட சகலகலாவல்லிமாலை பாடித் துதித்தார்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை பாடிய இப்பனுவலில் 13 நூல்களே குமரகுருபரர் பாடியனவாகக் காணப்படுகின்றன. மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை ஆகிய நூல்களைக்

குமரகுருபரர் பாடியதாகக் கூறவில்லை.

விநாயகர், முருகன், சிவபெருமான், உமையவள், கலைமகள் ஆகியோர் மீது பதிகம், பிள்ளைத்தமிழ், கலிவெண்பா, கலம்பகம், மாலை, கோவை ஆகிய சிற்றிலக்கிய வகைகளில் பாக்களைப் பாடியுள்ளார். இவரருளிய பாக்களில் முருகனும், சிவனும் ஒருவரே எனும் கொள்கை உடையவராகக் குமரகுருபரர் கருதியிருப்பதைக் காணமுடிகிறது. மேலும் சங்கநூற் கருத்துகள், சைவ சித்தாந்தக் கருத்துகள், பழமொழிகள், அறவுரைகள், தமிழின் பெருமை முதலானவற்றையும் காணமுடிகின்றன.

## தலச்சிறப்பு

திருச்செந்தூர் தொடங்கிக் காசி மாநகரம் வரை ஏறத்தாழ 95 தலங்களுக்குத் தலப்பயணம் மேற்கொண்டதாக மீனாட்சிசுந்தரம் பிள்ளை தம் நூலில் குறிப்பிடுகின்றார். இவற்றுள் ஒருசில தலங்களை அவற்றின் சிறப்புகளோடு பாடியுள்ளார். சில தலங்களில் குமரகுருபரர் சமய வாதம் செய்ததாகவும், சிலவற்றில் புலவர்களை வாதில் வென்றதாகவும் கூறியுள்ளார். தலப்பயணம் மேற்கொண்ட குமரகுருபரரைச் சில தலங்களில் புலவர் பெருமக்களும், அடியார்களும் போற்றி வரவேற்கின்ற காட்சியையும் கூறியுள்ளார். பல தலங்களின் பெயர்களை மட்டும் கூறி 'முதலான தலங்களுக்குப்' பயணம் மேற்கொண்டதாகக் கூறிச் செல்வதையும் காணமுடிகிறது.

திருச்சிராப்பள்ளியின் பெருண்மையைக் கூறவந்த ஆசிரியர்,

"விண்ணளவு நெடுஞ்சிகரமேவு சிராமலைப் பெருமான்
கண்ணளவு திருவடிகள் கண்டுதொழச் செய்வித்து" (101)

என்கின்றார். இக்கோயிலில் எழுந்தருளியுள்ளவர் தாயுமானவர் மலையின்மேல் இக்கோயில் உள்ளது. இறைவனிடத்து அன்புமிகுந்த ஒரு பெண் கருவுற்றிருந்து குழந்தைப்பேற்றின்போது தன் தாயின் வருகையை எதிர்பார்த்திருந்தார். காவிரி வெள்ளம் பெருகியிருந்ததால் தாய் வந்து இவருக்கு உதவமுடியவில்லை. இறைவனே மனமிரங்கித் தாயாகி வந்து அப்பெண்ணுக்கு உதவி செய்தார். அதனால் இறைவன் தாயுமானவர் என அழைக்கப்பெறலாயினார். இதனைத் 'தாயான பண்ணவர்வாழ் திரிசிராப்பள்ளி நகர்' (99) எனக் கூறுகின்றார். ஆசிரியர்

1 இமையார் வணங்கு பைஞ்ஞீலி யென்னுந் தலம் (107)

2 வண்ண மதில்சூழ் மழபாடி (136)

3) வானோர் புகழு நெய்த்தானம் (136)

4) ஓங்கு மதில் ஆமாத்தூர் (224)

5) அரிய மாதவர் தொழுதெழு வீழி (172)

6) பிரியமிகு கோவலூர் (224)

*என்றிவ்வாறு தலங்களின் பெருமையை ஆசிரியர் கூறுகின்றார். இமையவர் வணங்கிப் போற்றுவதையும், அரிய தவங்களைச் செய்கின்றவர்கள் வணங்குவதையும், மதில்களால் தலங்கள் சூழப் பெற்றிருப்பதையும் இவற்றில் காணமுடிகின்றன.*

*திருநெடுங்களம் எனும் தலத்தைக் 'கவலை களையு நெடுங்களம்' (107) என்கின்றார். திருஞானசம்பந்தர் பாடியருளிய பதிகங்களுள் 'மறையுடையாய்' எனத் தொடங்கும் இத்தலப்பதிகம், படிப்பவருடைய இடரினைக் களையும் சிறப்புடையது என்பதையே ஆசிரியர் இவ்வாறு கூறுகின்றார்.*

## இறைவன் - இறைவி பெருமைகள்

*தலத்தில் உறையும் இறைவன், இறைவியர்தம் பெருமை களையும் கூறுவதைக் காணமுடிகின்றன. தாமிரபரணியாற்றின் வடகரையில் அமைந்துள்ள தலம் திருநெல்வேலியாகும். இத்தலத்து இறைவன் மூங்கிலினின்றும் எழுந்தமையால் வேய்முத்தநாதர் என அழைக்கப் பெறுகின்றனன். இதனை*

**"வேயீன் றருளிய முத்த மென்ன,**
**வோங்குபுண்ணியனார் மேய நெல்வேலி யுவந்து போற்றி" (59)**

*என்கின்றார்.*

**'கோணிய பிறை முடித்தார் குளிர் கொடுங்குன்றம்' (62)**

**'தீவினை யறுப்பா ராப்பனூர்' (63)**

**'கரிய கண்டர்வாழ் தருதிரு வம்பர்மா காளம்' (172)**

*என்று இறைவன் பெருமையைப் போற்றுகின்றார்.*

*'செய்யவேண் மகிழ்ந்து மேய திருப்பரங்குன்றம்' (63) என்று திருப்பரங்குன்றத்தில் உறையும் முருகன் புகழைப் பாடுகின்றார்.*

**"பாகமொரு பெண் குடியிருக்கும் பரமானந்தர் வீற்றிருக்குங்**
**காகமெரியக் கனல்வீசும் நெருப்பும் கடம்பந்துறைப் பதி" (106)**

என்பது கடம்பந்துறையில் உறையும் இறைவன், இறைவி பெருமைகளாகும்.

நடராசப் பெருமான் ஆலங்காட்டில் காளியுடன் ஊர்த்துவ தாண்டவம் ஆடுகின்றார். இதனை நினைவுகூர்ந்த ஆசிரியர் 'அம்மை திருநடங்காணு மாலங்காடு' (230) என்கின்றார்.

கயிலை மலையிலிருந்து காஞ்சிபுரத்திற்கு வந்த உமையவள் இறைவனை அடையும் பொருட்டுக் கம்பையாற்றின் கரையில் சிவவழிபாடு செய்கின்றார். அப்பொழுது ஆற்றில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டது. வெள்ளத்திலிருந்து இறைவனைக் காப்பாற்றும் பொருட்டு இறைவி இறைவனைத் தழுவிக் கொண்டார். இதனால் இறைவன், இறைவியின் முலைச்சுவடும் வளைத்தழும்பும் நிலை பெறுமாறு குழைந்து கொடுத்தார் என்பது இத்தல வரலாறாகும். இதனை ஆசிரியர்

"வல்லாரு முலைச்சுவடும் வளைச்சுவடுங் கொண்டுமகிழ்
வில்லாரு மெய்ப்பொருளை வீங்குகா தலிற்பணிந்து" (233)

என்று போற்றியுரைக்கின்றார்.

## இயற்கை வளம்

சில தலங்களின் பெருமைகளைக் கூறுவதனோடு அமையாமல் அத்தலங்களின் இயற்கை வளத்தையும் சேர்த்துக் கூறுவதையும் காணமுடிகிறது.

"அன்ன மென்னடையார் சூழ வவிர் திருக்கயிலை" (58)

"துன்னிய சார ரோருந் துதைந்துவாழ் குற்றாலம்" (60)

"அருண்மலி சோலை" (67)

"முகிறோய் தருமீங்கோய்மலை" (106)

"வளங்கண் மிகப்பெருகு மானைக்கா" (107)

"மலையினின் றிழியருவியின் மும்மதம் வடிக்குங்
கொலையி னின்றுநீங் காப்பெருங் கொடுங்களி றுரித்தார்
நிலையி னின்றவர் செறிவுறு மூர்" (7)

"வாங்கு நீர்த்திரை வாவியில் வாளைமீன் பாய
வோங்கு சீர்கொள்புன் னிருக்குவே ளூரைவந் துற்றார்" (190)

"பொருவிலாவள மலிதிருப் பாதிரிப்புலியூர்" (219)

எனும் பாடல் வரிகளில் அந்தந்தத் தலங்களின் இயற்கை வளத்தைக் காண முடிகின்றது. குமரகுருபரர் பல்வேறு தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டதைப் பட்டியலிட்டுக் கூறாமல் தலத்துடன் தொடர்புடைய இயற்கை வளம், வரலாறு போன்ற செய்திகளையும் சேர்த்துக் கூறியுள்ள பாங்கு சிறப்பாக அமைந்திருக்கிறது.

## அருளாளர் பெருமைகள்

அப்பர் பெருமான் உழவாரப்பணி செய்து திருப்புகலூரில் இறைவன் திருவடி நீழலடைந்தார். இதனை,

"திங்கள் சூடிதன் றிருப்பணிப் பெருமையைத் தெரிப்பா
னெங்க ணாவினுக் கரசுழு வாரங்கை யேந்தி
யங்க ணார்பணி புரிபுக லூர்" (189)

என்று பாடுகின்றார்.

சிவபிரான் சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட தலம் திருவெண்ணெய் நல்லூராகும். இத்தலத்திற்குக் குமரகுருபரர் வந்ததை,

"நாவலூர் நம்பிதனைத் தடுத்தாண்ட நம்பெருமான்
மேவுமா லயம்புகுந்து" (221)

என்கின்றார்.

## புலவர்களை வாதில் வெல்லுதலும் வரவேற்பும்

தலப்பயணம் மேற்கொண்ட குமரகுருபரர் பல்வேறு தலங்களுக்கும் செல்கின்றார். சில தலங்களில் புலவர்களை வாதில் வென்றதையும், சிலருடன் சமயவாதம் புரிந்ததையும் மீனாட்சிசுந்தரம் பிள்ளை கூறியுள்ளார்.

மதுரைக்கு வந்த குமரகுருபரர் பல புலவர்களை வாதில் வென்றார். சிலரை ஐந்திலக்கணத்தால், சிலரை இலக்கியத்தால், சிலரை வலிமையான சொற்பொழிவினால், சிலரைப் பாடலால், சிலரை நேர் உரைக்கும் சொல்லால், சிலரை மெய்ஞ்ஞான நூலால், சிலரை மற்றுள்ள நூலால் சிறப்புற வென்றார். திருச்சி, திருவாரூர், சிதம்பரம், காசி போன்ற தலங்களில் பிற சமயத் தலைவர்களுடன் சைவ சமயக் கொள்கைகளை விளக்கித் தம் சமயமே சிறந்தது என்று நிலை நாட்டுகின்றார். திருச்சிராப்பள்ளியில் பிள்ளைப்பெருமாள்

ஐயங்காரையும், திருத்துறையூரில் சகலாகம பண்டிதரையும் சந்தித்ததாகக் கூறியுள்ளார்.

குமரகுருபரரின் புலமையைக் கண்டு வியந்த மன்னரும், புலவர்களும், சமய அடியார்களும் பல்வேறு தலங்களுக்கு அவர் வந்தபொழுது மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்றனர்; அவர் காலடியில் வீழ்ந்து வணங்கினர்; போற்றினர்; பொன்னாலும் மணிகளாலும் முழுக்காட்டிட்டனர்; பல்வேறு பொருள்களை வாரி வழங்கினர்; நிலங்களைக் கொடையாக வழங்கினர்

**முடிவுரை**

திருச்செந்திலாண்டவன் கருணையினால் ஐந்து வயதில் பாடத் தொடங்கித் தலப்பயணம் மேற்கொண்ட குமரகுருபரர் காசியில் மடத்தை நிறுவிப் பல அரிய சமயப் பணிகளை ஆற்றினார். மூன்றுமுறை தருமபுரத்திற்கு வந்ததாக அவர் வரலாறு காட்டுகிறது. கி.பி. 1688இல் காசியிலேயே முத்திப்பேறு அடைந்தார். இவரது தலப்பயணத்தில் பல்வேறு சிற்றிலக்கியப் பனுவல்களை இவ்வுலகத்திற்குத் தந்துள்ளார்.



# 12

# அப்பர் தேவாரத்தில் தூது*

தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்களுள் 'தூது' என்பதும் ஒன்று. இத்தூது பெரும்பாலும் அகத்துறைப் பாக்களிலேயே இடம்பெறும். தலைவன் தலைவி ஆகிய இருவருக்குமிடையே அன்னம், மயில், கிளி, மேகம், குயில், நெஞ்சு, தென்றல், வண்டு முதலானவற்றைத் தூது செல்லுமாறு கூறுவது இதன் இலக்கணம்.

"எகினம் மயில் கிள்ளை எழிலியொடு பூவை
சகி குயில் நெஞ்சம் தென்றல் வண்டு – தொகைபத்தை
வேறுவேறாப் பிரித்து வித்தரித்து மாலைகொண்டு அன்பு
ஊறிவா என்றல் தூது"[1]

என்று பிரபந்தத்திரட்டு தூதின் இலக்கணமாகக் கூறும்.

"கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே"[2]

என்ற தொல்காப்பியத்தின்படி அஃறிணை உயிர்களையும் பொருள்களையும் தூது விடுதல் பொருந்தும். ஆயின் அப்பர் அருளிய தேவாரத்தில் அமைந்துள்ள தூதினைக் காண்பது இக்கட்டுரையின் நோக்கம்.

## அப்பரும் தூதும்

அப்பர் அருளிய பதிகங்களில் ஒரு பதிகத்திலும், மற்றொரு பதிகத்தில் ஒரு பாடலிலும் தூது இடம்பெற்றுள்ளது. இவற்றுள் முன்னையது திருப்பழனத் திருப்பதிகம். பின்னையது திருமருகற் பதிகம். இவைதவிரத் தூதுவிடக் கருதிய தலைவி தோழிக்குக்

---

* திருக்கோயில் மாத இதழ் இந்து சமய அறநிலையத்துறை, சென்னை, சனவரி 1979, பக். 29–30.

1. பிரபந்தத்திரட்டு
2. தொல்காப்பியம் பொருளதிகாரம்

கூறியதாக ஒரு பதிகம் உள்ளது. திருப்புறம்பயம் என்னும் திருத்தாண்டகமே அத்திருப்பதிகம்.

திருப்பழனப் பதிகத்தின் பண் பழந்தக்கராகம். திருமருகற் பதிகம் திருக்குறுந்தொகையில் அமைந்துள்ளது.

திருப்பழனத்துச் சோலையில் குயில், நெய்தல், குருகு, தென்றல், நாரை, பூவை, மான் முதலியவற்றை அன்பிற் பழுத்த தலைவி பழனத்தில் இருக்கும் தன் தலைவனிடம் (இறைவனிடம்) தூது விடுக்கின்றாள்.

## குயில்விடு தூது

தூது செல்கின்றவர்க்கு இன்றியமையாத ஒன்று சொல் இனிமையாகும். அஃதாவது இனிமையாகப் பேசித் தாம் முடிக்கவந்த செயலை முடிப்பதேயாகும். சொல்லிய வரிசையில் தவறாது கூவுதல் குயிலுக்கு இயல்பு. எனவே குயில் மொழியில் உளங்கொண்ட தலைவி அக்குயிலைத் தன் தலைவனிடம் தூது விடுக்கின்றாள்.

"குயிலே! நான் படும் துயரத்தை என் தலைவனிடம் சென்று கூற மாட்டாயா? வண்டுகள் மிழற்றும் பழனத்தில் இருக்கின்றான் என் தலைவன். அவன் மார்பில் எப்பொழுதும் மாலை தவழ்ந்து கொண்டிருக்கும். தலையில் பிறையைச் சூடி இருப்பான். அவனிடம் சென்று என் நிலையைக் கூறமாட்டாயா?" என்று தலைவி ஏங்குகிறாள்.

"சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பண்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்"[1]

என்பதே அப்பாடல் வரிகள். 'சொல்லீரே' என்பதில் 'சொல்லுங்கள்' என்ற வேண்டுகோளும், 'சொல்லமாட்டீர்களா' என்ற ஏக்க உணர்வும் இருப்பதை அந்தச் சொல்லைப் பன்முறை சொல்லிப் பார்த்தால் அறியலாம்.

## நெய்தல்விடு தூது

பழனத்துச் சோலையில் நெய்தல், கண்டகம், முண்டகம், கைதை (தாழை) முதலானவை பூத்துக் குலுங்குகின்றன. ஆங்குள்ள பொய்கையில் மலர்ந்துள்ள பூக்களில் தேன் உண்ணுவதற்காக

1. அப்பர் தேவாரம் 4.12.1.

வண்டுகள் பல வந்துள்ளன. இதே ஊரில்தான் என் தலைவனும் இருக்கின்றான். அவன் ஒரு கலைப்பித்தன். பண்டரங்கம் என்னும் கூத்துக்குத் தக்க கோலத்தை உடையவன். அவனைக் காணாமல் என் தளிர்வண்ணம் நிறம் மாறுகின்றதே! அவன் என் நிலையைக் கண்டால் என்னைக் காண ஓடி வந்து விடுவானே! கண்டகங்காள்! முண்டகங்காள்! கைதைகாள்! நெய்தல்காள்! என் நிலையை அவனிடம் எடுத்துக் கூறமாட்டீர்களா?

"கண்டகங்காள் முண்டகங்காள் கைதைகா ணெய்தல்காள்
பண்டரங்க வேடத்தான் பாட்டோவாப் பழனத்தான்
வண்டுலாந் தடமூழ்கி மற்றவனென் றளிர்வண்ணம்
கொண்டநா ளானறிவான் குறிக்கொள்ளா தொழிவானோ"[4]

இவ்வாறு கேளாதவற்றைக் கேட்பன போலக் கூறுவது பண்டைமரபு பற்றியாம்.

## குருகும் வண்டும்

மதம் பொழியும் முகம்; பனைபோலும் திரண்டு உருண்ட கைகள்; இதனையுடைய யானையின் தோலை உரித்து ஆடையாகப் போர்த்தியுள்ளான் என் தலைவன். அவனைச் சுற்றிலும் எப்பொழுதும் தொண்டர்கள் இருப்பார்கள். அவர்கள் அவனுடைய புகழ்மிக்க வீரச்செயல்களைப் போற்றிப் பாடிக் கொண்டிருப்பார்கள். அவன் இருக்கும் ஊர் எது தெரியுமா? திருப்பழனமாகும். தோட்டத்தில் வளர்ந்துள்ள காஞ்சி மரத்தில் இருக்கும் இளங்குருகே! தலைவன்தான் மறந்து விட்டான். நீயும் மறந்துவிட்டாயோ? தலைவன்பால் கொண்ட அன்பால் (காதலால்) என் உள்ளமும் உடலும் சோர்ந்துவிட்டதே. ஏற்கெனவே வண்டு மொய்க்கும் குவளை மலர் போன்ற கண்ணுடையாளைத் தூது சொல்ல அனுப்பினேன். அவனழகில் அவள் மயங்கி விட்டாளோ? (4.12.3).

## தென்றல்விடு தூது

மதியாதார் வேள்வியினை அழித்து மதியையும் கங்கையையும் தன் தலையில் சூடி இருக்கின்றான் என் தலைவன். அவனுக்கு அதற்கெல்லாம் நேரம் இருக்கின்றதே தவிர என்னைக் காண மட்டும் நேரம் இல்லைபோலும்! எப்பொழுதும் புதியதாகவும் இனிமையாகவும் நறுமணம் கமழுமாறு வீசும் பூந்தென்றலே!

4. அப்பர் தேவாரம், 4.12.2.

அவனிடம் சென்று என் நிலையைக் கூறி, வரச்சொல்லமாட்டாயா? (4.12.4).

## நாரைவிடு தூது

பொங்குகின்ற ஓசையை உடைய பெருமையினைப் பெற்றது நீலநிறக்கடல். அக்கடலை நம்பி வாழும் உயிரினங்கள் பலப்பல. உயிரினங்கள் மட்டுமா? மனித இனமும்தான் அதனை நம்பி வாழ்கின்றனவே! அக்கடலில் சென்று இரையைத் தேடும் செம்மையான கால்களை உடைய வெண்ணிற நாரையே! என்னால் இனி ஒன்றும் செய்யமுடியாது என்று நான் அறியமாட்டாதவ ளானேன். அழகிய சோலைகள் சூழ்ந்த திருப்பழனத்திலிருக்கும் என் தலைவன் என்னுடைய அழகிய திரண்ட வளைகளைக் கவர்ந்து விட்டான். அவன் மார்பில் குடியிருக்கும் மணம் வீசும் கொன்றை மாலையையாவது அவனிடமிருந்து வாங்கிவர மாட்டாயா?

"பொங்கோத மால்கடலிற் புறம்புறம்போ யிரைதேடும்
செங்கால்வெண் மடநாராய் செயற்படுவ தறியேனான்
அங்கோல வளைகவர்ந்தா னணிபொழில்சூழ் பழனத்தான்
தங்கோல நறுங்கொன்றைத் தாரருளா தொழிவானோ"[6]

## பூவைவிடு தூது

காவிரியாகிய பூம்பாவை வளங்கொழிக்கும் பதிகள் பலவற்றுள் ஒன்று திருப்பழனம். அப்பழனத்தில் முத்துகளை வாரி இறைக்கின்றது பொன்னி. இத்தகைய வளம் மிகுந்த ஊரில் வாழும் பூவையே! என் நிலையைத் தலைவனிடம் சென்று கூறமாட்டாயா? என் தலைவன் உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்து அறிந்து, அவர் குறைகளைத் தீர்த்து வைப்பவனாயிற்றே! அவர்களுக்கு ஏற்பட்ட துயரைக் களைந்து இன்பம் விளைப்பான் என்று உலகோரனைவரும் சொல்கின்றனர். ஆயின் எனக்கு ஏற்பட்ட துயரத்தைக் களைவதற்கு மாறாக என்னை வஞ்சித்து என் கை வளையல்களையல்லவோ அவன் கவர்ந்து விட்டான். பஞ்சின் மெல்லடியும் சிறகும் உடைய அன்னங்கள் பரந்து ஒலி செய்யும் பழனத்தில் வாளா இருக்கின்றானே என்று வருந்துகின்றாள் (4.12.8).

## கிளிவிடு தூது

பசுமையான கிளியைத் தலைவி வளர்க்கிறாள். அக்கிளிக்குப்

6. 4.12.6.

பல சொற்களைக் கூறிப் பழக்கி விடுகின்றாள். அமுதினை அளித்து, அக்கிளியைப் பேணிப் பாதுகாக்கின்றாள். பல நாட்களாக அதற்குப் பயிற்சி கொடுக்கிறாள். பார்க்கின்றவர்கள் வியப்படைகின்றனர். எதற்காக இப்பெண் இவ்வாறு செய்கின்றாள் என்கின்றனர். பாலும் சோறும் ஊட்டி வளர்த்த கிளியிடம் தனக்காகத் தன் தலைவனிடம் தூது சொல்லத் தொடங்குகிறாள். இப்போதல்லவா அவள் செயல் புரிகிறது.

"ஒது பைங்கிளிக் கொண்பா லமுதூட்டிப்
பாது காத்துப் பலபல கற்பித்து
மாது தான்மரு கற்பெரு மானுக்குத்
தூது சொல்ல விடத்தான் தொடங்குமே"[6]

## கூடலிழைத்தல்

பலவாறு வருந்திய தலைவி இறுதியில் கூடற்சுழி[7] போட்டுப் பார்க்கின்றாள். அதில் வழு நேரவே வாரான் என அறிந்து, 'வாரானே ஆயிடினும் கோடிஇயை சேவடியாய்' என்று கூடற்றெய்வத்தை வேண்டுகின்றாள்.

"வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே"[8]

## திருத்தாண்டகம்

திருப்புறம்பயம் என்னும் திருத்தாண்டகத்தில் பத்துப் பாக்கள் நயமுற அமைந்துள்ளன. இப்பத்துப் பாக்களும், தலைவனுக்குத் தூதுவிடக் கருதிய தலைவி தோழிக்குக் கூறியதாக அமைந்துள்ளது. அஃதாவது, இறைவன் மண்டை ஓட்டைக் கையில் எடுத்துக்கொண்டு பிச்சைக்காக வேண்டித் தெருத்தெருவாக வருகின்றான். அவனது வருகையின் அழகைக் கண்டும் அவன் பேசிய பேச்சைக் கேட்டும் அதில் தன் நிலையை மறந்து நிறையழிந்து

6. அப்பர் தேவாரம் 5.88.4.
7. கூடலாவது வட்டமாகக் கோட்டைக் கீறி அதுக்குள்ளே சுழி சுழியாகச் சுற்றுஞ் சுழித்து இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால் இரட்டைப்பட்டால் கூடுகை, ஒற்றைப்பட்டால் கூடாமை என்று சங்கேதம் – நாச்சியார் திருமொழி, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்து அரும்பதம்.
8. அப்பர் தேவாரம் 4.12.10.

விடுகிறாள் ஒருத்தி. நாள்தோறும் அவன் வருகையால் ஆற்றியிருப்பாள் பின்னர் அவன் வாராதொழியவே அதனை ஆற்றாத அவள் அவனுக்குத் தூதுவிடக் கருதுகின்றாள். அதனைத் தன் ஆருயிர்த் தோழியிடம் கூறுகின்றாள். நாள்தோறும் அவனைக் கண்டு உரையாடுகிறாள் அப்பொழுது அவன் தன் ஊரை வேறு வேறாகக் கூறுகிறான் அதனைக்கேட்ட அவள் தன் தலைவன் உலகம் முழுதுடையவனாதலை உணர்கிறாள். இறுதியில் தன் ஊர் புறம்பயமாகக் கூறிச் சென்று விடுகிறான். இதுவே இப்பதிகத்தில் இடம்பெறும் செய்தியாகும்

## முடிவுரை

நான்கு, ஐந்து, ஆறு ஆகிய மூன்று திருமுறைகளிலும் தூது பற்றிய செய்திகள் பேசப்படுகின்றன தூது இடம்பெறும் பதிகம் அகப்பொருட் பதிகமாகவே அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது



# 13

# தஞ்சாவூர் மராத்திய மன்னர்களின் கோயிற்பணிகள்*

தஞ்சாவூரைத் தலைநகரமாகக் கொண்டும் தஞ்சாவூரிலேயே தங்கியிருந்தும் மராத்திய மன்னர்கள் கி.பி. 1676 முதல் கி.பி. 1855 வரை ஆட்சியிலிருந்துள்ளனர். வடக்கில் மொகலாயர்களின் பிடியிலிருந்து இந்து சமயத்தைக் காப்பதற்காக ஏற்பட்டதே மராத்தியர் ஆட்சி யாகும். தஞ்சாவூரிலிருந்த இம் மராத்தியர்கள் சமயப்பற்று மிக்குடையவர்களாக இருந்தனர். இவர்களது குலதெய்வம் சந்திர மௌலீசுவரர் ஆவர். இவர்கள் சைவ சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் பிற சமயங்களையும் ஆதரித்துப் போற்றியுள்ளனர். இவர்களின் கோயிற்பணிகளை இக்கட்டுரை ஆராய்கிறது.

## கோயிற்பணிகள்

தஞ்சாவூரில் சோழர் காலம் முதற்கொண்டே பண்பாட்டின் மையப் பகுதியாகக் கோயில்கள் விளங்கி வருகின்றன. இதனால் கோயில்கள் பாதுகாக்கப்பட்டுப் பராமரிக்க வேண்டியதன் தேவையை நன்கு உணர்ந்த மராத்திய மன்னர்கள் சைவம், வைணவம், இசுலாமியம், கிறித்தவம் ஆகிய பல்சமயக் கோயில்களுக்குப் பல பணிகளைச் செய்துள்ளனர். இவற்றை அக்காலத்திய இலக்கியம், ஆவணங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள் போன்றவற்றின் மூலம் அறியமுடிகின்றது.

தஞ்சாவூர் மராத்தியர்கள் ஏற்கெனவே இருந்த பல கோயில்களைச் செப்பனிட்டுப் புதுப்பித்துப் பல திருக்குடமுழுக்கு களைச் செய்துள்ளனர். சில கோயில்களைப் புதிதாக எழுப்பியும் உள்ளனர். இம்மன்னர்களின் நேர் பார்வையில் 64 கோயில்கள் இருந்தனவாகத் தெரியவருகின்றது. இவர்கள் ஆட்சிக்கு வருவதற்கு முன்னர் நாயக்கர்கள் இப்பகுதியை ஆண்டிருந்த காரணத்தினால் பல வைணவக் கோயில்களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டிருந்தது.

தஞ்சாவூருக்கு அருகிலுள்ள புன்னைநல்லூர் மாரியம்மன் கோயிலை முதலாம் ஏகோஜியும் (காலம் 1676-1684), பங்காரு

---

* தமிழ் மாருதம் திங்கள் இதழ் மதுரை, ஆடி 1996, பக். 23–29.

காமாட்சியம்மன் கோயிலை இரண்டாம் துளஜாவும் (1786), மணிகர்ணிகேசுவரர் கோயிலை இரண்டாம் சரபோஜியும் (1827) கட்டியுள்ளனர். மராத்திய மன்னர்கள் ஆறு சைவ சமயக் கோயில் களையும், ஆறு வைணவ சமயக் கோயில்களையும் கட்டியுள்ளனர் இராசராசசோழன் கட்டிய தஞ்சாவூர்ப் பிரகதீசுவரர் கோயிலுக்கு மராத்தியர்கள் ஆற்றிய பணிகள் சிறப்புடையவையாகும். இக் கோயிலில் 108 சிவலிங்கங்கள், சுப்பிரமணியர் கோயில், அம்மன் சன்னதியிலுள்ள அர்த்தமண்டபம், மகா மண்டபம், வைரவமண்டபம், நந்திமண்டபம், சபாபதி கோயில் அர்த்தமண்டபம் போன்றவற்றை அமைத்த பணி இவர்களையே சாரும். மன்னர்கள் மட்டுமன்றி, அரசியர்களும், அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களும் கோயிற் பணிகளைச் செய்துள்ளனர் இவர்களுள் காமாட்சியம்பாபாய் சாகேப், இராஜகுமாராபாய், அகல்யாபாய் சாகேப் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்

மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயில், திருமலை திருப்பதி கோயில் ஆகிய கோயில்களுக்கு நகைகளும், பொருள்களும், அறக்கொடைகளும் செய்துள்ளனர்.

## இசுலாமிய சமயக் கோயில்கள்

தஞ்சாவூரில் நாயக்கர் ஆட்சி செய்த காலத்திலேயே இசுலாமியர் பலர் குடியேறினர். வடக்கிலிருந்து மராத்திய மன்னர் முதலாம் ஏகோஜி கி.பி. 1676இல் தஞ்சாவூருக்குப் படையுடன் வந்தபொழுது பல இசுலாமியப் படைவீரர்களும் உடன் வந்தனர் ஆர்க்காட்டு நவாபின் முற்றுகைக்குத் தஞ்சாவூர் பலமுறை உள்ளானபோதும் இசுலாமியர் இங்குக் குடியேறினர். காவல், வணிகம், யுனானி மருத்துவம் போன்ற துறைகளிலும் அரசின் உயர் பதவிகளிலும் இவர்கள் இருந்தனர். அரண்மனை ஆவணங்களில் இசுலாமிய ஆண்டுமுறை பின்பற்றப்பட்டுள்ளதையும் காண முடிகிறது இக்காலத்தில் எழுதப்பெற்ற பல தமிழ் இலக்கிய நூல்களில் இசுலாமியர் பேசிய உருதுமொழிச் சொற்களில் பல கலந்திருக்கின்றன இவர்கள் தங்கள் வழிபாட்டிற்கெனப் பல பள்ளிவாசல்களைக் கட்டுவதற்கு நிலமும் அறக்கொடைகளும் மன்னர்களால் வழங்கப்பட்டுள்ளன. வடயாரங்குடி பாவா சாகேப்பின் தர்க்கா, கடைவீதிப் பேட்டை மசூதி, திருப்பூந்துருத்தி தர்க்கா, சூலமங்கலம் தர்க்கா, நாகூர் தர்க்கா போன்றவற்றுக்கு மன்னர்கள் செய்த அறப்பணிகள் கல்வெட்டுகளிலும், மோடி ஆவணங்களிலும் காணப்படுகின்றன சில தர்க்காக்களும், பள்ளிவாசல்களும் இன்றும் மராத்திய அரச

குடும்பத்தின் பொறுப்பிலேயே இருந்து வருவதும் இவண் குறிக்கத்தகும்.

**கிறித்தவ தேவாலயங்கள்**

இரண்டாம் துளஜா மன்னரிடம் சிறந்த நட்புக்கொண்ட பிரடெரிக் ஸ்வார்ட்ஸ் பாதிரியாரின் ஆதரவில் வளர்ந்து அவரிடமிருந்து கல்வியையும், பல மொழிகளையும் கற்றுத் தேர்ந்தவரே இரண்டாம் சரபோஜியாவார். இரண்டாம் துளஜா மற்றும் இரண்டாம் சரபோஜி மன்னரின் உதவியினால் மகர்நோன்புச் சாவடி தூயபேதுரு ஆலயமும், ஸ்வார்ட்ஸ் தேவாலயமும் எடுப்பிக்கப் பட்டன. மேலும் இம் மன்னர்கள் கிறித்தவர்களின்மீது அன்பு கொண்டதோடு கிறித்தவ சமயம் பரவுவதற்கு வேண்டிய அனைத்து உதவிகளையும் செய்துள்ளனர்.

**கோயில் திருவிழாக்கள்**

தஞ்சாவூர் மராத்திய மன்னர்கள் சமயத்தைப் பரப்பும் பொருட்டுக் கோயில்களைக் கட்டுவித்ததோடு நிற்காமல், பல திருவிழாக்களையும் நடத்தியுள்ளனர். தஞ்சாவூர்ப் பெரிய கோயிலில் சித்திரைத் திங்களிலும், திருப்புள்ளிருக்குவேளூர் வைத்தீசுவரன் கோயிலில் வைகாசித் திங்களிலும், பதினெட்டாம் பெருக்கு விழாவை ஆடித்திங்களிலும், கார்த்திகைத் தீபத்தைக் கார்த்திகைத் திங்களிலும், தைப்பூசத் திருவிழாவைத் தைத்திங்களிலும், சிவன்ராத்திரி விழாவை மாசித்திங்களிலும் பல திருவிழாக்களை நடத்தியுள்ளனர். சில கோயில்களில் பத்துநாட்கள் வரை சிறப்பாக நடத்தப்பட்டுள்ளன. கோயிலில் கொடி ஏற்றி இறைவன் பல வாகனங்களில் பல்வேறு கோலம் பூண்டு திருவீதியுலா வந்தமையைக் கல்வெட்டுகளிலும், மோடி ஆவணங்களிலும், ஓவியங்களிலும், இலக்கியங்களிலும் காணமுடிகின்றன. தஞ்சைப் பெருவுடையார் திருவீதியுலா வந்ததைப் பற்றிப் பலரும் அறிய, இரண்டாம் சரபோஜி மன்னரின் அவைக்களப் புலவரான சிவக்கொழுந்து தேசிகர் ‘தஞ்சைப் பெருவுடையாருலா’ என்றதொரு சிறந்த இலக்கிய நூலை உருவாக்கிப் பாடியுள்ளார். திருவிழாக் காலங்களில் இறைவன் தேரில் எழுந்தருளித் திருவீதி உலா வருவதுமுண்டு. திருவீதி உலாவின்பொழுது இசை, நாட்டிய நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டுள்ளன.

இம்மன்னர்கள் திருவையாறு, திருவாரூர், பட்டீச்சுரம், திருநள்ளாறு, சக்வாரம்பாள்புரம், திருவிடைமருதூர் ஆகிய கோயில்களில் தேர்த் திருவிழா நடைபெறும்பொருட்டுப் பல

அறக்கொடைகளை நல்கியுள்ளனர். மேலும் தஞ்சாவூரில் அமைந்துள்ள பிரதாப வீரஅனுமார் கோயில், கொங்கணேசுவரர் கோயில், திருவலஞ்சுழி வெள்ளைப் பிள்ளையார் கோயில் போன்ற கோயில்களில் நடைபெறும் தேர்த் திருவிழாவிற்குக் கொடைகளும் அளித்துள்ளனர்.

இசுலாமியர் கொண்டாடும் அல்லாப் பண்டிகையின் பொழுது மன்னர்கள் அவர்களுடைய தர்க்காக்களுக்குச் சென்று கொடைகள் அளித்துள்ளனர். நாகூர் தர்க்காவில் நடை பெறும் திருவிழாவின்போது ஆண்டு தோறும் அரண்மனையிலிருந்து ஆடை அனுப்பி வந்தனர். இவ்வழக்கம் இன்றுவரை தொடர்ந்து நடை பெற்று வருகிறது.

**பிற பணிகள்**

மராத்திய மன்னர்கள் வேதம் வல்ல பிராமணர்களுக்கு நிலங்களை அளித்தும், கோயில்களுக்கு இறையிலியாக நிலங்களை வழங்கியும், கோயில் பூசை செய்யும் அந்தணர்கள் குடியிருப்பதற்குரிய வீடுகளை அமைத்துக் கொடுத்தும், கோயிலில் பணிபுரியும் பிற ஊழியர்களுக்குச் சர்வமானியங்கள் அளித்தும் உள்ளனர்.

மேலும், இவர்கள் காலத்தில் திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், திருப்பனந்தாள் காசிமடம், கும்பகோணம் காஞ்சி காமகோடி மடம் ஆகிய மடங்கள் மன்னர்களின் ஆதரவைப் பெற்று, இந்து சமயத்தைச் சிறந்த முறையில் வளர்த்து வந்தன.

தஞ்சாவூர் மராத்திய மன்னர்கள் பல்வேறு சத்திரங்களை இவர்களின் எல்லைப் பரப்பிலும் இராமேசுவரத்திலும் கட்டினர். புனிதப் பயணம் மேற்கொள்கின்றவர்களுக்கு இச்சத்திரங்களில் தங்குவதற்கு இடவசதியும், உணவு, உடை, மருத்துவ வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன. இவை தவிரச் சத்திரங்களில் கல்விக் கூடங்கள் அமைக்கப்பட்டு வேதங்களும், சமயம் தொடர்பான பிற பாடங்களும் கற்பிக்கப்பட்டன. மேலும் இங்கு ஏழைகள், அனாதைகள், உடல் ஊனமுற்றோர் போன்றவர்களுக்குத் தானங்கள் அளிக்கப்பட்டன. சத்திரத்தில் தங்கும் பயணிகள் வழிபடுவதற்காகச் சத்திரத்திற்குள்ளேயே கோயில்களும் எழுப்பப்பட்டுள்ளன.

கோயில்களில் நடைபெற்ற திருவிழாக்களின்போது இசை, நாடகம், நாட்டியம் போன்ற கலை நிகழ்ச்சிகளும் நடத்தப்பட்டுள்ளன. பல புதிய கலை நிகழ்ச்சிகள் மன்னர் முன்னிலையிலும்,

மக்கள் முன்னிலையிலும் அரங்கேற்றம் செய்யப்பட்டதுமுண்டு. இறைபுகழைப் பரப்பும் நோக்கமே இவற்றின் கருப்பொருளாக இருந்தது. பாமர மக்களுக்கு எளிதில் புரியும் வண்ணம் மகாராட்டிர மாநிலத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்த இலாவணி எனும் கிராமிய இசை வடிவம் இவர்கள் காலத்திலேயே தமிழகத்தில் அறிமுகம் செய்யப் பட்டது. காமன் பண்டிகையின்பொழுது இலாவணி நடத்தப்படுவ துண்டு. புராணக் கதைகள், நிகழ்ச்சிகள் போன்றவற்றைக் கேள்வி-பதில் வடிவத்திலும், சொற்போர் வடிவத்திலும் இசைப் பாடல்களாக அமைத்துப் பாடப்பட்டன. மேலும் இறைவன் புகழைக் கதை இசை உரை எனும் முறையில் கூறும் மரபும் இவர்கள் காலத்திலேயே சிறப்படைந்தது. இசை நாடக நாட்டியக் கலைகளின் மூலம் மன்னர்கள் சமயத்தை மக்களிடையே பல்வேறு வகைகளில் பரப்பி யுள்ளனர்.

கோயில்களில் இறை புகழை விளக்கும்வண்ணம் பல்வேறு ஓவியங்கள் சுவரோவியமாக வரையப்பட்டன. கோயிலின் பெருமை, சிறப்பு, திருவிழாக்கள், அடியார் பெருமைகள் முதலானவற்றைக் கருப்பொருளாகக் கொண்டு பாமர மக்களும் எளிதில் படித்துப் புரிந்து கொள்வதற்கேற்பத் தமிழ் விளக்கங்களுடன் இவை அமைந்துள்ளன.

இம்மன்னர்கள் காலத்தில் தலபுராணங்களும், கீர்த்தனை நாடகங்களும், உலா முதலான சிற்றிலக்கியங்களும் சைவ, வைணவ, கிறித்தவ சமயங்களில் பலரால் எழுதப்பட்டுள்ளன. இறைவனின் பெருமைகள், சமயக் கொள்கைகள் இப்பனுவல்களில் காணப்படு கின்றன.

கோயில்களுக்குக் கல் இழைத்த தலைமுடி (கிரீடம்), காதணி, நாகாபரணம் முதலான பலவகை அணிகலன்கள் இம்மன்னர்களால் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன. மேலும் நன்செய், புன்செய் நிலங்கள் கொடுக்கப்பெற்று இவற்றின் மூலம் கிடைக்கும் வருமானத்தை அந்தந்தக் கோயில்களுக்கே செலவிடுமாறும் செய்துள்ளனர். சில கோயில்களில் திருமுழுக்கிற்காகவும், வழிபாடு, நெய்வேத்தியத்திற்காகவும், அந்தணர்களுக்கு உணவளிப்பதற்காகவும் நிலங்கள் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன. ஆரத்தித்தட்டு, வெள்ளித்தகடு போர்த்திய காளை வாகனம், பித்தளைத் தகடு போன்ற பொருள்களும் சில கோயில்களுக்கு அளிக்கப்பட்டுள்ளன. கோயில்களுக்கு விளக்கு எரிப்பதற்காக இலுப்பைத் தோப்பைக் கொடுத்துள்ளனர். சில கோயில்களில் தாழம்பூ அர்ச்சனை, துளசி

அர்ச்சனை போன்ற சிறப்பு வழிபாட்டிற்காகவும் கொடை கொடுக்கப் பட்டுள்ளது.

## முடிவுரை

தஞ்சாவூர் மராத்திய மன்னர்கள் ஏற்கெனவே இருந்த கோயில்களுக்குக் குடமுழுக்கு போன்றவற்றை நடத்தியும், புதிய கோயில்களைக் கட்டியும், பல்வேறு திருவிழாக்களை நடத்துவதற்குக் கொடைகள் நல்கியும், சத்திரங்களைக் கட்டி அவற்றின் மூலம் சமயக் கல்வியை அளித்தும் இவ்வாறு பல்வேறு திருப்பணிகளைச் செய்துள்ளனர். இவர்கள், சைவ சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் வைணவம், இசுலாம், கிறித்தவம் போன்ற பிற சமயங்களுக்கும் பல உதவிகளைச் செய்து சமய ஒருமைப்பாட்டை வளர்த்துள்ளனர்.



# 14

# தஞ்சாவூர்ப் பெரிய கோயிலும் மராத்திய மன்னர்களும்*

முதலாம் இராசராச சோழனால் கட்டப்பெற்ற இராஜராஜேச்சரம் எனும் பெருவுடையார் கோயிலுக்குத் தஞ்சாவூர் மராத்திய மன்னர்கள் பல்வேறு திருப்பணிகளும் அறக்கொடைகளும் செய்துள்ளனர். இவற்றை இக்கோயிலிலுள்ள கல்வெட்டுகள் மற்றும் செப்பேடுகள், இலக்கியங்கள், மோடி ஆவணங்கள், ஓவியங்கள் போன்றவற்றின் மூலம் காணமுடிகின்றன. இவற்றைத் தரவுகளாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது.

## திருக்குடமுழுக்கு

முதலாம் சரபோஜி மன்னர் காலத்தில் 1729இல் திருக்குட முழுக்கு நடைபெற்றுள்ளது. அப்போது விமானத்தின் உச்சியில் ஒரு கலசம் புதிதாக வைக்கப்பெற்றது.

> "ஜில்காத் தேதி 3இல் மகா கும்பாபிஷேகம் மண்டலாபிஷேகம் ஆகியவற்றுக்கு 2586 சக்கரம் 2½ பணம் செலவாயிற்று"

எனும் ஆவணத்தின் மூலம் இரண்டாம் சரபோஜி மன்னர் காலத்தில் 1801இல் அஷ்டோத்தர (108) சதலிங்கங்கள் அமைக்கப்பெற்றுக் குடமுழுக்கு நடத்தப்பட்டதை அறியமுடிகிறது. அதேபோன்று

> "ஸ்ரீ பிரஹதீஸ்வர ஸ்வாமி கோவிலில் அஸ்டபந்தனம் கும்பாபிஷேகத்திற்காக ஸ்ரீ பிள்ளையாருக்குச் சக்ரம் 200, 133 லிங்கங்களுக்குச் சக்ரம் 200, ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமிக்கும் சண்டிகேசுவரருக்கும் - 150"

என்ற குறிப்பின் மூலம் 1803இல் குடமுழுக்கு நடத்தப்பட்டதை அறியமுடிகிறது.

---

* தமிழ்ப்பொழில் திங்கள் இதழ் கரந்தைத் தமிழ்ச் சங்கம், கரந்தை, ஆகஸ்டு 1997, பக். 122–128.

"ஸ்ரீ பிரஹதீஸ்வர ஸ்வாமிக்குக் கும்பாபிஷேகத்திற்காக கல்லு சாமான்கள் உரல் 5, அம்மி 5, குழவி 5, கடப்பாரை 5, கிளிஞ்சல் சுண்ணாம்பு 10 கலம்"

எனும் மோடி ஆவணத்தின் மூலம் 1843இல் கடைசி சிவாஜி காலத்தில் குடமுழுக்கு நடத்தப்பட்டதை அறியமுடிகிறது.

## திருப்பணிகள்

இரண்டாம் சரபோஜி மன்னர் கி.பி. 1802இல் பல்வேறு திருப்பணிகளைச் செய்துள்ளார். சுப்பிரமணியர் கோயில் கோபுரம், சுதையினால் விக்கிரகங்கள், அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியவற்றின் மேல் செங்கல் தளம் போன்றவற்றைச் செய்துள்ளார். அம்மன் சன்னதியில் கருவறை மேல் மூன்று நிலைகளிலும் அர்த்த மண்டபம், மகா மண்டபம், வைரவ மண்டபம், நந்தி மண்டபம் போன்ற ஏழு மண்டபங்களின் மீதும் செங்கல் வேலைகளைச் செய்து அவற்றின்மீது காரை பூசித் தளவரிசை அமைக்கச் செய்துள்ளார்.

மேலும் சபாபதி கோயில் மண்டபங்கள், சண்டிகேசுவரர் கருவறை, மடப்பள்ளி மண்டபம், திருமாளிகைப்பத்தி, தேவி கோயில் பிரகாரம் போன்றவற்றில் செங்கல் தளவரிசை முதலான பல திருப்பணிகள் செய்யப்பட்டுள்ளன.

## சிவலிங்கங்கள்

இரண்டாம் சரபோஜி மன்னர் 1801இல் விநாயகர் கோயிலின் பின்புறமுள்ள திருமாளிகைப்பத்தியில் 108 சிறிய சிவலிங்கங்களைப் பிரதிஷ்டை செய்தார். நரசிங்கம்பேட்டை, அம்மாப்பேட்டை, உடையூர், நாதன்கோயில், வீரசிங்கம்பேட்டை முதலிய ஊர்களில் இருந்த சிவலிங்கங்கள் பலவற்றையும் அகழ்ந்தெடுத்துக் கொண்டு வந்து தஞ்சாவூர்ப் பெரிய கோயிலில் அமைத்தார். மேலும் நாள்தோறும் இச்சிவலிங்கங்களுக்கு வழிபாடு செய்வதற்காக அறக்கட்டளையும் நிறுவினார் என்பதைப் பல மோடி ஆவணங்களின் மூலம் காணமுடிகின்றன.

## விநாயகர் கோயில்

பெரிய கோயிலிலுள்ள விநாயகர் கோயிலின் வாயிற்படிக் கட்டில் உள்ள மராத்தி மொழிக் கல்வெட்டில்,

"சரபோஜி மகாராஜா சாலிவாகன சகாப்தம் 1723இல் துர்மதி

> ஆண்டு வைகாசி மாதம் 3ஆம் தேதி சுக்லபட்சம் துவிதியை வியாழக்கிழமை ரோகிணி நன்னாளில் புதிதாகக் கட்டி முடித்தார்"

என்றுள்ளது. இது கி.பி. 1801ஆம் ஆண்டு நிகழ்ந்ததாகும். முற்றிலும் மராத்தியர் காலக் கோயிற் கலைப்பாணியில் இதன் அமைப்பு உள்ளது.

## அறக்கொடைகள்

கி.பி. 1779ஆம் ஆண்டில் அம்மனுக்கு வெள்ளிக்கவசம் செய்யப்பட்டுள்ளது. அதன்பின்னர் இரண்டாம் சரபோஜி மன்னர் 1799ஆம் ஆண்டில் இக்கோயிலுக்குப் பலவகையான நகைகள், பாத்திரங்கள் போன்றவற்றைக் கொடுத்துள்ளார். அவை வருமாறு : மகர குண்டலங்கள், கைக்குக் கங்கணங்கள், விரலுக்கு மோதிரங்கள், கைக்குத் தாமரை போன்ற பூக்கள், பாடகம், குஜராத்திக் கொலுசு, தோடா, பூதகை, மெட்டிகள் போன்ற கால் நகைகள், ஒட்டியாணம், சூரியன், சந்திரன் போன்ற தலை நகைகள், தொங்கட்டான், நெற்றிச்சுட்டி, வகிடு நகைகள், பதக்கம், சந்திராமலை, மணிக்கட்டு நகை, நெற்றிப்பொட்டு, நெற்றியில் கட்டும் பிற அணிகள், மூக்குத்தி, சங்கிலி மோதிரம், சடை அணிகலன்கள், 108 சிறிய சிவலிங்கங்கள், வெள்ளிக்கம்பியில் கோத்த தாலி, கற்பூரத்தட்டு, தூப ஆரத்தி, ஐந்து ஆரத்தி, வெள்ளி இடபமும் கைப்பிடியுடனும் கூடிய மணி, சங்கு, காளாஞ்சி, கைப்பிடி வைத்த ஆரத்தித்தட்டு.

மேலும் இரண்டாம் சரபோஜி மன்னர் 1826இல் தங்கத்தினாலான விருஷ வாகனத்தைச் செய்து கொடுத்துள்ளார். 1829இல் அரண்மனையிலிருந்து கிறாம்பினால் செய்யப்பட்ட விசிறி ஒன்றும் கொடுக்கப்பட்டுள்ளது.

காமாட்சியம்பாபாயி சாகேப் 1884இல் வெள்ளித்தகடு போர்த்தப்பெற்ற காளை வாகனத்தை அளித்துள்ளார். மேலும் மாமன்னன் இராசராசனால் செய்தளிக்கப்பெற்ற நடராசர் திருமேனியைப் பழுது பார்ப்பதற்கும் இவர் ஆவன செய்துள்ளதைச் செப்பேட்டின் மூலம் அறியமுடிகிறது.

## நந்தி

பெரியகோயிலில் 12 அடி உயரமுள்ள மிகப்பெரிய நந்தி உள்ளது. இந்நந்திக்கு நாள்தோறும் திருமுழுக்கு வழிபாடு செய்வதற்காகவும் மன்னர்கள் பல அறக்கொடைகளை நல்கியுள்ளனர். இதற்கு மழை பெய்வதற்காகச் சிறப்பு வழிபாடு செய்யப்பட்டதையும்

மிளகு திருமுழுக்கு செய்யப்பட்டதையும் மோடி ஆவணங்கள் மூலம் அறியமுடிகின்றன.

கி.பி.1836ஆம் ஆண்டு ஆவணத்தில்,

"ஒரு பாதரியும் சில துரைகளும் வேடிக்கை பார்க்க பகல் 4 மணிக்கு வரப்போவதால் ஆயுதசாலையிலுள்ள மூர்த்தியைத் திறந்து வைக்கிறது. புலி மகாலில் ஜாக்கிரதை செய்கிறது. பூத பீரங்கியைப் பார்க்க வரும்பொழுது அங்குள்ள காவல்காரன் தடை செய்யாமலிருக்கும்படி சொல்லுகிறது. பெரியகோவில் நந்தியைப் பார்க்க வருவதால் ஜாக்கிரதை செய்கிறது"

என்று காணப்படுகிறது. இதிலிருந்து அக்காலத்தில் ஆங்கிலேய அதிகாரிகள் போன்றோர் இக்கோயிலுக்கு வேடிக்கை பார்க்க வந்ததையும், அவ்வாறு வரும்பொழுது செய்யவேண்டிய முன்னேற்பாடுகளையும் அறியமுடிகின்றன.

## பணியாளர்களும் கலைஞர்களும்

கோயிலில் பணியாளர்களும், இசை நாட்டியக் கலைஞர்களும், ஓதுவார்களும், வேதம் ஓதுபவர்களும் நியமிக்கப் பெற்றதைப் பல மோடி ஆவணங்களில் காணமுடிகின்றன. இவர்களுக்குத் திங்கள்தோறும் ஊதியம் கொடுக்கப்பட்டுள்ளது. இவர்கள் தங்களுக்கிருந்த தொல்லைகளை மன்னர்களிடம் விண்ணப்பித்த பல மனுக்கள் பற்றிய செய்திகளையும் அறிய முடிகின்றன.

## ஓவியங்கள்

இரண்டாம் சரபோஜி மன்னர் கோயில் திருப்பணி செய்து திருக்குடமுழுக்குச் செய்வித்த காலத்தில் அம்மன் கோயில் முன்மண்டப மேல்விதானத்தில் மகிடாசுரன், சும்ப நிசும்பர்களைத் தேவி அழித்த காட்சிகளைப் பல வண்ண ஓவியங்களாக வரையச் செய்துள்ளார். தொடர்கதை ஓவியமாகக் காணப்படும் இதில் கதைப்பகுதிகள் தமிழில் எழுதப்பட்டுள்ளன. இவற்றில் தேவியும் மகிடாசுரனும் மராத்திய மன்னர் அரசிருக்கையில் அமர்ந்திருப்பதைப் போலத் திண்டுடன் கூடிய இருக்கையில் அமர்ந்துள்ளனர்.

கடைசி சிவாஜி மன்னர் 1843இல் திருக்குடமுழுக்குச் செய்த காலத்தில் பெரிய கோயில் திருச்சுற்று மண்டபத்தின் உட்புறத்தில் 64

திருவிளையாடற் புராணக் காட்சிகளையும்; சுப்பிரமணியர் கோயில் உற்சவ மண்டபத்தில் மராத்திய மன்னர்கள், அரசியர்கள் ஆகியோரது உருவங்களையும் வரையச் செய்துள்ளார். முதலாம் ஏகோஜி, ஆதி சிவாஜி, இரண்டாம் துளஜா, பிரதாபசிம்மர், துக்கோஜி, கடைசி சிவாஜி, எமுனாம்பாபாய், சுஜான்பாய் ஆகியோராவர். இவற்றில் ஆடை, அணிகலன்கள், போர்க் கருவிகள் போன்றவற்றைக் காணமுடிகின்றன. சிவப்பு, மஞ்சள், நீலம், கருப்பு, வெள்ளை ஆகிய வண்ணங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. சிலவிடங்களில் கவனமாகப் பசை ஒட்டப்பட்டு அதன் மேல் தங்க இழைகள் பதிக்கப்பட்டு அழகுபடுத்தப்பட்டுள்ளன.

## திருவிழாக்கள்

இளவேனிற் காலத்தில் ஆண்டுதோறும் சித்திரைத்திங்களில் இடபக் கொடி ஏற்றப்பெற்றுத் திருவிழா நடத்தப்படுகிறது. இத்திருவிழா நடைபெறும் நாட்களில் சுவாமி நாள்தோறும் திருவீதி உலா எழுந்தருளுவதுண்டு. 1811ஆம் ஆண்டில் சுவாமி பூதவாகனத் திலும், யானை வாகனத்திலும், காளை வாகனத்திலும் திருவீதி உலா வந்ததை மோடி ஆவணம் கூறுகிறது.

தஞ்சாவூர் அரண்மனையிலிருந்து 1814ஆம் ஆண்டில் நிகழ்ந்த கொடியேற்றத்தின் பொழுது புன்னை மரங்கள், நல்லெண்ணெய், குங்கிலியம், தேங்காய் போன்ற பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் வழிபாடு செய்யும் பிராமணர்களுக்கு 1 அணா வீதம் 1,000 பேர்களுக்கு 62½ சக்கரம் அரண்மனையிலிருந்து 1827ஆம் ஆண்டில் கொடுக்கப்பட்டுள்ளது.

இறைவன் திருவீதி உலா வரும்பொழுது திருநந்திதேவர், சண்டேசர், சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், வரகுணதேவர், குலோத்துங்கச் சோழர், சேரமான் பெருமாள், வேத மோதும் வேதியர், தேவாரம் பாடும் ஓதுவார், ஸ்தானிகர், திருத்தொண்டு செய்யும் பலவகைக் கூட்டத்தார் போன்றோர் புடை சூழ்ந்து உடன் வருகின்றனர்.

விநாயகர், முருகன், பிரமன், திருமால் ஆகியோர் தங்களுக்குரிய வாகனங்களில் ஏறிப் பெருமானுடன் வருகின்றனர். இவற்றைக் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் தாமியற்றிய தஞ்சைப் பெருவுடையாருலாவில் விரிவாக எடுத்துக் கூறியுள்ளார். இரண்டாம் சரபோஜி மன்னர் காலத்தில் பெரிய கோயிலில் நிகழ்ந்த

திருவிழா நிகழ்ச்சிகளையே சிவக்கொழுந்து தேசிகர் இவ்வுலாவில் கூறுகின்றார் எனலாம்.

திருவிழா முடிவில் சுவாமிக்கு நீராட்டு விழா எனப்பெறும் தீர்த்தவாரி நடைபெற்றதை 1811ஆம் ஆண்டு ஆவணம் கூறுகிறது

ஆடித்திங்கள் உத்திர நட்சத்திர நாளில் 1786ஆம் ஆண்டில் பெரிய கோயிலில் திருவிழா நடந்துள்ளதை ஓராவணம் கூறுகிறது

## தேர்த் திருவிழா

தஞ்சாவூர்ப் பெரிய கோயிலில் சித்திரைத் திங்களில் நிகழும் திருவிழாக்களில் தேர்த் திருவிழாவும் ஒன்றாகும். இவ்விழா மிகச்சிறப்புடன் அந்நாளில் நடத்தப்பெற்றதை அறியமுடிகிறது. இதற்காகத் தஞ்சாவூர் மராத்திய மன்னர்கள் பெருமளவில் அறக்கொடைகள் நல்கியுள்ளனர். மாலை நேரத்திலேயே தேர்த் திருவிழா நடந்திருப்பதாக 1818ஆம் ஆண்டு ஆவணம் கூறுகிறது தேர்ச் சக்கரம் பழுது பார்த்த வகையில் 500 சக்கரம் 1801இல் செலவு செய்யப்பட்டுள்ளது. மேலும் தேர்த் திருநாளுக்காக 1801இலும் 1811இலும் 3,150 சக்கரம் செலவு செய்யப்பட்டுள்ளதாக ஆவணங்கள் கூறுகின்றன. 1776ஆம் ஆண்டில் பெரிய கோவில் தேரிழுக்க 3,070 பேர்கள் என்ற குறிப்பின் மூலமும் தேர்த் திருவிழா அந்நாளில் சிறப்பாக நடத்தப் பெற்றதை அறியமுடிகிறது.

## பிற திருவிழாக்கள்

பெரிய கோயிலில் சிவன்ராத்திரி சிறப்பாக நடந்துள்ளதை 1821ஆம் ஆண்டு ஆவணம் கூறுகிறது. பெரிய கோயிலில் உள்ள முருகன் கோயிலில் கந்தசஷ்டி விழா சிறப்பாக நடந்துள்ளதை 1813ஆம் ஆண்டு ஆவணம் கூறுகிறது. ஐப்பசித் திங்களில் நடந்த இவ்விழாவின்போது முருகப்பெருமான் நான்கு வீதிகளிலும் திருவீதி உலா வந்துள்ளார்

## வழிபாடுகள்

பல வழிபாடுகள் பெரிய கோயிலில் நடந்து வருகின்றன வில்வம், தாமரைப் பூக்கள், எருக்கம் பூக்கள், மல்லிகைப் பூக்கள் போன்றவை ஒரு இலட்சம் என்ற அளவில் சுவாமிக்கு அர்ச்சனை செய்யப்பட்டுள்ளது. இவற்றை முக்தாபாய், அகல்யாபாயி சாகேப் போன்ற தஞ்சாவூர் மராத்திய அரசிகள் செய்துள்ளனர் மேலும் பொங்கலுக்காக எள்ளுருண்டை நிவேதனம் செய்வதற்காக 1837ஆம்

ஆண்டில் கொட்டியத்திலிருந்து எள்ளும் வெல்லமும் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. 1801ஆம் ஆண்டில் முக்தாபாய் ஒரு இலட்சம் விளக்குகளை ஏற்றியுள்ளார். 1813ஆம் ஆண்டு ஐப்பசித்திங்கள் முழுமதி நாளில் அன்னாபிஷேகத்திற்காக அரண்மனையிலிருந்து 15 கலம் சம்பா அரிசி கொடுக்கப்பட்டுள்ளது. உடல்நலம் குன்றியிருந்த காலத்தில் பெரிய கோயில் ஜ்வரஹரேஸ்வரருக்குத் திருமுழுக்கு வழிபாடு செய்யும் வழக்கமும் இருந்துள்ளது.

## முடிவுரை

தஞ்சாவூர்ப் பெரிய கோயிலுக்கு மராத்திய மன்னர்களும் அரசியர்களும் பல்வேறு திருப்பணிகள் செய்துள்ளமையைக் காணும்பொழுது அவர்கள் சைவ சமயத்தின்மீது வைத்துள்ள பற்றையும் ஆழ்ந்த ஈடுபாட்டையும் அறியலாம். சமய வரலாற்றில் மராத்திய மன்னர்களின் பணிகள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இக்கோயிலில் பரம்பரை அறங்காவலர்களாகத் தஞ்சாவூர் மராத்திய அரச குடும்பதைச் சேர்ந்தவர்களே இருந்து வருவதும் இவண் குறிப்பிடத்தகும்.

# 15

# தஞ்சைப் பெரியகோயிலில் புராண ஓவியங்கள்*

தமிழ்நாட்டின் நெற்களஞ்சியமாகவும், கலைகளின் தாயகமாகவும் திகழும் தஞ்சைப் பெரிய கோயிலில் சோழர், நாயக்கர், மராத்தியர் ஆகிய மூன்று மன்னர் காலத்தைச் சார்ந்த ஓவியங்கள் உள்ளன. மாடக்கோயில் வகையைச் சார்ந்த இப்பெரிய கோயிலில் எழுந்தருளி இருக்கும் இறைவன் பிரகதீசுவரர்; இறைவி பிரகந்நாயகி என்ற பெரியநாயகி ஆவர். இக்கோயில் கருவறையை ஒட்டியுள்ள உள்திருச்சுற்றில் காணப்பெறும் ஓவியங்களை 1930இல் அண்ணாமலைப் பல்கலைக்கழக வரலாற்றுத்துறைப் பேராசிரியர் ச.க. கோவிந்தசாமிப் பிள்ளை கண்டு பிடித்துள்ளார்.[1] அதற்கு முன்புவரை இந்த ஓவியங்களைத் தஞ்சை நாயக்க மன்னர் காலத்தில் தீட்டப்பெற்ற ஓவியங்கள் மறைத்துக் கொண்டிருந்திருக்கின்றன. இக்கோயிலில் காணப்படும் ஓவியங்களுள் பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், தேவி மகாத்மியம் ஆகிய புராண ஓவியங்களைப் பற்றி இக்கட்டுரை ஆராய்கிறது.

## பெரியபுராணம்

சேக்கிழார் அருளிய பெரியபுராணக் காப்பியத்தின் தலைவராகச் சுந்தரமூர்த்தி நாயனார் விளங்குகிறார். இவரைச் சிவபெருமான் திருவெண்ணெய் நல்லூரில் தடுத்தாட்கொண்ட வரலாற்றையும், சுந்தரர் திருவஞ்சைக்களத்திலிருந்து கயிலை செல்லும் காட்சியையும், கயிலை நாதனோடு ஆடலும் பாடலும் கண்டு மகிழும் காட்சியையும் இக்கோயிலில் ஓவியமாக வரைந்திருப்பதைக் காணமுடிகின்றன.

கோயில் கருவறையை ஒட்டியுள்ள உள்திருச்சுற்றில் காணப்படும் சோழர் காலத்தைச் சேர்ந்த பல ஓவியங்கள் இப் பெரியபுராணக் காட்சி ஓவியங்களுள் அடங்கும்.

---

* தினமணி நாளிதழ் திருச்சிராப்பள்ளி, 09-06-1997.

1. க. சிவராமமூர்த்தி, (தமிழாக்கம்) பே.க. இராமசுவாமி, இந்திய ஓவியம் ப. 77.

சிவபிரான் கிழவேதியராகத் திருமண மண்டபத்தில் தோன்றுகின்றார். நெற்றியில் தூய்மையான திருவெண்ணீறு, காதில் கண்டிகைக்குழை, ஒளியும் அழகும் பொருந்திய மார்பில் பூணூல், தோளில் மேலாடையுடன் ஒருகையில் தாழங்குடையையும், மற்றொரு கையில் பனை ஓலையையும் கொண்டு அவையோருக்குக் காட்டியவண்ணம் நின்று கொண்டிருக்கின்றார். அந்த ஓலையில் 'இவை என் எழுத்து' என்ற சொற்றொடர் நுண்ணிய வடிவில் காணப்படுகிறது. இதனைச் சேக்கிழார்,

"காதிலணி கண்டிகை வடிந்தகுழை தாழச்
சோதிமணி மார்பின்அசை நூலினொடு தோளின்
மீதுபுனை உத்தரிய வெண்துகில் நுடங்க
ஆதபம் மறைக்குடை அணிக்கரம் விளங்க" (176)

என்கின்றார். மணமண்டபத்தில் மறையவர் பலர் கூடியுள்ளனர். வலப்புறத்தில் திருவெண்ணெய் நல்லூரின் திருவருட்டுறை ஆலயம் உள்ளது. அதனுள் சிலர் விரைந்து செல்கின்றனர். பலரும் பல்வேறு உணர்ச்சிகளுடன் காணப்படுகின்றனர். அவர்களின் முகங்களில் வியப்பு, ஐயம், சினம் முதலிய மாறுபட்ட உணர்ச்சிகள் காணப்படு கின்றன. மணக்கோலத்தில் சுந்தரர் நின்று கொண்டிருக்கின்றார். கீழே இடப்புறத்தில் ஆண்களும் பல்வேறு உடையணிந்த பெண்களும் திருமணத்திற்காக உணவு சமைக்கின்றனர். பெண்கள் காய்கறிகள் நறுக்கும் காட்சியும் உள்ளது. தமது திருமணத்தைத் தடுக்க வந்த முதியவரை வியப்புடன் பார்க்கும் நிலையில் சுந்தரர் காணப்படுகின்றார்.

அடுத்த காட்சியில் கிழவர் குடையையும் ஏந்திக் கொண்டு தடியை ஊன்றி ஊன்றி ஓடுகின்றார். அவரது ஓட்டத்திற்கேற்ப அவரணிந்துள்ள பூணூலும் மேலாடையும் அசைந்து சுழல்கின்றன. அவர் பின்னே சுந்தரரும் விரைகின்றார். இதற்கு மேலே சுந்தரர் திருக்கோயிலில் தேவாரம் பாடும் காட்சி உள்ளது.

மற்றொரு தொகுதியில் சுந்தரர் திருவஞ்சைக்களத்திலிருந்து வெள்ளை யானைமீது அமர்ந்து கைகளில் தாளம் தாங்கிச் செல்கின்றார். சேரமான் பெருமாள் நாயனார் அலங்கரிக்கப்பட்ட குதிரைமீது அமர்ந்து சுந்தரருக்கு முன்னால் செல்கின்றார். பின்னால் யானை மீது அமர்ந்து வரும் சுந்தரரை அவர் திரும்பிப் பார்க்கிறார். நான்கு தந்தங்களை உடைய ஐராவதயானையின் மத்தகத்தின் மீதும் முதுகின்மீதும் பூ வேலைப்பாடுடைய அணிகள், போர்வைகள் காணப்படுகின்றன. யானை செல்லும் வேகத்தை அதன் கழுத்தில்

கட்டியுள்ள மணியும், முன்னே தூக்கி நிற்கும் துதிக்கையும் காட்டுகின்றன. வேகமாகப் பாய்ந்து பறந்து செல்லும் நிலையில் தலையை அசைத்து அசைத்துச் செல்வது போல் குதிரையின் ஓவியம் வரையப்பட்டுள்ளது. மேலே வானவீதியில் தேவர்கள் ஆடியும், பாடியும் இவர்களை வரவேற்கின்றனர். கீழே மீன்கள், நண்டுகள், சிப்பிகள் போன்றவை நிரம்பிய அலைகடல் காட்சியளிக்கிறது.

இந்த ஓவியத்தில் காணப்பெறும் புதுமைப் பண்பைக் க.த. திருநாவுக்கரசு பின்வருமாறு கூறுகின்றார்.[2]



"சுந்தரரும் சேரமானும் வான்வழியாகக் கயிலைக்குச் சென்றனர் என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார்.[3] ஆனால் இவ் வோவியத்தில் யானையும் குதிரையும் நீரில் நடந்து செல்லுகின்றன; நீரில் அலைகளும் மீன்களும் தெளிவாகத் தெரிகின்றன. இதனால் சேக்கிழாருக்கு முன் நாட்டில் சுந்தரரும் சேரமானும் கடல் வழியே கயிலாயம் சென்றனர் என்னும் கருத்தே பெருவழக்காக இருந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது."

இதற்கு மேலாகக் காணப்படும் கயிலைக் காட்சியில் சிவபெருமானும் உமையவளும் அமர்ந்திருக்கின்றனர். சிவபெருமான் புலித்தோல் மீது யோகநிலையில் இருக்கின்றார். சுந்தரரும், சேரமான் பெருமாள் நாயனாரும் அமர்ந்து பாடுகின்றனர். அருகில் பூதகணங்கள் மத்தளம், கைத்தாளம் போன்றவற்றைக் கொட்டு கின்றன. தேவமாதர் இருவர் நடனமாடுகின்றனர். கண்ணைக் கவரும் நிலையில் இக்கயிலைக் காட்சி வரையப்பட்டுள்ளது.

## திருவிளையாடற்புராணம்

மதுரையில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சோம சுந்தரக் கடவுள் நிகழ்த்திய 64 திருவிளையாடல்களையும் கூறுகின்ற பனுவல் திருவிளையாடற் புராணம் ஆகும்.

---

2. க.த. திருநாவுக்கரசு, முதலாம் இராசராச சோழன், பக். 312–313.
3. சேக்கிழார், பெரியபுராணம், வெள்ளானைச் சருக்கம்.

இக்கோயில் திருச்சுற்று மண்டபத்தின் உட்புறம் மராத்தியர் காலத்தில் திருவிளையாடற்புராணக் காட்சிகள் தொடர் ஓவியமாகப் பல வண்ணங்களில் வரையப்பட்டுள்ளன. மண்டபத்தின் உட்புறம் மேற்குப்பகுதியில் தொடங்கி வடக்குப் பகுதி வரை இவை காணப்படுகின்றன. தஞ்சை மராத்திய மன்னர் கடைசி சிவாஜி காலத்தில் (1832-1855) இவ்வோவியங்கள் வரையப்பட்டுள்ளன. தட்டை உருவங்களாகவும் உடல் பருமனாகவும் காணப்படும் இப்புராண ஓவியங்கள் சிதைந்து அழிவுற்ற நிலையில் தற்பொழுது காட்சியளிக்கின்றன. முதலில் தெய்வத் திருவுருவங்கள் வரையப் பட்டிருப்பதைக் காணமுடிகின்றன. அதன் பின்னர் மதுரைப் பொற்றாமரைக் குளத்தில் மகாலிங்க வழிபாடு செய்து அந்தணக் கொலை (பிரமகத்தி) செய்த ஒருவன் அதிலிருந்து விடுதலை பெற்ற காட்சியிலிருந்து தொடங்கி 64 காட்சிகளும் தொடர் வண்ண ஓவியங்களாக வரையப்பட்டுள்ளன.

## தேவி மகாத்மியம்

உமையவளைத் துர்க்கையாகவும் காளியாகவும் இலட்சுமி யாகவும் கலைமகளாகவும் பாவனை செய்து வழிபாடு செய்வது வழக்கம். உமையவளின் வீரச்செயல்களை விரித்துக் கூறுவது 'தேவி மகாத்மியம்' ஆகும். உமையவளின் பல்வேறு வீரச்செயல்களில் மது, கைடபர் எனும் இரு அரக்கர்கள், மகிடாசுரன் எனும் எருமைத்தலை அசுரன், சும்ப நிசும்ப அரக்கர்கள் ஆகியோரைக் கொன்ற நிகழ்ச்சிகளே சிறப்பாகக் கூறப்படுகின்றன. இவற்றுள் அம்மன் கோயில் முன்மண்டப மேல்விதானத்தில் மகிடாசுரன், சும்ப நிசும்பர்களைத் தேவி அழித்த காட்சிகள் பல வண்ண ஓவியங்களாகக் காட்சியளிக்கின்றன.

இரண்டாம் சரபோஜி மன்னர் காலத்தைச் (1798-1832) சேர்ந்த இவ்வோவியக் காட்சிகள் மண்டபத்தின் நுழைவாயிலில் தொடங்கி உள்ளே செல்லச் செல்ல வளர்ந்து அர்த்தமண்டப வாயில் வரை தொடர்கதை ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. அரக்கர்களைக் கொன்ற தேவியைத் தேவர்கள் வழிபடுவதுடன் ஓவியம் முற்றுப் பெறுகிறது. ஓவியத் தொகுதியின் கீழே கதைப்பகுதிகளை விளக்குகின்ற வகையில் அக்காலத் தமிழ் எழுத்துகளில் எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். இக்காட்சியிலிருந்து பெறப்படும் புராணக்கதை வருமாறு :

ரம்பன் எனும் அரக்கன் அக்கினியிடம் வரம் பெற்று ஒருநாள் மரத்தடியில் அமர்ந்திருந்தான். அப்பொழுது அங்கு வந்த

எருமையைக் கண்டு அதனுடன் உறவு கொண்டான். அதனால் அவ்வெருமை கருத்தரித்தது. அதிலிருந்து இந்த ரம்பன் வேறு எருமைக்கிடா அதனிடம் சேராமல் இருக்கும்படிக் காவல் காத்து வந்தபொழுது வேறொரு கிடா அதனருகில் வர ரம்பன் அதனைத் துரத்தி அதனால் குத்துண்டு இறந்தான். பிறகு ரம்பன் உடலைச் சிதையிடுகையில் எருமையும் அச்சிதையில் விழத் தொடங்குகையில் பலர் தடுத்தும் தடைபடாமல் தீயில் விழுந்தது. அப்பொழுது அதன் கருப்பத்திலிருந்து இரத்தபீசனாகிய மகிஷன் தோன்றினான். இவன் நகரத்திற்குச் சென்று பலரைச் சேனைத்தலைவராக்கிக் கொண்டு அவர்களைத் தனித்தனியாகத் தேவியிடம் போர் புரிய அனுப்பினான். அவர்கள் அனைவரும் போரில் இறந்து விட்டனர். இறுதியில் தான் மட்டும் தன் உண்மை உருவத்தை விட்டு மன்மதனை ஒத்த அழகிய உருவம் கொண்டு வந்து போரிட்டான் பின்னர்ச் சிங்க உருவமெடுத்துச் சக்தி வாகனமான சிங்கத்தை அடிக்க அது இவனை அடித்தது. பின்னர் யானை உருவம் கொண்டு தேவியுடன் போர் செய்யத் தேவியின் வடிவம் கொண்டு போர் செய்தான். தேவி இவனை வாளினால் வெட்ட அசுரன் மகிஷவடிவம் கொண்டு போர் செய்தான். தேவி சண்டிகை உருவம் கொண்டு அவனைத் துரத்திச் சக்கரத்தை அவன்மீது எறிந்து கொன்றாள். அவ்வாக்கனைக் கொன்ற காரணத்தினால் தேவி 'மகிஷாசுரமர்த்தனி' எனப் பெயர் பெற்றனள்

சும்பன், நிசும்பன் ஆகிய உடன்பிறந்த இருவரும் நான்முகனை எண்ணித் தவம் செய்து வலிமை பெற்றுத் தேவர்களை வருத்தினர் சும்பன் ஒரு காலத்தில் தனக்குத் தன் தம்பியால் இரையாகக் கொடுக்கப்பெற்ற பிரத்யும்நன் என்பவனை ஆகாய வழியாக நெடுந்தூரம் கிளப்பி ஆகாயத்திலேயே விட்டு விடுகிறான். இவன் இறையருளால் சும்பன் பட்டணத்தில் ஒரு மலையை அடைகிறான். அம்மலையிலிருந்த உத்யான வனத்திலிருந்த சும்பன் மகள் இலட்சுமியைக் காந்தருவமணம் செய்து கொண்டான். இதையறிந்த சும்பன் இருவரையும் வஜ்ரபஞ்சரத்தில் காவலிடப் பிரத்யும்நன், தேவியை நினைத்து வழிபடுகிறான். தேவி ஒரு கிளி உருவத்தில் உள்ளே சென்று பஞ்சரத்தை உடைத்தெறிகிறாள். இதையறிந்த சும்ப நிசும்பர் ஆகிய இருவரும் தேவியுடன் போர் செய்ய வருகின்றனர். தேவியின் அழகைக் கண்டு அவள்மீது காமம் கொண்டு இருவரும் ஒருவருடன் ஒருவர் போர் செய்து மடிகின்றனர். சும்ப நிசும்பர்களை அழித்த காரணத்தினால் தேவி 'சும்ப நிசும்பசூதனி' என அழைக்கப் பெறலாயினர்.

இந்த ஓவியக்காட்சித் தொகுதியில் தேவி, மகிஷாசுரன்

ஆகிய இருவரும் மராத்திய மன்னர் அரசிருக்கையில் அமர்ந்திருப்பதைப் போலத் திண்டுடன் கூடிய இருக்கையில் அமர்ந்துள்ளனர்.

புராண ஓவியங்கள் தவிரக் கடவுளர்களின் திருமணக் காட்சிகள், அரசர் அரசியர் உருவங்கள், ஆடல் மகளிர் போன்ற பலவற்றை வரையச் செய்துள்ளனர். இவற்றில் அக்கால மக்களின் பண்பாடு, பழக்க வழக்கங்கள், ஆடை அணிகலன்கள் போன்றவற்றை அறியமுடிகின்றன. ஓவியம், சிற்பம் போன்ற கலைச் செல்வங்கள் சிறந்து விளங்கும் கோயிலாகப் பெரிய கோயில் இன்றும் என்றும் திகழ்ந்து வருவது தமிழகத்திற்குப் பெருமை தருவதாகும்.